1. **அகர முதல எழுத்தெல்லாம் : ஆதி**
**பகவன் முதற்றே உலகு.**

எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. அதுபோல் உலகம் கடவுளை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது. 1

2. **கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்.**

தூய அறிவு வடிவாக விளங்கும் இறைவனுடைய நல்ல திருவடிகளைத் தொழாமல் இருப்பாரானால், அவர் கற்ற கல்வியினால் ஆகிய பயன் என்ன? 2

3. **மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார்.**

அன்பரின் அகமாகிய மலரில் வீற்றிருக்கும் கடவுளின் சிறந்த திருவடிகளை இடைவிடாமல் நினைக்கின்றவர் இன்ப உலகில் நிலைத்து வாழ்வார். 3

4. **வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல.**

விருப்பு வெறுப்பு இல்லாத கடவுளின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்க்கு எப்போதும் எவ்விடத்திலும் துன்பம் இல்லை. 4

5. **இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.**

கடவுளின் உண்மைப் புகழை விரும்பி அன்பு செலுத்துகின்றவரிடம், அறியாமையால் விளையும் இருவகை வினையும் சேர்வதில்லை. 5

6. **பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ் வார்.**

ஐம்பொறி வாயிலாகப் பிறக்கும் வேட்கைகளை அவித்த இறைவனுடைய பொய்யற்ற ஒழுக்க நெறியில் நின்றவர், நிலை பெற்ற நல்வாழ்க்கை வாழ்வர். 6

7. **தனக்குஉவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்**
**மனக்கவலை மாற்றல் அரிது**.

தனக்கு ஒப்புமை இல்லாத தலைவனுடைய திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்க்கு அல்லாமல், மற்றவர்க்கு மனக்கவலையை மாற்ற முடியாது. 7

8. **அறஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்**
**பிறஆழி நீந்தல் அரிது**.

அறக்கடலாக விளங்கும் கடவுளின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்க்கு அல்லாமல், மற்றவர் பொருளும் இன்பமுமாகிய மற்றக் கடல்களைக் கடக்க முடியாது. 8

9. **கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை**.

கேட்காத செவி பார்க்காத கண் முதலியனபோல் எண் குணங்களை உடைய கடவுளின் திருவடிகளை வணங்காதவரின் தலைகள் பயனற்றவைகளாம். 9

10. **பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்**.

இறைவனுடைய திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர் பிறவியாகிய பெரிய கடலைக் கடக்க முடியும்; மற்றவர் கடக்க முடியாது. 10

1. **வான்நின்று உலகம் வழங்கி வருதலால்**
**தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று**.

மழை பெய்ய உலகம் வாழ்ந்துவருவதால், மழையானது உலகத்து வாழும் உயிர்களுக்கு அமிழ்தம் என்று உணரத் தக்கதாகும். 11

2. **துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்**
**துப்பாய தூஉம் மழை**.

உண்பவர்க்குத் தக்க உணவுப் பொருள்களை விளைவித்துத் தருவதோடு, பருகுவார்க்குத் தானும் ஓர் உணவாக இருப்பது மழையாகும். 12

3. **விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து**
**உள்நின்று உடற்றும் பசி**.

மழை பெய்யாமல் பொய்படுமானால், கடல் சூழ்ந்த அகன்ற உலகமாக இருந்தும் பசி உள்ளே நிலைத்து நின்று உயிர்களை வருத்தும். 13

4. **ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்**
**வாரி வளங்குன்றிக் கால்**.

மழை என்னும் வருவாய் வளம் குன்றிவிட்டால், (உணவுப் பொருள்களை உண்டாக்கும்) உழவரும் ஏர்கொண்டு உழ மாட்டார். 14

5. **கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற்று ஆங்கே**
**எடுப்பதூஉம் எல்லாம் மழை**.

பெய்யாமல் வாழ்வைக் கெடுக்க வல்லதும் மழை; மழையில்லாமல் வளம் கெட்டு நொந்தவர்க்குத் துணையாய் அவ்வாறே காக்க வல்லதும் மழையாகும். 15

6. **விசும்பின் துளிவீழின் அல்லால்மற்று ஆங்கே**
**பசும்புல் தலைகாண்பு அரிது**.

வானத்திலிருந்து மழைத்துளி வீழ்ந்தால் அல்லாமல், உலகத்தில் ஓரறிவுயிராகிய பசும்புல்லின் தலையையும் காண முடியாது. 16

7. **நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்துஎழிலி**
**தான்நல்கா தாகி விடின்**.

மேகம் கடலிலிருந்து நீரைக் கொண்டு அதனிடத்திலே பெய்யாமல் விடுமானால், பெரிய கடலும் தன் வளம் குன்றிப் போகும். 17

8. **சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு**.

மழை பெய்யாமல் போகுமானால் இவ்வுலகத்தில் வானோர்க்காக நடக்கும் திருவிழாவும் நடைபெறாது; நாள் வழிபாடும் நடைபெறாது. 18

9. **தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்**
**வானம் வழங்காது எனின்**.

மழை பெய்யவில்லையானால், இந்தப் பெரிய உலகத்தில் பிறர்பொருட்டுச் செய்யும் தானமும், தம் பொருட்டுச் செய்யும் தவமும் இல்லையாகும். 19

10. **நீர்இன்று அமையாது உலகுஎனின் யார்யார்க்கும்**
**வான்இன்று அமையாது ஒழுக்கு**.

எப்படிப்பட்டவர்க்கும் நீர் இல்லாமல் உலக வாழ்க்கை நடைபெறாது என்றால், மழை இல்லையானால் ஒழுக்கமும் நிலைபெறாமல் போகும். 20

1. **ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவல் துணிவு**.

ஒழுக்கத்தில் நிலைத்துநின்று பற்றுவிட்டவர்களின் பெருமையைச் சிறந்ததாகப் போற்றிக் கூறுவதே நூல்களின் துணிவாகும். 21

2. **துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று**.

பற்றுகளைத் துறந்தவர்களின் பெருமையை அளந்து கூறுதல், உலகத்தில் இதுவரையில் பிறந்து இறந்தவர்களை எண்ணிக் கணக்கிடுவதைப் போன்றது. 22

3. **இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற்று உலகு**.

பிறப்பு வீடு என்பன போல் இரண்டிரண்டாக உள்ளவைகளின் கூறுபாடுகளை ஆராய்ந்தறிந்து அறத்தை மேற்கொண்டவரின் பெருமையே உலகத்தில் உயர்ந்தது. 23

4. **உரன்என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரன்என்னும் வைப்பிற்குஓர் வித்து**.

அறிவு என்னும் கருவியினால் ஐம்பொறிகளாகிய யானைகளை அடக்கிக் காக்க வல்லவன், மேலான வீட்டிற்கு விதை போன்றவன். 24

5. **ஐந்துஅவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்**
**இந்திரனே சாலும் கரி**.

ஐந்து புலன்களாலாகும் ஆசைகளை ஒழித்தவனுடைய வல்லமைக்கு, வானுலகத்தாரின் தலைவனாகிய இந்திரனே போதுமான சான்று ஆவான். 25

6. **செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்**

செய்வதற்கு அருமையான செயல்களைச் செய்ய வல்லவரே பெரியோர். செய்வதற்கு அரிய செயல்களைச் செய்யமாட்டாதவர் சிறியோர். 26

7. **சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்**
**வகைதெரிவான் கட்டே உலகு**.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று சொல்லப்படும் ஐந்தன் வகைகளையும் ஆராய்ந்து அறிய வல்லவனுடைய அறிவில் உள்ளது உலகம். 27

8. **நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்**.

பயன் நிறைந்த மொழிகளில் வல்ல சான்றோரின் பெருமையை, உலகத்தில் அழியாமல் விளங்கும் அவர்களுடைய மறைமொழிகளே காட்டிவிடும். 28

9. **குணமென்னும் குன்றுஏறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது**.

நல்ல பண்புகளாகிய மலையின்மேல் ஏறிநின்ற பெரியோர், ஒரு கணப்பொழுதே சினம் கொள்வார் ஆயினும் அதிலிருந்து ஒருவரைக் காத்தல் அரிதாகும். 29

10. **அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுக லான்**.

எல்லா உயிர்களிடத்திலும் செம்மையான அருளை மேற்கொண்டு ஒழுகுவதால் அறவோரே அந்தணர் எனப்படுவோர் ஆவர். 30

1. **சிறப்பீனும்; செல்வமும் ஈனும்; அறத்தின்ஊஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு?**

அறம், சிறப்பையும் அளிக்கும்; செல்வத்தையும் அளிக்கும்; ஆகையால் உயிர்க்கு அத்தகைய அறத்தைவிட நன்மையானது வேறு யாது? 31

2. **அறத்தின்ஊங்கு ஆக்கமும் இல்லை; அதனை**
**மறத்தலின் ஊங்குஇல்லை கேடு**.

ஒருவருடைய வாழ்க்கைக்கு அறத்தைவிட நன்மையானதும் இல்லை; அறத்தைப் போற்றாமல் மறப்பதைவிடக் கெடுதியானதும் இல்லை. 32

3. **ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லும்வா யெல்லாஞ் செயல்**.

செய்யக்கூடிய வகையால், எக்காரணத்தாலும் விடாமல் செல்லுமிடமெல்லாம் அறச்செயலைப் போற்றிச் செய்ய வேண்டும். 33

4. **மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்துஅறன்;**
**ஆகுல நீர பிற**.

ஒருவன் தன் மனத்தில் குற்றம் இல்லாதவனாக இருக்க வேண்டும்; அறம் அவ்வளவே; மனத்தூய்மை இல்லாத மற்றவை ஆரவாரத் தன்மை உடையவை. 34

5. **அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்**.

பொறாமை, ஆசை, சினம், கடுஞ்சொல் ஆகிய இந்த நான்கு குற்றங்களுக்கும் இடங்கொடுக்காமல் அவற்றைக் கடிந்து ஒழுகுவதே அறமாகும். 35

6. **அன்றுஅறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றுஅது**
**பொன்றும்கால் பொன்றாத் துணை**.

இளைஞராக உள்ளவர் பிற்காலத்தில் பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணாமல் அறம் செய்யவேண்டும். அதுவே உடல் அழியும் காலத்தில் அழியாத் துணையாகும். 36

7. **அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை**
**பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை**.

பல்லக்கைச் சுமப்பவனும் அதன் மேலிருந்து ஊர்ந்து செல்லுவோனுமாகிய அவர்களிடையே அறத்தின் பயன் இஃது என்று கூறவேண்டா. 37

8. **வீழ்நாள் படாஅமை நன்றுஆற்றின் அஃதொருவன்**
**வாழ்நாள் வழியடைக்கும் கல்**.

ஒருவன் அறம் செய்யத் தவறிய நாள் ஏற்படாதவாறு அறத்தைச் செய்வானானால் அதுவே அவன் உடலோடு வாழும் நாள் வரும் பிறவி வழியை அடைக்கும் கல்லாகும். 38

9. **அறத்தான் வருவதே இன்பம்:மற் றெல்லாம்**
**புறத்த; புகழும் இல**.

அறநெறியில் வாழ்வதன் பயனாக வருவதே இன்பமாகும்; அறத்தோடு பொருந்தாமல் வருவன எல்லாம் இன்பம் இல்லாதவை; புகழும் இல்லாதவை. 39

10. **செயற்பாலது ஓரும் அறனே: ஒருவற்கு**
**உயற்பால தோரும் பழி**.

ஒருவன் வாழ்நாளில் முயற்சி மேற்கொண்டு செய்யத் தக்கது அறமே, செய்யாமல் காத்துக் கொள்ளத் தக்கது பழியே. 40

1. **இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்**
**நல்லாற்றின் நின்ற துணை**.

இல்லறத்தில் வாழ்பவனாகச் சொல்லப்படுகின்றவன் அறத்தின் இயல்பை உடைய மூவர்க்கும் நல்வழியில் நிலை பெற்ற துணையாவான். 41

2. **துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்**
**இல்வாழ்வான் என்பான் துணை**.

துறந்தவர்க்கும் வறியவர்க்கும் தன்னிடத்தே இறந்தவர்க்கும் இல்லறம் மேற்கொண்டு வாழ்கின்றவன் துணையாவான். 42

3. **தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்றாங்கு**
**ஐம்புலத்தாறு ஓம்பல் தலை**.

தென்புலத்தார், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐவகையிடத்தும் அறநெறி தவறாமல் போற்றுதல் சிறந்த கடமையாகும். 43

4. **பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை**
**வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்**.

பொருள் சேர்க்கும்போது பழிக்கு அஞ்சிச் சேர்த்து, செலவு செய்யும்போது பகுத்து உண்பதை மேற்கொண்டால், அவ்வாழ்க்கையின் ஒழுங்கு எப்போதும் குறைவதில்லை. 44

5. **அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**.

இல்வாழ்க்கை அன்பும் அறமும் உடையதாக விளங்குமானால், அந்த வாழ்க்கையின் பண்பும் பயனும் அதுவே ஆகும். 45

6. **அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்**
**போஒய்ப் பெறுவது எவன்?**

ஒருவன் அறநெறியில் இல்வாழ்க்கையைச் செலுத்தி வாழ்வானானால், அத்தகையவன் வேறு நெறியில் சென்று பெறத்தக்கது என்ன? 46

7. **இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
   **முயல்வாருள் எல்லாம் தலை**.

அறத்தின் இயல்போடு இல்வாழ்க்கை வாழ்கின்றவன்- வாழ முயல்கின்றவன் பல திறத்தாரிலும் மேம்பட்டு விளங்குகின்றவன் ஆவான். 47

8. **ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை**
   **நோற்பாரின் நோன்மை உடைத்து**.

மற்றவரையும் அறநெறியில் ஒழுகச் செய்து, தானும் அறம் தவறாத இல்வாழ்க்கை, தவம் செய்வாரைவிட மிக்க வல்லமை உடைய வாழ்க்கையாகும். 48

9. **அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
   **பிறன்பழிப்பது இல்லாயின் நன்று**.

அறம் என்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே ஆகும்; அதுவும் மற்றவன் பழிக்கும் குற்றம் இல்லாமல் விளங்கினால் மேலும் நன்மையாகும். 49

10. **வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்**
    **தெய்வத்துள் வைக்கப் படும்**.

உலகத்தில் வாழவேண்டிய அறநெறியில் நின்று வாழ்கின்றவன், வானுலகத்தில் உள்ள தெய்வமுறையில் வைத்து மதிக்கப்படுவான். 50

1. **மனைத்தக்க மாண்புஉடையள் ஆகித்தற் கொண்டான்**
   **வளத்தக்காள் வாழ்க்கைத் துணை**.

இல்வாழ்க்கைக்கு ஏற்ற நற்பண்பு உடையவளாகித் தன் கணவனுடைய பொருள் வளத்துக்குத் தக்க வாழ்க்கை நடத்துகின்றவளே வாழ்க்கைத் துணை ஆவாள். 51

2. **மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித்து ஆயினும் இல்.**

இல்வாழ்க்கைக்குத் தக்க நற்பண்பு மனைவியிடம் இல்லையானால். ஒருவனுடைய வாழ்க்கை வேறு எவ்வளவு சிறப்புடையதானாலும் பயன் இல்லை. 52

3. **இல்லதென் இல்லவள் மாண்பானால்; உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை?**

மனைவி நற்பண்பு உடையவளானால் வாழ்க்கையில் இல்லாதது என்ன? அவள் நற்பண்பு இல்லாதவளானால் வாழ்க்கையில் இருப்பது என்ன? 53

4. **பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மைஉண் டாகப் பெறின்?**

இல்வாழ்க்கையில் கற்பு என்னும் உறுதிநிலை இருக்கப் பெற்றால், பெண்ணைவிடப் பெருமையுடையவை வேறு என்ன இருக்கின்றன? 54

5. **தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்எனப் பெய்யும் மழை.**

வேறு தெய்வம் தொழாதவளாய்த் தன் கணவனையே தெய்வமாகக் கொண்டு தொழுது துயிலெழுகின்றவள் பெய் என்றால் மழை பெய்யும்! 55

6. **தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற**
**சொல்காத்துச் சோர்விலாள் பெண்.**

கற்புநெறியில் தன்னையும் காத்துக்கொண்டு, தன் கணவனையும் காப்பாற்றி, தகுதியமைந்த புகழையும் காத்து, உறுதி தளராமல் வாழ்கின்றவளே பெண். 56

7. **சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும்? மகளிர்**
**நிறைகாக்குங் காப்பே தலை.**

மகளிரைக் காவல் வைத்துக் காக்கும் காப்புமுறை என்ன பயனை உண்டாக்கும்? அவர்கள் நிறை என்னும் பண்பால் தம்மைத் தாம் காக்கும் காப்பே சிறந்தது. 57

8. **பெற்றால் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்**
**புத்தேளிர் வாழும் உலகு**.

கணவனைப் போற்றிக் கடமையைச் செய்யப் பெற்றால் மகளிர் பெரிய சிறப்பை உடைய மேலுலக வாழ்வைப் பெறுவர். 58

9. **புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்**
**ஏறுபோல் பீடு நடை**.

புகழைக் காக்க விரும்பும் மனைவி இல்லாதவர்க்கு, இகழ்ந்து பேசும் பகைவர்முன் காளைபோல் நடக்கும் பெருமித நடை இல்லை. 59

10. **மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு**.

மனைவியின் நற்பண்பே இல்வாழ்க்கைக்கு மங்கலம் என்று கூறுவர்; நல்ல மக்களைப் பெறுதலே அதற்கு நல்லணிகலம் என்றும் கூறுவர். 60

1. **பெறுமவற்றுள் யாம்அறிவது இல்லை அறிவுஅறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற**.

பெறத் தகுந்த பேறுகளில், அறியவேண்டியவைகளை அறியும் நன்மக்களைப் பெறுவதைத் தவிர மற்றப் பேறுகளை யாம் மதிப்பதில்லை. 61

2. **எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்**
**பண்புடை மக்கள் பெறின்**.

பழி இல்லாத நல்ல பண்பு உடைய மக்களைப் பெற்றால் ஒருவனுக்கு ஏழு பிறவியிலும் தீவினைப் பயனாகிய துன்பங்கள் சென்று சேரா. 62

3. **தம்பொருள் என்பதம் மக்கள்; அவர்பொருள்**
**தம்தம் வினையான் வரும்**.

தம் மக்களே தம்முடைய பொருள்கள் என்று அறிஞர் கூறுவர்; மக்களாகிய அவர்தம் பொருள்கள் அவரவருடைய வினையின் பயனால் வந்து சேரும். 63

4. **அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ்.**

தம்முடைய மக்களின் சிறு கைகளால் அளாவப்பெற்ற உணவு, பெற்றோர்க்கு அமிழ்தத்தைவிட மிக்க இனிமை உடையதாகும் 64

5. **மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்**
**சொல்கேட்டல் இன்பம் செவிக்கு.**

மக்களின் உடம்பைத் தொடுதல் உடம்பிற்கு இன்பம் தருவதாகும்; அம் மக்களின் மழலைச் சொற்களைக் கேட்டல் செவிக்கு இன்பம் தருவதாகும். 65

6. **குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்**
**மழலைச்சொல் கேளா தவர்.**

தம் மக்களின் மழலைச் சொல்லைக் கேட்டு அதன் இனிமையை நுகராதவரே குழலின் இசை இனியது, யாழின் இசை இனியது என்று கூறுவர். 66

7. **தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்.**

தந்தை தன் மகனுக்குச் செய்யத்தக்க நல்லுதவி, கற்றவர் கூட்டத்தில் தன் மகன் முந்தியிருக்கும்படியாக அவனைக் கல்வியில் மேம்படச் செய்தலாகும். 67

8. **தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க்கு எல்லாம் இனிது.**

தம் மக்களின் அறிவுடைமை, தமக்கு இன்பம் பயப்பதைவிட உலகத்து உயிர்களுக்கெல்லாம் மிகுந்த இன்பம் பயப்பதாகும். 68

9. **ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்**.

தன் மகனை நற்பண்பு நிறைந்தவன் எனப் பிறர் சொல்லக் கேள்வியுற்ற தாய், தான் அவனைப் பெற்ற காலத்து உற்ற மகிழ்ச்சியைவிடப் பெரிதும் மகிழ்வாள். 69

10. **மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை**
**என்நோற்றான் கொல்எனும் சொல்**.

மகன் தன் தந்தைக்குச் செய்யத்தக்க கைம்மாறு, `இவன் தந்தை இவனை மகனாகப் பெற என்ன தவம் செய்தானோ' என்று பிறர் புகழ்ந்து சொல்லும் சொல்லாகும். 70

1. **அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்? ஆர்வலர்**
**புன்கண்நீர் பூசல் தரும்**.

அன்புக்கும் அடைத்துவைக்கும் தாழ் உண்டோ? அன்புடையவரின் சிறு கண்ணீரே (உள்ளே இருக்கும் அன்பைப்) பலரும் அறிய வெளிப்படுத்திவிடும். 71

2. **அன்பிலார் எல்லாம் தமக்குரியர்: அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு**.

அன்பு இல்லாதவர் எல்லாப் பொருளையும் தமக்கே உரிமையாகக் கொண்டு வாழ்வர்; அன்பு உடையவர் தம் உடம்பையும் பிறர்க்கு உரிமையாக்கி வாழ்வர். 72

3. **அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு**
**என்போடு இயைந்த தொடர்பு**.

அருமையான உயிர்க்கு உடம்போடு பொருந்தி இருக்கின்ற உறவு, அன்போடு பொருந்தி வாழும் வாழ்க்கையின் பயன் என்று கூறுவர். 73

4. **அன்புஈனும் ஆர்வம் உடைமை: அதுஈனும்**
**நண்புஎன்னும் நாடாச் சிறப்பு**.

அன்பு, பிறரிடம் விருப்பம் உடையவராக வாழும் தன்மையைத் தரும்; அஃது எல்லோரிடத்திலும் நட்பு என்று சொல்லப்படும் அளவற்ற சிறப்பைத் தரும். 74

5. **அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து**
**இன்புற்றார் எய்தும் சிறப்பு**.

உலகத்தில் இன்பம் உற்று வாழ்கின்றவர் அடையும் சிறப்பு, அன்பு உடையவராகிப் பொருந்தி வாழும் வாழ்க்கையின் பயன் என்று கூறுவர். 75

6. **அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை**.

அறியாதவர், அறத்திற்கு மட்டுமே அன்பு துணையாகும் என்று கூறுவர்; ஆராய்ந்து பார்த்தால் வீரத்திற்கும் அதுவே துணையாக நிற்கின்றது. 76

7. **என்பு இலதனை வெயில்போலக் காயுமே**
**அன்பு இலதனை அறம்**.

எலும்பு இல்லாத உடம்போடு வாழும் புழுவை வெயில் காய்ந்து வருத்துவதுபோல், அன்பு இல்லாத உயிரை அறம் வருத்தும். 77

8. **அன்பகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரம்தளிர்த் தற்று**.

அகத்தில் அன்பு இல்லாமல் வாழும் உயிர்வாழ்க்கை வளமற்ற பாலைநிலத்தில் பட்டமரம் தளிர்த்தாற் போன்றது. 78

9. **புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாக்கை**
**அகத்துறுப்பு அன்பி லவர்க்கு**?

உடம்பின் அகத்து உறுப்பாகிய அன்பு இல்லாதவர்க்கு உடம்பின் புறத்து உறுப்புக்கள் எல்லாம் என்ன பயன் செய்யும்? 79

10. **அன்பின் வழியது உயிர்நிலை அஃதுஇலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு**.

அன்பின் வழியில் இயங்கும் உடம்பே உயிர்நின்ற உடம்பாகும்; அன்பு இல்லாதவர்க்கு உள்ள உடம்பு எலும்பைத் தோல் போர்த்த வெற்றுடம்பே ஆகும். 80

1. **இருந்துஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்துஓம்பி**
   **வேளாண்மை செய்தல் பொருட்டு**.

வீட்டில் இருந்து பொருள்களைக் காத்து இல்வாழ்க்கை நடத்துவதெல்லாம் விருந்தினரைப் போற்றி உதவிசெய்யும் பொருட்டே ஆகும். 81

2. **விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா**
   **மருந்துஎனினும் வேண்டற்பாற் றன்று**.

விருந்தினராக வந்தவர் வீட்டின் புறத்தே இருக்கத் தான் மட்டும் உண்பது சாவாமருந்தாகிய அமிழ்தமே ஆனாலும் அது விரும்பத்தக்கது அன்று. 82

3. **வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**
   **பருவந்து பாழ்படுதல் இன்று**.

தன்னை நோக்கி வரும் விருந்தினரை நாள்தோறும் போற்றுகின்றவனுடைய வாழ்க்கை, துன்பத்தால் வருந்திக் கெட்டுப் போவதில்லை. 83

4. **அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து**
   **நல்விருந்து ஓம்புவான் இல்**.

நல்ல விருந்தினராய் வந்தவரை முகமலர்ச்சி கொண்டு போற்றுகின்றவனுடைய வீட்டில் மனமகிழ்ந்து திருமகள் வாழ்வாள். 84

5. **வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்துஓம்பி**
   **மிச்சில் மிசைவான் புலம்?**

விருந்தினரை முன்னே போற்றி உணவளித்து மிஞ்சிய உணவை உண்டு வாழ்கின்றவனுடைய நிலத்தில் விதையும் விதைக்க வேண்டுமோ? 85

6. **செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்துஇருப்பான்**
**நல்விருந்து வானத் தவர்க்கு**.

வந்த விருந்தினரைப் போற்றி, இனி வரும் விருந்தினரை எதிர்பார்த்திருப்பவன், வானுலகத்தில் உள்ள தேவர்க்கும் நல்ல விருந்தினனாவான். 86

7. **இணைத்துணைத்து என்பதொன்று இல்லை: விருந்தின்**
**துணைத்துணை வேள்விப் பயன்**.

விருந்தோம்புதலாகிய வேள்வியின் பயன் இவ்வளவு என்று அளவு படுத்திக் கூறத்தக்கது அன்று; விருந்தினரின் தகுதிக்கு ஏற்ற அளவினதாகும். 87

8. **பரிந்துஓம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி**
**வேள்வி தலைப்படா தார்**.

விருந்தினரை ஓம்பி அந்த வேள்வியில் ஈடுபடாதவர், பொருள்களை வருந்திக் காத்து (பின்பு இழந்து) பற்றுக் கோடு இழந்தோமே என்று இரங்குவர். 88

9. **உடமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா**
**மடமை: மடவார்கண் உண்டு**.

செல்வ நிலையில் உள்ள வறுமை என்பது விருந்தோம்புதலைப் போற்றாத அறியாமையாகும்; அஃது அறிவிலிகளிடம் உள்ளதாகும். 89

10. **மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து**.

அனிச்சப்பூ மோந்தவுடன் வாடிவிடும்; அதுபோல் முகம் மலராமல் வேறுபட்டு நோக்கியவுடன் விருந்தினர் வாடி நிற்பர். 90

1. **இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்**
**செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்**.

அன்பு கலந்து வஞ்சம் அற்றவைகளாகிய சொற்கள், மெய்ப்பொருள் கண்டவர்களின் வாய்ச்சொற்கள் இன்சொற்களாகும். 91

2. **அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து**
**இன்சொலன் ஆகப் பெறின்**.

முகம் மலர்ந்து இன்சொல் உடையவனாக இருக்கப் பெற்றால், மனம் மகிழ்ந்து பொருள் கொடுக்கும் ஈகையைவிட நல்லதாகும். 92

3. **முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தான்ஆம்**
**இன்சொ லினதே அறம்**.

முகத்தால் விரும்பி - இனிமையுடன் நோக்கி - உள்ளம் கலந்து இன்சொற்களைக் கூறும் தன்மையில் உள்ளதே அறமாகும். 93

4. **துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்**
**இன்புறூஉம் இன்சொ லவர்க்கு**.

யாரிடத்திலும் இன்புறத்தக்க இன்சொல் வழங்குவோர்க்குத் துன்பத்தை மிகுதிப்படுத்தும் வறுமை என்பது இல்லையாகும். 94

5. **பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு**
**அணிஅல்ல மற்றுப் பிற**.

வணக்கம் உடையவனாகவும் இன்சொல் வழங்குவோனாகவும் ஆதலே ஒருவனுக்கு அணிகலனாகும், மற்றைய அணிகள் அணிகள் அல்ல. 95

6. **அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை**
**நாடி இனிய சொலின்**.

பிறர்க்கு நன்மையானவற்றை நாடி இனிமை உடைய சொற்களைச் சொல்லின், பாவங்கள் தேய்ந்து குறைய அறம் வளர்ந்து பெருகும். 96

7. **நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று**
**பண்பின் தலைப்பிரியாச் சொல்**.

பிறர்க்கு நன்மையான பயனைத் தந்து நல்ல பண்பிலிருந்து நீங்காத சொற்கள், வழங்குவோனுக்கும் இன்பம் தந்து நன்மை பயக்கும். 97

8. **சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்**
**இம்மையும் இன்பம் தரும்**.

பிறர்க்குத் துன்பம் விளைவிக்கும் சிறுமையிலிருந்து நீங்கிய இனிய சொற்கள் மறுமைக்கும் இம்மைக்கும் வழங்குவோனுக்கு இன்பம் தரும். 98

9. **இன்சொல் இனிதுஈன்றல் காண்பான் எவன்கொலோ**
**வன்சொல் வழங்கு வது**?

இனிய சொற்கள் இன்பம் பயத்தலைக் காண்கின்றவன், அவற்றிற்கு மாறான வன்சொற்களை வழங்குவது என்ன பயன் கருதியோ? 99

10. **இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று**.

இனிய சொற்கள் இருக்கும்போது அவற்றைவிட்டுக் கடுமையான சொற்களைக் கூறுதல் கனிகள் இருக்கும்போது காய்களைப் பறித்துத் தின்பதைப் போன்றது. 100

1. **செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்**
**வானகமும் ஆற்ற லரிது**.

தான் ஓர் உதவியும் முன் செய்யாதிருக்கப் பிறர் தனக்குச் செய்த உதவிக்கு மண்ணுலகையும் விண்ணுலகையும் கைம்மாறாகக் கொடுத்தாலும் ஈடு ஆக முடியாது. 101

2. **காலத்தி னால்செய்த நன்றி சிறிதுஎனினும்**
**ஞாலத்தின் மாணப் பெரிது**.

உற்ற காலத்தில் ஒருவன் செய்த உதவி சிறிதளவாக இருந்தாலும், அதன் தன்மையை ஆராய்ந்தால் உலகத்தைவிட மிகப் பெரிதாகும். 102

3. **பயன் தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்**
**நன்மை கடலிற் பெரிது**.

இன்ன பயன் கிடைக்கும் என்று ஆராயாமல் ஒருவன் செய்த உதவியின் அன்புடைமையை ஆராய்ந்தால் அதன் நன்மை கடலைவிடப் பெரிதாகும். 103

4. **தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பயன்தெரி வார்**.

ஒருவன் தினையளவாகிய உதவியைச் செய்த போதிலும் அதன் பயனை ஆராய்கின்றவர், அதனையே பனையளவாகக் கொண்டு போற்றுவர். 104

5. **உதவி வரைத்தன்று உதவி: உதவி**
**செயப்பட்டார் சால்பின் வரைத்து**.

கைம்மாறாகச் செய்யும் உதவி முன்செய்த உதவியின் அளவை உடையது அன்று; உதவி செய்யப்பட்டவரின் பண்புக்கு ஏற்ற அளவை உடையதாகும். 105

6. **மறவற்க மாசற்றார் கேண்மை: துறவற்க**
**துன்பத்துள் துப்பாயார் நட்பு**.

குற்றமற்றவரின் உறவை எப்போதும் மறத்தலாகாது, துன்பம் வந்த காலத்தில் உறுதுணையாய் உதவியவர்களின் நட்பை எப்போதும் விடலாகாது. 106

7. **எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்**
**விழுமம் துடைத்தவர் நட்பு**.

தம்முடைய துன்பத்தைப் போக்கி உதவியவரின் நட்பைப் பல்வேறு வகையான பிறவியிலும் மறவாமல் போற்றுவர் பெரியோர். 107

8. **நன்றி மறப்பது நன்றன்று: நன்றல்லது**
**அன்றே மறப்பது நன்று**.

ஒருவர் முன்செய்த நன்மையை மறப்பது அறம் அன்று; அவர் செய்த தீமையைச் செய்த அப்பொழுதே மறந்து விடுவது அறம் ஆகும். 108

9. **கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த**
**ஒன்றுநன்று உள்ளக் கெடும்.**

முன் செய்த உதவி செய்தவர் பின்பு கொன்றாற் போன்ற துன்பத்தைச் செய்தாரானாலும், அவர் முன் செய்த ஒரு நன்மையை நினைத்தாலும் அந்தத் துன்பம் கெடும். 109

10. **எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்: உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு.**

எந்த அறத்தை அழித்தவர்க்கும் தப்பிப் பிழைக்க வழி உண்டாகும்; ஒருவர் செய்த உதவியை மறந்து அழித்தவனுக்கு உய்வு இல்லை. 110

1. **தகுதி எனஒன்று நன்றே பகுதியால்**
**பாற்பட்டு ஒழுகப் பெறின்.**

அந்தந்தப் பகுதிதோறும் முறையோடு பொருந்தி ஒழுகப்பெற்றால், நடுவுநிலைமை என்று கூறப்படும் அறம் நன்மையாகும். 111

2. **செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவுஇன்றி**
**எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து.**

நடுவுநிலைமை உடையவனின் செல்வவளம் அழிவில்லாமல் அவனுடைய வழியிலுள்ளார்க்கும் உறுதியான நன்மை தருவதாகும். 112

3. **நன்றே தரினும் நடுவுஇகந்துஆம் ஆக்கத்தை**
**அன்றே ஒழிய விடல்.**

தீமை பயக்காமல் நன்மையே தருவதானாலும் நடுவுநிலைமை தவறி உண்டாகும் ஆக்கத்தை அப்போதே கைவிட வேண்டும். 113

4. **தக்கார் தகவிலர் என்பது அவரவர்**
**எச்சத்தால் காணப் படும்.**

நடுவுநிலைமை உடையவர் நடுவுநிலைமை இல்லாதவர் என்பது அவரவர்க்குப் பின் எஞ்சிநிற்கும் புகழாலும் பழியாலும் காணப்படும். 114

5. **கேடும் பெருக்கமும் இல்லல்ல: நெஞ்சத்துக்**
   **கோடாமை சான்றோர்க்கு அணி.**

கேடும் ஆக்கமும் வாழ்வில் இல்லாதவை அல்ல; ஆகையால் நெஞ்சில் நடுவுநிலைமை தவறாமல் இருத்தலே சான்றோர்க்கு அழகாகும். 115

6. **கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்**
   **நடுஒரீஇ அல்ல செயின்.**

தன் நெஞ்சம் நடுவுநிலைமை நீங்கித் தவறு செய்ய நினைக்குமாயின், `நான் கெடப்போகின்றேன்' என்று ஒருவன் அறிய வேண்டும். 116

7. **கெடுவாக வையாது உலகம் நடுவாக**
   **நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.**

நடுவுநிலையாக நின்று அறநெறியில் நிலைத்து வாழ்கின்றவன் அடைந்த வறுமை நிலையைக் கேடு என்று கொள்ளாது உலகம். 117

8. **சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்துஒருபால்**
   **கோடாமை சான்றோர்க்கு அணி.**

முன்னே தான் சமமாக இருந்து, பின்பு பொருளைச் சீர் தூக்கும் துலாக்கோல்போல் அமைந்து, ஒரு பக்கமாகச் சாயாமல் நடுவுநிலைமை போற்றுவது சான்றோர்க்கு அழகாகும். 118

9. **சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா**
   **உள்கோட்டம் இன்மை பெறின்.**

உள்ளத்தில் கோணுதல் இல்லாத தன்மையை உறுதியாகப் பெற்றால், சொல்லினும் கோணுதல் இல்லா திருத்தல் நடுவுநிலைமையாம். 119

10. **வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தமபோல் செயின்**.

பிறர் பொருளையும் தம்பொருள்போல் போற்றிச் செய்தால், அதுவே வாணிகம் செய்வோர்க்கு உரிய நல்ல வாணிக முறையாகும். 120

1. **அடக்கம் அமரருள் உய்க்கும்: அடங்காமை**
**ஆரிருள் உய்த்து விடும்**.

அடக்கம் ஒருவனை உயர்த்தித் தேவருள் சேர்க்கும்; அடக்கம் இல்லாதிருத்தல், பொல்லாத இருள் போன்ற தீய வாழ்க்கையில் செலுத்திவிடும். 121

2. **காக்க பொருளா அடக்கத்தை: ஆக்கம்**
**அதனின்ஊஉங்கு இல்லை உயிர்க்கு**.

அடக்கத்தை உறுதிப் பொருளாகக் கொண்டு போற்றிக் காக்கவேண்டும். அந்த அடக்கத்தைவிட மேம்பட்ட ஆக்கம் உயிர்க்கு இல்லை. 122

3. **செறிவுஅறிந்து சீர்மை பயக்கும் அறிவுஅறிந்து**
**ஆற்றின் அடங்கப் பெறின்**.

அறியவேண்டியவற்றை அறிந்து, நல்வழியில் அடங்கி ஒழுகப் பெற்றால், அந்த அடக்கம் நல்லோரால் அறியப்பட்டு மேன்மை பயக்கும். 123

4. **நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது**.

தன் நிலையிலிருந்து மாறுபடாமல் அடங்கி ஒழுகுவோனுடைய உயர்வு, மலையின் உயர்வைவிட மிகவும் பெரிதாகும். 124

5. **எல்லார்க்கும் நன்றுஆம் பணிதல்: அவருள்ளும்**
**செல்வர்க்கே செல்வந் தகைத்து**.

பணிவுடையராக ஒழுகுதல் பொதுவாக எல்லோர்க்கும் நல்லதாகும்; அவர்களுள் சிறப்பாகச் செல்வர்க்கே மற்றொரு செல்வம் போன்றதாகும். 125

6. **ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து**.

ஒரு பிறப்பில், ஆமைபோல் ஐம்பொறிகளையும் அடக்கியாள வல்லவனானால், அஃது அவனுக்குப் பல பிறப்பிலும் காப்பாகும் சிறப்பு உடையது. 126

7. **யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு**.

காக்க வேண்டியவற்றுள் எவற்றைக் காக்காவிட்டாலும் நாவையாவது காக்கவேண்டும்; காக்கத் தவறினால் சொற் குற்றத்தில் அகப்பட்டுத் துன்புறுவர். 127

8. **ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்**
**நன்றுஆகா தாகி விடும்**.

தீய சொற்களின் பொருளால் விளையும் தீமை ஒன்றாயினும் ஒருவனிடம் உண்டானால், அதனால் மற்ற அறங்களாலும் நன்மை விளையாமல் போகும். 128

9. **தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே**
**நாவினால் சுட்ட வடு**.

தீயினால் சுட்ட புண் புறத்தே வடு இருந்தாலும் உள்ளே ஆறிவிடும் . ஆனால் நாவினால் தீய சொல் கூறிச் சுடும் வடு என்றும் ஆறாது. 129

10. **கதம்காத்துக் கற்றுஅடங்கல் ஆற்றுவான் செவ்வி**
**அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து**.

சினம் தோன்றாமல் காத்து, கல்வி கற்று, அடக்கமுடையவனாக இருக்க வல்லவனுடைய செவ்வியை, அவனுடைய வழியில் சென்று அறம் பார்த்திருக்கும். 130

1. **ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்**.

ஒழுக்கமே எல்லோர்க்கும் மேன்மையைத் தருவதாக இருப்பதால், அந்த ஒழுக்கமே உயிரைவிடச் சிறந்ததாகப் போற்றப்படும். 131

2. **பரிந்துஓம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்துஓம்பித்**
**தேரினும் அஃதே துணை**.

ஒழுக்கத்தை வருந்தியும் போற்றிக் காக்க வேண்டும்; பலவற்றையும் ஆராய்ந்து போற்றித் தெளிந்தாலும் அந்த ஒழுக்கமே வாழ்க்கையில் துணையாக விளங்கும். 132

3. **ஒழுக்கம் உடமை குடிமை: இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்**.

ஒழுக்கம் உடையவராக வாழ்வதே உயர்ந்த குடிப்பிறப்பின் தன்மையாகும்; ஒழுக்கம் தவறுதல் இழிந்த குடிப்பிறப்பின் தன்மையாகிவிடும். 133

4. **மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்**.

கற்ற மறைப்பொருளை மறந்தாலும் மீண்டும் அதனை ஓதிக் கற்றுக் கொள்ள முடியும்; ஆனால் மறை ஓதுவானுடைய குடிப்பிறப்பு, ஒழுக்கம் குன்றினால் கெடும். 134

5. **அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று இல்லை**
**ஒழுக்கம் இலான்கண் உயர்வு**.

பொறாமை உடையவனிடத்தில் ஆக்கம் இல்லாதவாறு போல, ஒழுக்கம் இல்லாதவனுடைய வாழ்க்கையில் உயர்வு இல்லையாகும். 135

6. **ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்**
**ஏதம் படுபாக்கு அறிந்து**.

ஒழுக்கம் தவறுதலால் குற்றம் உண்டாவதை அறிந்து, மனவலிமை உடைய சான்றோர் ஒழுக்கத்தில் தவறாமல் காத்துக் கொள்வர். 136

7. **ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை: இழுக்கத்தின்**
**எய்துவர் எய்தாப் பழி**.

ஒழுக்கத்தால் எவரும் மேம்பாட்டை அடைவர்; ஒழுக்கத்திலிருந்து தவறுவதால் அடையத் தகாத பெரும் பழியை அடைவர். 137

8. **நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்: தீயொழுக்கம்**
**என்றும் இடும்பை தரும்**.

நல்லொழுக்கம் இன்பமான நல்வாழ்க்கைக்குக் காரணமாக இருக்கும்; தீயொழுக்கம் எப்போதும் துன்பத்தைக் கொடுக்கும். 138

9. **ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய**
**வழுக்கியும் வாயால் சொலல்**.

தீய சொற்களை தவறியும் தம்முடைய வாயால் சொல்லும் குற்றம், ஒழுக்கம் உடையவர்க்குப் பொருந்தாததாகும். 139

10. **உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லார் அறிவிலா தார்**.

உலகத்து உயர்ந்தவரோடு பொருந்த ஒழுகும் முறையைக் கற்காதவர், பல நூல்களைக் கற்றிருந்த போதிலும் அறிவில்லாதவரே ஆவர். 140

1. **பிறன்பொருளாள் பெட்டுஒழுகும் பேதைமை ஞாலத்து**
**அறம்பொருள் கண்டார்கண் இல்**.

பிறனுடைய உரிமையாகிய மனைவியை விரும்பி நடக்கும் அறியாமை, உலகத்தில் அறமும் பொருளும் ஆராய்ந்து கண்டவரிடம் இல்லை. 141

2. **அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை**
**நின்றாரின் பேதையார் இல்**.

அறத்தை விட்டுத் தீநெறியில் நின்றவர் எல்லாரிலும் பிறன் மனைவியை விரும்பி அவனுடைய வாயிலில் சென்று நின்றவரைப் போல் அறிவிலிகள் இல்லை. 142

3. **விளிந்தாரின் வேறுஅல்லர் மன்ற தெளிந்தாரில்**
**தீமை புரிந்துஒழுகு வார்**.

ஐயமில்லாமல் தெளிந்து நம்பியவருடைய மனைவியிடத்தே விருப்பம் கொண்டு தீமையைச் செய்து நடப்பவர், செத்தவரைவிட வேறுபட்டவர் அல்லர். 143

4. **எனைத்துணையர் ஆயினும் என்ஆம்? தினைத்துணையும்**
**தேரான் பிறனில் புகல்**.

தினையளவும் ஆராய்ந்து பார்க்காமல் பிறனுடைய மனைவியிடம் செல்லுதல், எவ்வளவு பெருமையை உடையவராயினும் என்னவாக முடியும்? 144

5. **எளிதுஎன இல்லிறப்பான் எய்தும்எஞ் ஞான்றும்**
**விளியாது நிற்கும் பழி**.

இச் செயல் எளியது என எண்ணிப் பிறனுடைய மனைவியிடம் நெறிதவறிச் செல்கின்றவன், எப்போதும் அழியாமல் நிலைநிற்கும் பழியை அடைவான். 145

6. **பகைபாவம் அச்சம் பழியென நான்கும்**
**இகவாவாம் இல்இறப்பான் கண்**.

பகை பாவம் அச்சம் பழி என்னும் இந்நான்கு குற்றங்களும் பிறன் மனைவியிடத்து நெறி தவறி நடப்பவனிடத்திலிருந்து நீங்காவாம். 146

7. **அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்**
**பெண்மை நயவா தவன்**.

அறத்தின் இயல்போடு பொருந்தி இல்வாழ்க்கை வாழ்பவன், பிறனுக்கு உரிமையானவளின் பெண் தன்மையை விரும்பாதவனே. 147

8. **பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு**
**அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு**.

பிறனுடைய மனைவியை விரும்பி நோக்காத பெரிய ஆண்மை, சான்றோர்க்கு அறம் மட்டும் அன்று; நிறைந்த ஒழுக்கமுமாகும். 148

9. **நலக்குஉரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்**
**பிறற்குஉரியாள் தோள்தோயா தார்**.

கடல் சூழ்ந்த உலகத்தில் நன்மைக்கு உரியவர் யார் என்றால் பிறனுக்கு உரிமையானவளின் தோளைப் பொருந்தாதவரே ஆவர். 149

10. **அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்**
**பெண்மை நயவாமை நன்று**.

ஒருவன் அறநெறியில் நிற்காமல் அறமில்லாதவைகளைச் செய்தாலும், பிறனுக்கு உரியவளின் பெண்மையை விரும்பாமல் வாழ்தல் நல்லது. 150

1. **அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை**.

தன்னை வெட்டுவோரையும் விழாமல் தாங்குகின்ற நிலம்போல், தம்மை இகழ்வாரையும் பொறுப்பதே தலையான பண்பாகும். 151

2. **பொறுத்தல் இறப்பினை என்றும்**: **அதனை**
**மறத்தல் அதனினும் நன்று**.

வரம்பு கடந்து பிறர் செய்த தீங்கை எப்போதும் பொறுக்க வேண்டும். அத்தீங்கை நினைவிலும் கொள்ளாமல் மறந்துவிடுதல் பொறுத்தலைவிட நல்லது. 152

3. **இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்**
**வன்மை மடவார்ப் பொறை**.

வறுமையுள் வறுமை, விருந்தினரைப் போற்றாமல் நீக்குதல்; வல்லமையுள் வல்லமை என்பது அறிவிலார் தீங்கு செய்தலைப் பொறுத்தலாகும். 153

4. **நிறையுடமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை**
**போற்றி ஒழுகப் படும்**.

நிறை உடையவனாக இருக்கும் தன்மை தன்னை விட்டு நீங்காமலிருக்க வேண்டினால், பொறுமையைப் போற்றி ஒழுக வேண்டும். 154

5. **ஒறுத்தாரை ஒன்றாக வையாரே: வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து**.

(தீங்கு செய்தவரைப்) பொறுக்காமல் வருத்தினவரை உலகத்தார் ஒரு பொருளாக மதியார்; ஆனால் பொறுத்தவரைப் பொன்போல் மனத்துள் வைத்து மதிப்பர். 155

6. **ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றும் துணையும் புகழ்**.

தீங்கு செய்தவரைப் பொறுக்காமல் வருத்தினவர்க்கு ஒருநாள் இன்பமே; பொறுத்தவர்க்கு உலகம் அழியும் வரைக்கும் புகழ் உண்டு. 156

7. **திறன்அல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து**
**அறன்அல்ல செய்யாமை நன்று**.

தகுதி அல்லாதவைகளைத் தனக்குப் பிறர் செய்த போதிலும், அதனால் அவர்க்கு வரும் துன்பத்திற்காக நொந்து அறம் அல்லாதவற்றைச் செய்யாதிருத்தல் நல்லது. 157

8. **மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்**
**தகுதியான் வென்று விடல்**.

செருக்கினால் தீங்கானவற்றைச் செய்தவரைத் தாம் தம்முடைய பொறுமைப் பண்பினால் பொறுத்து வென்றுவிட வேண்டும். 158

9. **துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்**
**இன்னாச்சொல் நோற்கிற் பவர்**.

வரம்பு கடந்து நடப்பவரின் வாயில் பிறக்கும் கொடுஞ் சொற்களைப் பொறுத்துக் கொள்பவர் துறந்தவரைப் போலத் தூய்மையானவர் ஆவர். 159

10. **உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**
**இன்னாச்சொல் நோற்பாரின் பின்**.

உணவு உண்ணாமல் நோன்பு கிடப்பவர், பிறர் சொல்லும் கொடுஞ் சொற்களைப் பொறுப்பவர்க்கு அடுத்த நிலையில்தான் பெரியவர் ஆவர். 160

1. **ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து**
**அழுக்காறு இலாத இயல்பு**.

ஒருவன் தன் நெஞ்சில் பொறாமை இல்லாமல் வாழும் இயல்பைத் தனக்கு உரிய ஒழுக்கநெறியாகக் கொண்டு போற்ற வேண்டும். 161

2. **விழுப்பேற்றின் அஃதுஒப்பது இல்லை யார்மாட்டும்**
**அழுக்காற்றின் அன்மை பெறின்**.

யாரிடத்திலும் பொறாமை இல்லாதிருக்கப் பெற்றால், ஒருவன் பெறத்தக்க மேம்பாடான பேறுகளில் அதற்கு ஒப்பானது வேறொன்றும் இல்லை. 162

3. **அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்**
**பேணாது அழுக்கறுப் பான்**.

தனக்கு அறமும் ஆக்கமும் விரும்பாதவன் என்று கருதத்தக்கவனே, பிறனுடைய ஆக்கத்தைக் கண்டு மகிழாமல் பொறாமைப்படுவான். 163

4. **அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்**
**ஏதம் படுபாக்கு அறிந்து**.

பொறாமைப்படுதலாகிய தவறான நெறியில் துன்பம் ஏற்படுதலை அறிந்து, பொறாமை காரணமாக அறமல்லாதவைகளைச் செய்யார் அறிவுடையோர். 164

5. **அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்**
**வழுக்கியும் கேடுஈன் பது**.

பொறாமை உடையவர்க்கு வேறு பகை வேண்டா. அஃது ஒன்றே போதும், பகைவர் தீங்குசெய்யத் தவறினாலும் தவறாமல் கேட்டைத் தருவது அது. 165

6. **கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்**
   **உண்பதூஉம் இன்றிக் கெடும்**.

பிறர்க்கு உதவியாகக் கொடுக்கப்படும் பொருளைக் கண்டு பொறாமைப்படுகின்றவனுடைய சுற்றம், உடையும் உணவும் இல்லாமல் கெடும். 166

7. **அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்**
   **தவ்வையைக் காட்டி விடும்**.

பொறாமை உடையவனைத் திருமகள் கண்டு பொறாமைப்பட்டுத் தன் தமக்கைக்கு அவனைக் காட்டி நீங்கி விடுவாள். 167

8. **அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்**
   **தீயுழி உய்த்து விடும்**.

பொறாமை என்று கூறப்படும் ஒப்பற்ற பாவி, ஒருவனுடைய செல்வத்தையும் கெடுத்துத் தீய வழியில் அவனைச் செலுத்திவிடும். 168

9. **அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்**
   **கேடும் நினைக்கப் படும்**.

பொறாமை பொருந்திய நெஞ்சத்தானுடைய ஆக்கமும், பொறாமை இல்லாத நல்லவனுடைய கேடும் ஆராயத் தக்கவை. 169

10. **அழுக்கற்று அகன்றாரும் இல்லை:அஃது இல்லார்**
    **பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்**.

பொறாமைப்பட்டுப் பெருமையுற்றவரும் உலகத்தில் இல்லை; பொறாமை இல்லாதவராய் மேம்பாட்டிலிருந்து நீங்கியவரும் இல்லை. 170

1. **நடுவுஇன்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்**
**குற்றமும் ஆங்கே தரும்**.

நடுவுநிலைமை இல்லாமல் பிறர்க்குரிய நல்ல பொருளை ஒருவன் கவர விரும்பினால் அவனுடைய குடியும் கெட்டு குற்றமும் அப்பொழுதே வந்து சேரும். 171

2. **படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்**
**நடுவன்மை நாணு பவர்**.

நடுவுநிலைமை அல்லாதவற்றைக் கண்டு நாணி ஒதுங்குகின்றவர், பிறர் பொருளைக் கவர்வதால் வரும் பயனை விரும்பிப் பழியான செயல்களைச் செய்யார். 172

3. **சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே**
**மற்றுஇன்பம் வேண்டு பவர்**.

அறநெறியால் பெறும் இன்பத்தை விரும்புகின்றவர், நிலையில்லாத சிறிய இன்பத்தை விரும்பி அறம் அல்லாதவற்றைச் செய்யார். 173

4. **இலம்என்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற**
**புன்மையில் காட்சி யவர்**.

ஐம்புலன்களையும் வென்ற குற்றமில்லாத அறிவை உடையவர், 'யாம் வறுமை அடைந்தோம்' என்று எண்ணியும் பிறர் பொருளை விரும்பார். 174

5. **அஃகி அகன்ற அறிவுஎன்னாம் யார்மாட்டும்**
**வெஃகி வெறிய செயின்**.

யாரிடத்திலும் பொருளைக் கவர விரும்பிப் பொருந்தாதவற்றைச் செய்தால், நுட்பமானதாய் விரிவுடையதாய் வளர்ந்த அறிவால் பயன் என்ன? 175

6. **அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்**
**பொல்லாத சூழக் கெடும்**.

அருளை விரும்பி அறநெறியில் நின்றவன், பிறனுடைய பொருளை விரும்பிப் பொல்லாத குற்றங்களை எண்ணினால் கெடுவான். 176

7. **வேண்டற்க வெஃகிஆம் ஆக்கம்: விளைவயின்**
**மாண்டற்கு அரிதாம் பயன்**.

பிறர் பொருளைக் கவர விரும்புவதால் ஆகும் ஆக்கத்தை விரும்பாதிருக்க வேண்டும்; அது பயன் விளைக்கும்போது அப்பயன் நன்மையாவது அரிதாகும். 177

8. **அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை**
**வேண்டும் பிறன்கைப் பொருள்**.

ஒருவனுடைய செல்வத்திற்குக் குறைவு நேராதிருக்க வழி எது என்றால், அவன் பிறனுடைய கைப்பொருளை விரும்பாதிருத்தலாகும். 178

9. **அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்**
**திறன்அறிந்து ஆங்கே திரு**.

அறம் இஃது என்று அறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையாரைத் திருமகள் தான் சேரும் திறன் அறிந்து அதற்கு ஏற்றவாறு சேர்வாள். 179

10. **இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்**
**வேண்டாமை என்னுஞ் செருக்கு**.

விளைவை எண்ணாமல் பிறர் பொருளை விரும்பினால் அஃது அழிவைத் தரும்; அப்பொருளை விரும்பாமல் வாழும் பெருமை வெற்றியைத் தரும். 180

1. **அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்**
**புறங்கூறான் என்றல் இனிது**.

ஒருவன் அறத்தைப் போற்றிக் கூறாதவனாய் அறமல்லாதவற்றைச் செய்தாலும் மற்றவனைப் பற்றிப் புறங்கூறாமல் இருக்கிறான் என்று சொல்லப்படுதல் நல்லது. 181

2. **அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீதே**
**புறன்அழீஇப் பொய்த்து நகை**.

அறத்தை அழித்துப் பேசி அறமல்லாதவைகளைச் செய்தலைவிட, ஒருவன் இல்லாதவிடத்தில் அவனைப் பழித்துப் பேசி நேரில் பொய்யாக முகமலர்ந்து பேசுதல் தீமையாகும். 182

3. **புறங்கூறிப் பொய்த்துஉயிர் வாழ்தலின் சாதல்**
   **அறங்கூறும் ஆக்கம் தரும்**.

புறங்கூறிப் பொய்யாக நடந்து உயிர்வாழ்தலைவிட, அவ்வாறு செய்யாமல் வறுமையுற்று இறந்துவிடுதல் அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தைத் தரும். 183

4. **கண்நின்று கண்அறச் சொல்லினும் சொல்லற்க**
   **முன்இன்று பின்நோக்காச் சொல்**.

எதிரே நின்று கணணோட்டம் இல்லாமல் கடுமையாகச் சொன்னாலும் சொல்லலாம்; நேரில் இல்லாதபோது பின் விளைவை ஆராயாத சொல்லைச் சொல்லக்கூடாது. 184

5. **அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்**
   **புன்மையால் காணப் படும்**.

அறத்தை நல்லதென்று போற்றும் நெஞ்சம் இல்லாத தன்மை, ஒருவன் மற்றவனைப்பற்றிப் புறங்கூறுகின்ற சிறுமையால் காணப்படும். 185

6. **பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்**
   **திறன்தெரிந்து கூறப் படும்**.

மற்றவனைப்பற்றிப் புறங்கூறுகின்றவன், அவனுடைய பழிகள் பலவற்றிலும் நோகத்தக்கவை ஆராய்ந்து கூறிப் பிறரால் பழிக்கப்படுவான். 186

7. **பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி**
   **நட்பாடல் தேற்றா தவர்**.

மகிழும்படியாகப் பேசி நட்புக்கொள்ளுதல் நன்மை என்று தெளியாதவர் தம்மைவிட்டு நீங்கும்படியாகப் புறங்கூறி நண்பரையும் பிரித்துவிடுவர். 187

8. **துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்**
**என்னைகொல் ஏதிலார் மாட்டு**?

நெருங்கிப் பழகியவரின் குற்றத்தையும் புறங்கூறித் தூற்றும் இயல்புடையவர், பழகாத அயலாரிடத்து என்ன செய்வாரோ? 188

9. **அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்**
**புன்சொல் உரைப்பான் பொறை**?

ஒருவர் நேரில் இல்லாதது கண்டு பழிச்சொல் கூறுவோனுடைய உடல்பாரத்தை, `இவனையும் சுமப்பதே எனக்கு அறம்' என்று கருதி நிலம் சுமக்கின்றதோ? 189

10. **ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்**
**தீதுஉண்டோ மன்னும் உயிர்க்கு**.

அயலாருடைய குற்றத்தைக் காண்பதுபோல் தம் குற்றத்தையும் காணவல்லவரானால், நிலைபெற்ற உயிர் வாழ்க்கைக்குத் துன்பம் உண்டோ? 190

1. **பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான்**
**எல்லாரும் எள்ளப் படும்**.

கேட்டவர் பலரும் வெறுக்கும்படியாகப் பயனில்லாத சொற்களைச் சொல்லுகின்றவன், எல்லோராலும் இகழப்படுவான். 191

2. **பயன்இல பல்லார்முன் சொல்லல் நயன்இல**
**நட்டார்கண் செய்தலின் தீது**.

பலர் முன்னே பயனில்லாத சொற்களைச் சொல்லுதல், நண்பரிடத்தில் அறம் இல்லாத செயல்களைச் செய்தலை விடத் தீமையானதாகும். 192

3. **நயன்இலன் என்பது சொல்லும் பயன்இல**
**பாரித்து உரைக்கும் உரை**.

ஒருவன் பயனில்லாத பொருள்களைப் பற்றி விரிவாகச் சொல்லும் சொற்கள், அவன் அறம் இல்லாதவன் என்பதை அறிவிக்கும். 193

4. **நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்**
**பண்பில்சொல் பல்லா ரகத்து**.

பயனோடு பொருந்தாத பண்பு இல்லாத சொற்களைப் பலரிடத்தும் சொல்லுதல், அறத்தோடு பொருந்தாமல் நன்மையிலிருந்து நீங்கச் செய்யும். 194

5. **சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல**
**நீர்மை யுடையார் சொலின்**.

பயனில்லாத சொற்களை நல்ல பண்பு உடையவர் சொல்லுவாரானால், அவருடைய மேம்பாடு அவர்க்குரிய மதிப்போடு நீங்கிவிடும். 195

6. **பயன்இல்சொல் பாராட்டு வானை மகன்எனல்**
**மக்கட் பதடி எனல்**.

பயனில்லாத சொற்களைப் பலமுறையும் சொல்லுகின்ற ஒருவனை மனிதன் என்று சொல்லக்கூடாது; மக்களுள் பதர் என்றே சொல்ல வேண்டும். 196

7. **நயன்இல சொல்லினும் சொல்லுக சான்றோர்**
**பயன்இல சொல்லாமை நன்று**.

அறம் இல்லாதவற்றைச் சொன்னாலும் சொல்லலாம்; சான்றோர் பயனில்லாத சொற்களைச் சொல்லாமல் இருத்தல் நன்மையாகும். 197

8. **அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்**
**பெரும்பயன் இல்லாத சொல்**.

அருமையான பயன்களை ஆராயவல்ல அறிவை உடைய அறிஞர், மிக்க பயன் இல்லாத சொற்களை ஒருபோதும் சொல்லமாட்டார். 198

9. **பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த**
**மாசறு காட்சி யவர்**.

மயக்கத்திலிருந்து தெளிந்த மாசற்ற அறிவை உடையவர், பயன் நீங்கிய சொற்களை ஒருகால் மறந்தும் சொல்லமாட்டார். 199

10. **சொல்லுக சொல்லின் பயனுடைய சொல்லற்க**
**சொல்லில் பயனிலாச் சொல்**.

சொற்களில் பயன் உடைய சொற்களை மட்டுமே சொல்லவேண்டும்; பயன் இல்லாதவைகளாகிய சொற்களைச் சொல்லவேகூடாது. 200

1. **தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்**
**தீவினை என்னும் செருக்கு**.

தீயவை செய்தலாகிய செருக்கைத் தீவினை உடைய பாவிகள் அஞ்சார்; தீவினை இல்லாத மேலோர் மட்டுமே அஞ்சுவர். 201

2. **தீயவை தீய பயத்தலால் தீயவை**
**தீயினும் அஞ்சப் படும்**.

தீயசெயல்கள் தீமையை விளைவிக்கும் தன்மை உடையனவாக இருத்தலால், அத் தீய செயல்கள் தீயைவிடக் கொடியனவாகக் கருதி அஞ்சப்படும். 202

3. **அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய**
**செறுவார்க்கும் செய்யா விடல்**.

தம்மை வருத்துவோர்க்கும் தீய செயல்களைச் செய்யாமலிருத்தலை, அறிவு எல்லாவற்றிலும் தலையான அறிவு என்று கூறுவர். 203

4. **மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்**
**அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு**.

பிறனுக்குக் கேட்டைத் தரும் தீய செயல்களை ஒருவன் மறந்தும் எண்ணக்கூடாது. எண்ணினால், எண்ணியவனுக்குக் கேடு விளையுமாறு அறம் எண்ணும். 204

5. **இலன்என்று தீயவை செய்யற்க: செய்யின்**
**இலன்ஆகும் மற்றும் பெயர்த்து**.

`யான் வறியவன்' என்று நினைத்துத் தீய செயல்களைச் செய்யக்கூடாது; செய்தால் மீண்டும் வறியவன் ஆகி வருந்துவான். 205

6. **தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை அடல்வேண்டா தான்**.

துன்பம் செய்யும் தீவினைகள் தன்னை வருத்துதலை விரும்பாதவன், தீய செயல்களைத் தான் பிறர்க்குச் செய்யாமலிருக்கவேண்டும். 206

7. **எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை**
**வீயாது பின்சென்று அடும்**.

எவ்வளவு கொடிய பகை உடையவரும் தப்பி வாழ முடியும்; ஆனால் தீயவை செய்தால் வரும் தீவினையாகிய பகை நீங்காமல் பின்சென்று வருத்தும். 207

8. **தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை**
**வீயாது அடிஉறைந் தற்று**.

தீய செயல்களைச் செய்தவர் கேட்டை அடைதல், ஒருவனுடைய நிழல் அவனை விடாமல் வந்து அடியில் தங்கியிருத்தலைப் போன்றது. 208

9. **தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்**
**துன்னற்க தீவினைப் பால்**.

ஒருவன் தன்னைத் தான் விரும்பி வாழ்பவனாயின், தீய செயலாகிய பகுதியை எவ்வளவு சிறியதாயினும் பொருந்தாமல் நீங்க வேண்டும். 209

10. **அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்**
**தீவினை செய்யான் எனின்**.

ஒருவன் தவறான நெறியில் சென்று தீய செயல் செய்யாதிருப்பானானால் அவன் கேடு இல்லாதவன் என்று அறியலாம். 210

1. **கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு**
   **என்ஆற்றும் கொல்லோ உலகு**.

இந்த உலகத்தார் தமக்கு உதவும் மழைக்கு என்ன கைம்மாறு செய்கின்றனர்? மழை போன்றவர் செய்யும் உதவிகளும் கைம்மாறு வேண்டாதவை. 211

2. **தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு**
   **வேளாண்மை செய்தல் பொருட்டு**.

ஒப்புரவாளன் தன்னால் இயன்ற முயற்சி செய்து சேர்த்த பொருள் எல்லாம் தக்கவர்க்கு உதவி செய்வதற்கே ஆகும். 212

3. **புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே**
   **ஒப்புரவின் நல்ல பிற**.

பிறர்க்கு உதவி செய்து வாழும் ஒப்புரவைப்போல நல்லனவாகிய வேறு அறப்பகுதிகளைத் தேவருலகத்திலும் இவ்வுலகத்திலும் பெறுதல் இயலாது. 213

4. **ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்**
   **செத்தாருள் வைக்கப் படும்**.

ஒப்புரவை அறிந்து போற்றிப் பிறர்க்கு உதவியாக வாழ்கின்றவன் உயிர்வாழ்கின்றவன் ஆவான்; மற்றவன் செத்தவருள் சேர்த்துக் கருதப்படுவான். 214

5. **ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்**
   **பேரறி வாளன் திரு**.

ஒப்புரவினால் உலகம் வாழுமாறு விரும்பும் பேரறிவாளியின் செல்வம், ஊரார் நீருண்ணும் குளம், நீரால் நிறைந்தாற் போன்றது. 215

6. **பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**
   **நயன்உடை யான்கண் படின்**.

ஒப்புரவாகிய நற்பண்பு உடையவனிடம் செல்வம் சோந்தால், அஃது ஊரின் நடுவே உள்ள பயன் மிகுந்த மரம் பழங்கள் பழுத்தாற் போன்றது. 216

7. **மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்**
**பெருந்தகை யான்கண் படின்**.

ஒப்புரவாகிய பெருந்தகைமை உடையவனிடம் செல்வம் சேர்ந்தால், அஃது எல்லா உறுப்புக்களும் மருந்தாகிப் பயன்படத் தவறாத மரம் போன்றது. 217

8. **இடன்இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்**
**கடன்அறி காட்சி யவர்**.

ஒப்புரவு அறிந்து ஒழுகுதலாகிய தம் கடமை அறிந்த அறிவை உடையவர், சொல்வளம் இல்லாத காலத்திலும் ஒப்புரவுக்குத் தளர மாட்டார். 218

9. **நயன்உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர**
**செய்யாது அமைகலா வாறு**.

ஒப்புரவாகிய நற்பண்பு உடையவன் வறுமை உடையவனாதல், செய்யத்தக்க உதவிகளைச் செய்யாமல் வருந்துகின்ற தன்மையாகும். 219

10. **ஒப்புரவி னால்வரும் கேடுஎனின் அஃதொருவன்**
**விற்றுக்கோள் தக்கது உடைத்து**.

ஒப்புரவால் கேடு வரும் என்றால், அக்கேடு ஒருவன் தன்னை விற்றாவது வாங்கிக் கொள்ளும் தகுதி உடையதாகும். 220

1. **வறியார்க்குஒன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்**
**குறியெதிர்ப்பை நீரது உடைத்து**.

வறியவர்க்கு ஒரு பொருளைக் கொடுப்பதே ஈகை எனப்படுவது. மற்றவர்க்குக் கொடுப்பதெல்லாம் பயனை எதிர்பார்த்துக் கொடுக்கும் தன்மை உடையது. 221

2. **நல்ஆறு எனினும் கொளல்தீது மேலுலகம்**
**இல்எனினும் ஈதலே நன்று**.

பிறரிடமிருந்து பொருள் பெற்றுக் கொள்ளுதல் நல்ல நெறி என்றாலும் கொள்ளல் தீமையானது. மேலுலகம் இல்லையென்றாலும் பிறர்க்குக் கொடுப்பதே நல்லது. 222

3. **இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலன்உடையான் கண்ணே உள**.

`யான் வறியவன்' என்னும் துன்பச் சொல்லை ஒருவன் உரைப்பதற்கு முன் அவனுக்கு கொடுக்கும் தன்மை, நல்ல குடிப்பிறப்பு உடையவனிடம் உண்டு. 223

4. **இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்**
**இன்முகம் காணும் அளவு**.

பொருள் வேண்டும் என்று இரந்தவரின் மகிழ்ந்த முகத்தைக் காணும் வரைக்கும் (இரத்தலைப் போலவே) இரந்து கேட்கப்படுதலும் துன்பமானது. 224

5. **ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின் பின்**.

தவ வலிமை உடையவரின் வலிமை பசியைப் பொறுத்துக் கொள்ளலாகும். அதுவும் அப்பசியை உணவு கொடுத்து மாற்றுகின்றவரின் ஆற்றலுக்குப் பிற்பட்டதாகும். 225

6. **அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதுஒருவன்**
**பெற்றான் பொருள்வைப் புழி**.

வறியவரின் கடும்பசியைத் தீர்க்கவேண்டும்; அதுவே பொருள் பெற்ற ஒருவன் அப்பொருளைத் தனக்குப் பிற்காலத்தில் உதவுமாறு சேர்த்து வைக்கும் இடமாகும். 226

7. **பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்**
**தீப்பிணி தீண்டல் அரிது**.

தான் பெற்ற உணவைப் பலரோடும் பகுத்து உண்ணும் பழக்கம் உடையவனைப் பசி என்று கூறப்படும் தீய நோய் அணுகுதல் இல்லை. 227

8. **ஈத்துஉவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை**
**வைத்துஇழக்கும் வன்க ணவர்?**

தாம் சேர்த்துள்ள பொருளைப் பிறர்க்குக் கொடுக்காமல் வைத்திருந்து பின் இழந்துவிடும் வன்கண்மை உடையவர் பிறர்க்குக் கொடுத்து மகிழும் மகிழ்ச்சியை அறியாரோ? 228

9. **இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய**
**தாமே தமியர் உணல்.**

பொருளின் குறைபாட்டை நிரப்புவதற்காக உள்ளதைப் பிறர்க்கு ஈயாமல் தாமே தமியராய் உண்பது வறுமையால் இரப்பதைவிடத் துன்பமானது. 229

10. **சாதலின் இன்னாது இல்லை இனிதுஅதூஉம்**
**ஈதல் இயையாக் கடை.**

சாவதைவிடத் துன்பமானது வேறொன்றும் இல்லை. ஆனால் வறியவர்க்கு ஒரு பொருள் கொடுக்க முடியாத நிலை வந்தபோது அச்சாதலும் இனியதே ஆகும். 230

1. **ஈதல்: இசைபட வாழ்தல்: அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு.**

வறியவர்க்கு ஈதல் வேண்டும். அதனால் புகழ் உண்டாக வாழவேண்டும். அப்புகழ் அல்லாமல் உயிர்க்கு ஊதியமானது வேறொன்றும் இல்லை. 231

2. **உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்குஒன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ்.**

புகழ்ந்து சொல்கின்றவர் சொல்பவை எல்லாம் வறுமையால் இரப்பவர்க்கு ஒரு பொருள் கொடுத்து உதவுகின்றவரின் மேல் நிற்கின்ற புகழேயாகும். 232

3. **ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்**
**பொன்றாது நிற்பதுஒன்று இல்.**

உயர்ந்த புகழ் அல்லாமல் உலகத்தில் ஒப்பற்ற ஒரு பொருளாக அழியாமல் நிலைநிற்க வல்லது வேறொன்றும் இல்லை. 233

4. **நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்**
   **போற்றாது புத்தேள் உலகு.**

நிலவுலகின் எல்லையில் நெடுங்காலம் நிற்கவல்ல புகழைச் செய்தால், வானுலகம் (அவ்வாறு புகழ் செய்தாரைப் போற்றுமே அல்லாமல்) தேவரைப் போற்றாது. 234

5. **நத்தம்போல் கேடும் உளதுஆகும் சாக்காடும்**
   **வித்தகர்க்கு அல்லால் அரிது.**

புகழுடம்பு மேம்படுதலாகும் வாழ்வில் கேடும், புகழ் நிலை நிற்பதாகும் சாவும், அறிவில் சிறந்தவர்க்கு அல்லாமல் மற்றவர்க்கு இல்லை. 235

6. **தோன்றின் புகழோடு தோன்றுக: அஃதிலார்**
   **தோன்றலின் தோன்றாமை நன்று.**

ஒரு துறையில் முற்பட்டுத் தோன்றுவதானால் புகழோடு தோன்ற வேண்டும்; அத்தகைய சிறப்பு இல்லாதவர் அங்குத் தோன்றுவதைவிடத் தோன்றாமலிருப்பது நல்லது. 236

7. **புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை**
   **இகழ்வாரை நோவது எவன்?**

தமக்குப் புகழ் உண்டாகுமாறு வாழமுடியாதவர் தம்மைத் தாம் நொந்துகொள்ளாமல் தம்மை இகழ்கின்றவரை நொந்துக்கொள்ளக் காரணம் என்ன? 237

8. **வசைஎன்ப வையத்தார்க்கு எல்லாம் இசைஎன்னும்**
   **எச்சம் பெறாஅ விடின்.**

தமக்குப் பின் எஞ்சி நிற்பதாகிய புகழைக் பெறாவிட்டால் உலகத்தார் எல்லார்க்கும் அத்தகைய வாழ்க்கை பழி என்று சொல்லுவர். 238

9. **வசைஇலா வண்பயன் குன்றும் இசைஇலா**
**யாக்கை பொறுத்த நிலம்.**

புகழ் பெறாமல் வாழ்வைக் கழித்தவருடைய உடம்பைச் சுமந்த நிலம், வசையற்ற வளமான பயனாகிய விளைவு இல்லாமல் குன்றிவிடும். 239

10. **வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசைஒழிய**
**வாழ்வாரே வாழா தவர்.**

தாம் வாழும் வாழ்க்கையில் பழி உண்டாகாமல் வாழ்கின்றவரே உயிர் வாழ்கின்றவர்; புகழ் உண்டாகாமல் வாழ்கின்றவரே உயிர் வாழாதவர். 240

1. **அருட்செல்வம் செல்வத்துள் செல்வம்: பொருட்செல்வம்**
**பூரியார் கண்ணும் உள.**

பொருள்களாகிய செல்வங்கள் இழிந்தவரிடத்திலும் உள்ளன; (உயர்ந்தவரிடத்தில் மட்டும் உள்ள) அருளாகிய செல்வமே செல்வங்களில் சிறந்த செல்வமாகும். 241

2. **நல்லாற்றான் நாடி அருளாள்க: பல்லாற்றான்**
**தேரினும் அஃதே துணை.**

நல்ல வழியால் ஆராய்ந்து அருளுடையவர்களாக விளங்க வேண்டும். பல வழிகளால் ஆராய்ந்து கண்டாலும் அருளே வாழ்க்கைக்குத் துணையாக உள்ளது. 242

3. **அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த**
**இன்னா உலகம் புகல்.**

அறியாமையாகிய இருள் பொருந்திய துன்ப உலகில் இருந்து வாழும் வாழ்க்கை, அருள் பொருந்திய நெஞ்சம் உடையவர்களுக்கு இல்லை. 243

4. **மன்னுயிர் ஓம்பி அருள்ஆள்வாற்கு இல்லென்ப**
**தன்உயிர் அஞ்சும் வினை.**

தன் உயிரின் பொருட்டு அஞ்சி வாழ்கின்ற தீவினை, உலகில் நிலைபெற்றுள்ள மற்ற உயிர்களைப் போற்றி அருளுடையவனாக இருப்பவனுக்கு இல்லை. 244

5. **அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கும்**
**மல்லல்மா ஞாலம் கரி**.

அருளுடையவராக வாழ்கின்றவர்க்குத் துன்பம் இல்லை; காற்று இயங்குகின்ற வளம் பொருந்திய பெரிய உலகத்தில் வாழ்வோரே இதற்குச் சான்று ஆவர். 245

6. **பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி**
**அல்லவை செய்துஒழுகு வார்**.

அருள் இல்லாதவராய் அறமல்லாதவைகளைச் செய்து நடப்பவர்களை, உறுதிப்பொருளாகிய அறத்திலிருந்து நீங்கித் தம் வாழ்க்கையின் குறிக்கோளை மறந்தவர் என்பர். 246

7. **அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு**
**இவ்வுலகம் இல்லாகி யாங்கு**.

பொருள் இலாதவர்க்கு இவ்வுலகத்து வாழ்க்கை இல்லாதவாறுபோல, உயிர்களிடத்தில் அருள் இல்லாதவர்க்கு அவ்வுலகத்து வாழ்க்கை இல்லையாம். 247

8. **பொருள்அற்றார் பூப்பர் ஒருகால் அருள்அற்றார்**
**அற்றார்மற்று ஆதல் அரிது**.

பொருள் இல்லாதவர் ஒரு காலத்தில் வளம் பெற்று விளங்குவர்; அருள் இல்லாதவர் வாழ்க்கையின் பயன் அற்றவரே; அவர் ஒரு காலத்திலும் சிறந்து விளங்குதல் இல்லை. 248

9. **தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்**
**அருளாதான் செயயும் அறம்**.

அருள் மேற்கொள்ளாதவன் செய்கின்ற அறச்செயலை ஆராய்ந்தால், அஃது அறிவு தெளியாதவன் ஒரு நூலின் உண்மைப் பொருளைக் கண்டாற் போன்றது. 249

10. **வலியார்முன் தன்னை நினைக்க,தான் தன்னின்**
**மெலியார்மேல் செல்லும் இடத்து**.

(அருள் இல்லாதவன்) தன்னைவிட மெலிந்தவர்மேல் துன்புறுத்தச் செல்லும்போது, தன்னைவிட வலியவரின் முன் தான் அஞ்சி நிற்கும் நிலைமையை நினைக்க வேண்டும். 250

1. **தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்**
   **எங்ஙனம் ஆளும் அருள்?**

தன் உடம்பைப் பெருக்கச் செய்வதற்காகத் தான் மற்றோர் உயிரின் உடம்பைத் தின்கின்றவன் எவ்வாறு அருளுடையவனாக இருக்க முடியும்? 251

2. **பொருள்ஆட்சி போற்றாதார்க்கு இல்லை: அருளாட்சி**
   **ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு.**

பொருளுடையவராக இருக்கும் சிறப்பு, அப்பொருளை வைத்துக் காப்பாற்றாதவர்க்கு இல்லை; அருளுடையவராக இருக்கும் சிறப்பு, புலால் தின்பவர்க்கு இல்லை. 252

3. **படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றுஊக்காது ஒன்றன்**
   **உடல்சுவை உண்டார் மனம்.**

ஓர் உயிரின் உடம்பைச் சுவையாக உண்டவரின் மனம் கொலைக்கருவியைக் கையில் கொண்டவரின் நெஞ்சம் போல் நன்மையாகிய அருளைப் போற்றாது. 253

4. **அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்**
   **பொருளல்லது அவ்வூன் தினல்.**

அருள் எது என்றால் ஓர் உயிரையும் கொல்லாமலிருத்தல்; அருளல்லாதது எது என்றால் உயிரைக் கொல்லுதல்; அதன் உடம்பைத் தின்னுதல் அறம் அல்லாதது. 254

5. **உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண**
   **அண்ணாத்தல் செய்யாது அளறு.**

உயிர்கள் உடம்புபெற்று வாழும் நிலைமை, ஊன் உண்ணாதிருத்தலை அடிப்படையாகக் கொண்டது; ஊன் உண்டால் நரகம் அவனை வெளிவிடாது. 255

6. **தினல்பொருட்டால் கொல்லாது உலகுஎனின் யாரும்**
**விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்**.

புலால் தின்னும்பொருட்டு உலகத்தார் உயிர்களைக் கொல்லாதிருப்பாரானால், விலையின் பொருட்டு ஊன் விற்பவர் இல்லாமல் போவர். 256

7. **உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதுஒன்றன்**
**புண்அது உணர்வார்ப் பெறின்**.

புலால் உண்ணாமலிருக்க வேண்டும்; ஆராய்ந்து அறிவாரைப் பெற்றால், அப்புலால் வேறோர் உயிரின் புண் என்பதை உணரலாம். 257

8. **செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்**
**உயிரின் தலைப்பிரிந்த ஊண்**.

குற்றத்திலிருந்து நீங்கிய அறிவை உடையவர், ஓர் உயிரினடத்திலிருந்து பிரிந்துவந்த உடம்பாகிய ஊனை உண்ணமாட்டார். 258

9. **அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத்து உண்ணாமை நன்று**.

நெய் முதலிய பொருள்களைத் தீயில் சொரிந்து ஆயிரம் வேள்விகள் செய்தலைவிட, ஒன்றன் உயிரைக் கொன்று உடம்பைத் தின்னாதிருத்தல் நல்லது. 259

10. **கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும்**.

ஓருயிரையும் கொல்லாமல் புலால் உண்ணாமல் வாழ்கின்றவனை உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் கைகூப்பி வணங்கும். 260

1. **உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை**
**அற்றே தவத்திற்கு உரு**.

தான் பெற்ற துன்பத்தைப் பொறுத்தலும் மற்ற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தலும் ஆகியவைகளே தவத்திற்கு வடிவமாகும். 261

2. **தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம்அதனை**
**அஃதிலார் மேற்கொள் வது**.

தவக்கோலமும் தவஒழுக்கம் உடையவர்க்கே பொருத்தமாகும்; அக்கோலத்தைத் தவஒழுக்கம் இல்லாதவர் மேற்கொள்வது வீண்முயற்சியாகும். 262

3. **துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்**
**மற்றை யவர்கள் தவம்?**

துறந்தவர்க்கு உணவு முதலியவை கொடுத்து உதவ வேண்டும் என விரும்பி மற்றவர்கள் (இல்லறத்தினர்) தவம் செய்வதை மறந்தார்களோ? 263

4. **ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்**
**எண்ணின் தவத்தான் வரும்**.

தீமை செய்யும் பகைவரை அடக்குதலும், நன்மை செய்யும் நண்பரை உயர்த்துதலும் நினைத்த அளவில் தவத்தின் வலிமையால் உண்டாகும். 264

5. **வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்**
**ஈண்டு முயலப் படும்**.

விரும்பிய பயன்களை விரும்பியவாறே அடைய முடியுமாகையால் செய்யத்தக்க தவம் இந்நிலையிலும் (இல்லற வாழ்க்கையிலும்) முயன்று செய்யப்படும். 265

6. **தவஞ்செய்வார் தம்கருமம் செய்வார்மற்று அல்லார்**
**அவஞ்செய்வார் ஆசையுள் பட்டு**.

தவம் செய்கின்றவரே தமக்குரிய கடமைகளைச் செய்கின்றவர் ஆவர்; அவர் அல்லாத மற்றவர் ஆசை வலையில் அகப்பட்டு வீண்முயற்சி செய்கின்றவரே. 266

7. **சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்**
**சுடச்சுட நோற்கிற் பவர்க்கு**.

புடமிட்டுச் சுடச்சுட ஒளிவிடுகின்ற பொன்னைப் போல், தவம் செய்கின்றவரைத் துன்பம் வருத்த வருத்த மெய்யுணர்வு மிகும். 267

8. **தன்உயிர் தான் அறப் பெற்றானை ஏனைய**
   **மன்னுயிர் எல்லாம் தொழும்**.

தவவலிமையால் தன்னுடைய உயிர் தான் என்னும் பற்று நீங்கப்பெற்றவனை மற்ற உயிர்கள் எல்லாம் (அவனுடைய பெருமையை உணர்ந்து) தொழும். 268

9. **கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்**
   **ஆற்றல் தலைப்பட் டவர்க்கு**.

தவம் செய்வதால் பெறத்தக்க ஆற்றலைப் பெற்றவர்க்கு (ஓர் இடையூறும் இல்லையாகையால்) யமனை வெல்லுதலும் கைகூடும். 269

10. **இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்**
    **சிலர்பலர் நோலா தவர்**.

ஆற்றல் இல்லாதவர் பலராக உலகில் இருப்பதற்குக் காரணம், தவம் செய்கின்றவர் சிலராகவும் செய்யாதவர் பலராகவும் இருப்பதே ஆகும். 270

1. **வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்**
   **ஐந்தும் அகத்தே நகும்**.

வஞ்சமனம் உடையவனது பொய்யொழுக்கத்தை அவனுடைய உடம்பில் கலந்து நிற்கும் ஐந்து பூதங்களும் கண்டு தம்முள் சிரிக்கும். 271

2. **வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்**
   **தான்அறி குற்றப் படின்**.

தன் மனம் தான் அறிந்த குற்றத்தில் தங்குமானால் வானத்தைப்போல் உயர்ந்துள்ள தவக்கோலம், ஒருவனுக்கு என்ன பயன் செய்யும்? 272

3. **வலிஇல் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்**
**புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று**.

மனத்தை அடக்கும் வல்லமை இல்லாதவன் மேற்கொண்ட வலிய தவக்கோலம், பசு புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு பயிரை மேய்ந்தாற் போன்றது. 273

4. **தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து**
**வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று**.

தவக்கோலத்தில் மறைந்துகொண்டு தவம் அல்லாத தீய செயல்களைச் செய்தல், புதரில் மறைந்து வேடன் பறவைகளை வலைவீசிப் பிடித்தலைப் போன்றது. 274

5. **பற்றுஅற்றேம் என்பார் படிற்றுறொழுக்கம் எற்றுஎற்றுஎன்று**
**ஏதம் பலவுந் தரும்**.

'பற்றுக்களைத் துறந்தோம்' என்று சொல்கின்றவரின் பொய்யொழுக்கம், என்ன செய்தோம் என்ன செய்தோம்' என்று வருந்தும்படியான துன்பம் பலவும் தரும். 275

6. **நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து**
**வாழ்வாரின் வன்கணார் இல்**.

மனத்தில் பற்றுக்களைத் துறக்காமல், துறந்தவரைப் போல் வஞ்சனை செய்து வாழ்கின்றவர் போல் இரக்கமற்றவர் வேறு எவரும் இல்லை. 276

7. **புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி**
**மூக்கிற் கரியார் உடைத்து**.

புறத்தில் குன்றிமணிபோல் செம்மையானவராய்க் காணப்பட்டாராயினும், அகத்தில் குன்றிமணியின் மூக்குப்போல் கருத்திருப்பவர் உலகில் உண்டு. 277

8. **மனத்தது மாசுஆக மாண்டார்நீ ராடி**
**மறைந்துஒழுகு மாந்தர் பலர்**.

மனத்தில் மாசு இருக்கத் தவத்தால் மாண்பு பெற்றவரைப் போல நீரில் மூழ்கி மறைந்து நடக்கும் வஞ்சனை உடைய மாந்தர் உலகில் பலர் உள்ளனர். 278

9. **கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன**
**வினைபடு பாலால் கொளல்**.

நேராகத் தோன்றினும் அம்பு கொடியது; வளைவுடன் தோன்றினாலும் யாழின் கொம்பு நன்மையானது; மக்களின் பண்புகளையும் செயல் வகையால் உணர்ந்து கொள்ள வேண்டும். 279

10. **மழித்தலும் நீட்டலும் வேண்டா: உலகம்**
**பழித்தது ஒழித்து விடின்**.

உலகம் பழிக்கும் தீயொழுக்கத்தை விட்டுவிட்டால், மொட்டை அடித்தலும் சடைவளர்த்தலுமாகிய புறக் கோலங்களும் வேண்டா. 280

1. **எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்துஒன்றும்**
**கள்ளாமை காக்கதன் நெஞ்சு**.

பிறரால் இகழப்படாமல் வாழ விரும்புகின்றவன், எத்தன்மையான பொருளையும் பிறரிடமிருந்து வஞ்சித்துக் கொள்ள எண்ணாதபடி தன் நெஞ்சைக் காக்கவேண்டும். 281

2. **உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்**.

குற்றமானதை உள்ளத்தால் எண்ணுவதும் குற்றமே; அதனால் பிறன் பொருளை அவன் அறியாத வகையால், `வஞ்சித்துக் கொள்வோம்' என்று எண்ணாதிருக்க வேண்டும். 282

3. **களவினால் ஆகிய ஆக்கம் அளவுஇறந்து**
**ஆவது போலக் கெடும்**.

களவு செய்து பொருள் கொள்வதால் உண்டாகிய ஆக்கம் பெருகுவதுபோல தோன்றி, இயல்பாக இருக்க வேண்டிய அளவையும் கடந்து கெட்டுவிடும். 283

4. **களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்**
**வீயா விழுமம் தரும்**.

களவுசெய்து பிறர்பொருள் கொள்ளுதலின் ஒருவனுக்கு உள்ள மிகுந்த விருப்பம், பயன் விளையும்போது தொலையாத துன்பத்தைத் தரும். 284

5. **அருள்கருதி அன்புடையர் ஆதல் பொருள்கருதிப்**
   **பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்**.

அருளைப் பெரிதாகக் கருதி அன்பு உடையவராய் நடத்தல், பிறருடைய பொருளைக் கவர எண்ணி அவர் சோர்ந்திருக்கும் நிலையைப் பார்ப்பவரிடத்தில் இல்லை. 285

6. **அளவின்கண் நின்றுஒழுகல் ஆற்றார் களவின்கண்**
   **கன்றிய காத லவர்**.

களவு செய்து பிறர்பொருள் கொள்ளுதலின் மிக்க விருப்பம் உடையவர், அளவு (சிக்கனம்) போற்றி வாழும் நெறியில் நின்று ஒழுக மாட்டார். 286

7. **களவுஎன்னும் காரறி வாண்மை அளவுஎன்னும்**
   **ஆற்றல் புரிந்தார்கண் இல்**.

களவு என்பதற்குக் காரணமான மயங்கிய அறிவு உடையவராயிருத்தல், அளவு அறிந்து வாழ்தலாகிய ஆற்றலை விரும்பினவரிடத்தில் இல்லை. 287

8. **அளவுஅறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்**
   **களவுஅறிந்தார் நெஞ்சில் கரவு**.

அளவறிந்து வாழ்கின்றவரின் நெஞ்சில் நிற்கும் அறம்போல், களவுசெய்து பழகி அறிந்தவரின் நெஞ்சில் வஞ்சம் நிற்கும். 288

9. **அளவுஅல்ல செய்தாங்கே வீவர் களவல்ல**
   **மற்றைய தேற்றா தவர்**.

களவு செய்தல் தவிர மற்ற நல்லவழிகளை நம்பித் தெளியாதவர், அளவு அல்லாத செயல்களைச் செய்து அப்போதே கெட்டழிவர். 289

10. **கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்**
**தள்ளாது புத்தே ளுலகு**.

களவு செய்வார்க்கு உடலில் உயிர்வாழும் வாழ்வும் தவறிப்போகும். களவு செய்யாமல் வாழ்வோர்க்குத் தேவருலகம் வாய்க்கத் தவறாது. 290

1. **வாய்மை எனப்படுவது யாதுஎனின் யாதுஒன்றும்**
**தீமை இலாத சொலல்**.

வாய்மை என்று கூறப்படுவது எது என்றால் அது மற்றவர்க்கு ஒரு சிறிதும் தீமை இல்லாத சொற்களைச் சொல்லுதல் ஆகும். 291

2. **பொய்ம்மையும் வாய்மை இடத்த, புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்**.

குற்றம் தீர்ந்த நன்மையை விளைக்குமானால் பொய்யான சொற்களும் வாய்மை என்று கருதத்தக்க இடத்தைப் பெறுவனவாம். 292

3. **தன்னெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**தன்நெஞ்சே தன்னைச் சுடும்**.

ஒருவன் தன் நெஞ்சம் அறிவதாகிய ஒன்றைக் குறித்துப் பொய் சொல்லக்கூடாது. பொய் சொன்னால் அதைக் குறித்துத் தன் நெஞ்சமே தன்னை வருத்தும். 293

4. **உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்**
**உள்ளத்துள் எல்லாம் உளன்**.

ஒருவன் தன் உள்ளம் அறியப் பொய் இல்லாமல் நடப்பானானால், அத்தகையவன் உலகத்தாரின் உள்ளங்களில் எல்லாம் இருப்பவனாவான். 294

5. **மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு**
**தானம்செய் வாரின் தலை**.

ஒருவன் தன் மனத்தோடு பொருந்த உண்மை பேசுவானானால், அவன் தவத்தோடு தானமும் ஒருங்கே செய்வாரைவிடச் சிறந்தவன். 295

6. **பொய்யாமை அன்ன புகழ்இல்லை எய்யாமை**
**எல்லா அறமும் தரும்**.

ஒருவனுக்குப் பொய் இல்லாமல் வாழ்தலைப் போன்ற புகழ்நிலை வேறொன்றும் இல்லை; அஃது அவன் அறியாமலே அவனுக்கு எல்லா அறமும் கொடுக்கும். 296

7. **பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று**.

பொய்யாமை ஆகிய அறத்தை உண்மையாகவே போற்றி வாழ முடிந்தால் மற்ற அறங்களைச் செய்தலும் நல்லது ஆகும். 297

8. **புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை**
**வாய்மையால் காணப் படும்**.

புறத்தே தூய்மையாக விளங்குதல் நீரினால் ஏற்படும்; அதுபோல அகத்தே தூய்மையாக விளங்குதல் வாய்மையால் உண்டாகும். 298

9. **எல்லா விளக்கும் விளக்கல்ல: சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு**.

(புறத்தில் உள்ள இருளை நீக்கும்) விளக்குகள் எல்லாம் விளக்குகள் அல்ல; சான்றோர்க்கு (அகத்து இருள் நீக்கும்) பொய்யாமையாகிய விளக்கே விளக்கு ஆகும். 299

10. **யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்**
**வாய்மையின் நல்ல பிற**.

யாம் உண்மையாகக் கண்ட பொருள்களுள் வாய்மையைவிட எத்தன்மையாலும் சிறந்தவைகளாகச் சொல்லத் தக்கவை வேறு இல்லை. 300

1. **செல்இடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்இடத்துக்**
**காக்கின்என் காவாக்கால் என்?**

பலிக்கும் இடத்தில் சினம் வராமல் காப்பவனே சினம் காப்பவன்; பலிக்காத இடத்தில் காத்தால் என்ன? காக்காவிட்டால் என்ன? 301

2. **செல்லா இடத்துச் சினம்தீது செல்லிடத்தும்**
   **இல்அதனின் தீய பிற.**

பலிக்காத இடத்தில் (தன்னைவிட வறியவரிடத்தில்) சினம் கொள்வது தீங்கு; பலிக்கும் இடத்திலும் (மெலியவரிடத்திலும்) சினத்தைவிடத் தீயவை வேறில்லை. 302

3. **மறத்தல் வெகுளியை யார்மாட்டும்: தீய**
   **பிறத்தல் அதனான் வரும்.**

யாரிடத்திலும் சினங் கொள்ளாமல் அதை மறந்துவிட வேண்டும்; தீமையான விளைவுகள் அந்தச் சினத்தாலேயே ஏற்படும். 303

4. **நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்**
   **பகையும் உளவோ பிற?**

முகமலர்ச்சியையும் அகமகிழ்ச்சியையும் கொல்கின்ற சினத்தைவிட ஒருவனுக்குப் பகையானவை வேறு உள்ளனவோ? 304

5. **தன்னைத்தான் காக்கின் சினம்காக்க: காவாக்கால்**
   **தன்னையே கொல்லும் சினம்.**

ஒருவன் தன்னைத்தான் காத்துக்கொள்வதானால், சினம் வாராமல் காத்துக்கொள்ள வேண்டும்; காக்காவிட்டால் சினம் தன்னையே அழித்துவிடும். 305

6. **சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்**
   **ஏமப் புணையைச் சுடும்.**

சினம் என்னும் சேர்ந்தவரை அழிக்கும் நெருப்பு, ஒருவனுக்கு இனம் என்னும் இன்பத் தெப்பத்தையும் சுட்டழிக்கும். 306

7. **சினத்தைப் பொருள்என்று கொண்டவன் கேடு**
**நிலத்தறைந்தான் கைபிழையா தற்று**.

(தன் வல்லமை புலப்படுத்தச்) சினத்தைப் பொருளென்று கொண்டவன் அழிதல், நிலத்தை அறைந்தவனுடைய கை தப்பாததுபோல் ஆகும். 307

8. **இணர்எரி தோய்வுஅன்ன இன்னா செயினும்**
**புணரின் வெகுளாமை நன்று**.

பல சுடர்களை உடைய பெருநெருப்பில் தோய்வது போன்ற துன்பத்தை ஒருவன் செய்தபோதிலும், கூடுமானால் அவன்மேல் சினங் கொள்ளாதிருத்தல் நல்லது. 308

9. **உள்ளியது எல்லாம் உடன்எய்தும் உள்ளத்தால்**
**உள்ளான் வெகுளி எனின்**.

ஒருவன் தன் மனத்தால் சினத்தை எண்ணாதிருப்பானானால், நினைத்த நன்மைகளை எல்லாம் அவன் ஒருங்கே பெறுவான். 309

10. **இறந்தார் இறந்தார் அனையர்**: **சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை**.

சினத்தில் அளவுகடந்து சென்றவர் இறந்தவரைப் போன்றவர்; சினத்தை அடியோடு துறந்தவர் துறந்தவர்க்கு ஒப்பாவார். 310

1. **சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா**
**செய்யாமை மாசுஅற்றார் கோள்**.

சிறப்பைத் தருகின்ற பெருஞ் செல்வத்தைப் பெறுவதாக இருந்தாலும், பிறர்க்குத் துன்பம் செய்யாதிருத்தலே மாசற்றவரின் கொள்கையாம். 311

2. **கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா**
**செய்யாமை மாசுஅற்றார் கோள்**.

ஒருவன் கறுவுகொண்டு துன்பம் செய்த போதிலும் அவனுக்குத் திரும்பத் துன்பம் செய்யாதிருத்தலே மாசற்றவரின் கொள்கையாம். 312

3. **செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்**
**உய்யா விழுமம் தரும்**.

தான் ஒன்றும் செய்யாதிருக்கத் தனக்குத் தீங்கு செய்தவர்க்கும் துன்பமானவற்றைச் செய்தால், செய்த பிறகு தப்பமுடியாத துன்பத்தையே கொடுக்கும். 313

4. **இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயம் செய்து விடல்**.

இன்னா செய்தவரைத் தண்டித்தல், அவரே நாணும் படியாக அவர்க்கு நல்லுதவி செய்து, அவருடைய தீமையையும் நன்மையயும் மறந்துவிடுதலாகும். 314

5. **அறிவினான் ஆகுவது உண்டோ பிறதின்நோய்**
**தம்நோய்போல் போற்றாக் கடை?**

மற்ற உயிரின் துன்பத்தைத் தன் துன்பம்போல் கருதிக் காப்பாற்றாவிட்டால், பெற்றுள்ள அறிவினால் ஆகும் பயன் உண்டோ? 315

6. **இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை**
**வேண்டும் பிறன்கண் செயல்**.

ஒருவன் துன்பமானவை என்று தன் வாழ்க்கையில் கண்டு உணர்ந்தவைகளை மற்றவனிடத்தில் செய்யாமல் தவிர்க்க வேண்டும். 316

7. **எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தான் ஆம்**
**மாணாசெய் யாமை தலை**.

எவ்வளவு சிறியதாயினும் எக்காலத்திலும் எவரிடத்திலும் மனத்தால் எண்ணி உண்டாகின்ற துன்பச் செயல்களைச் செய்யாதிருத்தலே சிறந்தது. 317

8. **தன்உயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ**
**மன்னுயிர்க்கு இன்னா செயல்?**

தன் உயிர்க்குத் துன்பமானவை இவை என்று உணர்ந்தவன், மற்ற உயிர்களுக்கு அத்துன்பங்களைச் செய்தல் என்ன காரணத்தாலோ? 318

9. **பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா**
**பிற்பகல் தாமே வரும்**.

முற்பகலில் மற்றவர்க்குத் துன்பமானவற்றைச் செய்தால் அவ்வாறு செய்தவர்க்கே பிற்பகலில் துன்பங்கள் தாமாகவே வந்து சேரும். 319

10. **நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம்: நோய்செய்யார்**
**நோயின்மை வேண்டு பவர்**.

துன்பம் எல்லாம் துன்பம் செய்தவரையே சார்வன. ஆகையால் துன்பம் இல்லாமல் வாழ்தலை விரும்புகின்றவர், பிறர்க்குத் துன்பம் செய்யார். 320

1. **அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்**
**பிறவினை எல்லாம் தரும்**.

அறமாகிய செயல் எது என்றால் ஓர் உயிரையும் கொல்லாமையாகும்; கொல்லுதல் அறமல்லாத செயல்கள் எல்லாவற்றையும் விளைக்கும். 321

2. **பகுத்துஉண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை**.

கிடைத்ததைப் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்டு பல உயிர்களையும் காப்பாற்றுதல், அறநூலார் தொகுத்த அறங்கள் எல்லாவற்றிலும் தலையான அறமாகும். 322

3. **ஒன்றாக நல்லது கொல்லாமை: மற்றுஅதன்**
**பின்சாரப் பொய்யாமை நன்று**.

இணையில்லாத ஓர் அறமாகக் கொல்லாமை நல்லது; அதற்கு அடுத்த நிலையில் வைத்துக் கூறத்தக்கதாகப் பொய்யாமை நல்லது. 323

4. **நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**கொல்லாமை சூழும் நெறி**.

நல்ல வழி என்று அறநூல்களால் சொல்லப்படுவது எது என்றால், எந்த உயிரையும் கொல்லாத அறத்தைப் போற்றும் நெறியாகும். 324

5. **நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்**
**கொல்லாமை சூழ்வான் தலை**.

வாழ்க்கையின் தன்மையைக் கண்டு அஞ்சித் துறந்தவர்கள் எல்லாரிலும், கொலை செய்வதற்கு அஞ்சிக் கொல்லாத அறத்தைப் போற்றுகின்றவன் உயர்ந்தவன். 325

6. **கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்**
**செல்லாது உயிருண்ணும் கூற்று**.

கொல்லாத அறத்தை மேற்கொண்டு நடக்கின்றவனுடைய வாழ்நாளின்மேல், உயிரைக் கொண்டு செல்லும் கூற்றுவனும் செல்லமாட்டான். 326

7. **தன்உயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**
**இன்னுயிர் நீக்கும் வினை**.

தன் உயிர் உடம்பிலிருந்து நீங்கிப் போவதாக நேர்ந்தாலும், அதைத் தடுப்பதற்காகத் தான் வேறோர் உயிரை நீக்கும் செயலைச் செய்யக்கூடாது. 327

8. **நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்**
**கொன்றாகும் ஆக்கம் கடை**.

கொலையால் நன்மையாக விளையும் ஆக்கம் பெரிதாக இருந்தாலும், சான்றோர்க்குக் கொலையால் வரும் ஆக்கம் மிக இழிவானதாகும். 328

9. **கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மை தெரிவா ரகத்து**.

கொலைத்தொழிலினராகிய மக்கள் அதன் இழிவை ஆராய்ந்தவரிடத்தில் புலைத்தொழிலுடையவராய்த் தாழ்ந்து தோன்றுவர். 329

10. **உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்**
**செல்லாத்தீ வாழ்க்கை யவர்**.

நோய் மிகுந்த உடம்புடன் வறுமையான தீய வாழ்க்கை உடையவர், முன்பு கொலை பல செய்து உயிர்களை உடம்புகளிலிருந்து நீக்கினவர் என்று அறிஞர் கூறுவர். 330

1. **நில்லாத வற்றை நிலையின என்றுஉணரும்**
**புல்லறி வாண்மை கடை**.

நிலையில்லாதவைகளை நிலையானவை என்று மயங்கி உணரும் புல்லறிவு உடையவராக இருத்தல் வாழ்க்கையில் இழிந்த நிலையாகும். 331

2. **கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்**
**போக்கும் அதுவிளிந் தற்று**.

பெரிய செல்வம் வந்து சேர்தல், கூத்தாடுமிடத்தில் கூட்டம் சேர்வதைப் போன்றது; அது நீங்கிப் போதலும் கூத்து முடிந்ததும் கூட்டம் கலைவதைப் போன்றது. 332

3. **அற்கா இயல்பிற்றுச் செல்வம்: அதுபெற்றால்**
**அற்குப ஆங்கே செயல்**.

செல்வம் நிலைக்காத இயல்பை உடையது; அத்தகைய செல்வத்தைப் பெற்றால், பெற்ற அப்பொழுதே நிலையான அறங்களைச் செய்ய வேண்டும். 333

4. **நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்**
**வாள்அது உணர்வார்ப் பெறின்**.

வாழ்க்கையை ஆராய்ந்து உணர்வாரைப் பெற்றால், நாள் என்பது ஒரு கால அளவுபோல் காட்டி, உயிரை உடம்பிலிருந்து பிரித்து அறுக்கும் வாளாக உள்ளது. 334

5. **நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை**
**மேற்சென்று செய்யப் படும்**.

நாவை அடக்கி விக்கல் மேலெழுவதற்கு முன்னே (இறப்பு நெருங்குவதற்குமுன்) நல்ல அறச்செயல் விரைந்து செய்யத்தக்கதாகும். 335

6. **நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்**
   **பெருமை உடைத்துஇவ் வுலகு**.

நேற்று இருந்தவன் ஒருவன், இன்று இல்லாமல் இறந்து போனான் என்று சொல்லப்படும் நிலையாமை ஆகிய பெருமை உடையது இவ்வுலகம். 336

7. **ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப**
   **கோடியும் அல்ல பல**.

அறிவில்லாதவர் ஒருவேளையாவது வாழ்க்கையின் தன்மையை ஆராய்ந்து அறிவதில்லை; ஆனால் வீணில் எண்ணுவனவோ ஒரு கோடியும் அல்ல; மிகப் பல எண்ணங்கள். 337

8. **குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே**
   **உடம்போடு உயிரிடை நட்பு**.

உடம்போடு உயிர்க்கு உள்ள உறவு, தான் இருந்த கூடு தனியே இருக்க அதைவிட்டு வேறிடத்திற்குப் பறவை பறந்தாற் போன்றது. 338

9. **உறங்கு வதுபோலும் சாக்காடு**: **உறங்கி**
   **விழிப்பது போலும் பிறப்பு**.

இறப்பு எனப்படுவது ஒருவனுக்கு உறக்கம் வருதலைப் போன்றது; பிறப்பு எனப்படுவது உறக்கம் நீங்கி விழித்துக் கொள்வதைப் போன்றது. 339

10. **புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்**
    **துச்சில் இருந்த உயிர்க்கு**?

(நோய்களுக்கு இடமாகிய) உடம்பில் ஒரு மூலையில் குடியிருந்த உயிர்க்கு, நிலையாகப் புகுந்திருக்கும் வீடு இதுவரையில் அமையவில்லையோ? 340

1. **யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்**.

ஒருவன் எந்தப் பொருளிலிருந்து, பற்று நீங்கியவனாக இருக்கின்றானோ, அந்தந்தப் பொருளால் அவன் துன்பம் அடைவதில்லை. 341

2. **வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்**
**ஈண்டுஇயற் பால பல**.

துன்பமில்லாத நிலைமை வேண்டுமானால், எல்லாப் பொருள்களும் உள்ள காலத்திலேயே துறக்க வேண்டும. துறந்தபின் இங்குப் பெறக்கூடும் இன்பங்கள் பல. 342

3. **அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை: விடல்வேண்டும்**
**வேண்டிய எல்லாம் ஒருங்கு**.

ஐம்பொறிகளுக்கு உரிய ஐந்து புலன்களின் ஆசையையும் வெல்லுதல் வேண்டும். அவற்றிற்கு வேண்டிய பொருள்களை எல்லாம் ஒரு சேர விடல் வேண்டும். 343

4. **இயல்பாகும் நோன்பிற்குஒன்று இன்மை உடைமை**
**மயலாகும் மற்றும் பெயர்த்து**.

தவம் செய்வதற்கு ஒரு பற்றும் இல்லாதிருத்தல் இயல்பாகும்; பற்று உடையவராக இருத்தல் மீண்டும் மயங்குதற்கு வழியாகும். 344

5. **மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்புஅறுக்கல்**
**உற்றார்க்கு உடம்பும் மிகை?**

பிறவித் துன்பத்தைப் போக்க முயல்கின்றவர்க்கு உடம்பும் மிகையான பொருள்; ஆகையால் அதற்குமேல் வேறு தொடர்பு கொள்வது ஏனோ? 345

6. **யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்**.

உடம்பை யான் எனக் கருதலும் தொடர்பு இல்லாத பொருளை எனது எனக் கருதலுமாகிய மயக்கத்தைப் போக்குகின்றவன், தேவர்க்கும் எட்டாத உயர்ந்த நிலை அடைவான். 346

7. **பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்**
**பற்றி விடாஅ தவர்க்கு**.

யான் எனது என்னும் இருவகைப் பற்றுக்களையும் பற்றிக் கொண்டு விடாதவரை, துன்பங்களும் விடாமல் பற்றிக் கொள்கின்றன. 347

8. **தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்**.

முற்றத் துறந்தவரே உயர்ந்த நிலையினர் ஆவர். அவ்வாறு துறக்காத மற்றவர், அறியாமையாகிய வலையில் அகப்பட்டவர் ஆவர். 348

9. **பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்: மற்று**
**நிலையாமை காணப் படும்**.

இருவகைப் பற்றும் அற்றபொழுதே அந்நிலை பிறவித் துன்பத்தை ஒழிக்கும்; இல்லையானால் (பிறவித்துன்பம் மாறி மாறி வந்து) நிலையாமை காணப்படும். 349

10. **பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு**.

பற்றில்லாதவனாகிய கடவுளுடைய பற்றை மட்டும் பற்றிக் கொள்ள வேண்டும்; உள்ள பற்றுக்களை விட்டொழிப்பதற்கே அப்பற்றைப் பற்ற வேண்டும். 350

1. **பொருள்அல்ல வற்றைப் பொருள்என்று உணரும்**
**மருளான்ஆம் மாணாப் பிறப்பு**.

மெய்ப்பொருள் அல்லாதவைகளை மெய்ப்பொருள் என்று தவறாக உணர்கின்ற மயக்க உணர்வால் சிறப்பில்லாத துன்பப்பிறவி உண்டாகும். 351

2. **இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி**
**மாசஅறு காட்சி யவர்க்கு**.

மயக்கம் நீங்கிக் குற்றம் அற்ற மெய்யுணர்வை உடையவர்க்கு, அம் மெய்யுணர்வு அறியாமையை நீக்கி இன்ப நிலையைக் கொடுக்கும். 352

3. **ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்**
   **வானம் நணிய உடைத்து**.

ஐயத்திலிருந்து நீங்கி மெய்யுணர்வு பெற்றவர்க்கு அடைந்துள்ள இவ்வுலகைவிட. அடையவேண்டிய மேலுலகம் அண்மையில் உள்ளதாகும். 353

4. **ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம்இன்றே**
   **மெய்உணர்வு இல்லா தவர்க்கு**.

மெய்யுணர்வு இல்லாதவர்க்கு ஐந்து புலன்களின் வேறுபாட்டால் வளர்ந்த ஐந்துவகை உணர்வும் முற்றப்பெற்ற போதிலும் பயன் இல்லை. 354

5. **எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்**
   **மெய்ப்பொருள் காண்பது அறிவு**.

எப்பொருள் எத்தன்மையதாய்த் தோன்றினாலும் (அத் தோற்றத்தை மட்டும் கண்டு மயங்காமல்) அப்பொருளின் உண்மையான இயல்பை அறிவதே மெய்யுணர்வாகும். 355

6. **கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
   **மற்றுஈண்டு வாரா நெறி**.

கற்க வேண்டியவற்றைக் கற்று, இங்கு மெய்ப் பொருளை உணர்ந்தவர்; மீண்டும் இப் பிறப்பிற்கு வாராத வழியை அடைவர். 356

7. **ஓர்த்துஉள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்**
   **பேர்த்துஉள்ள வேண்டா பிறப்பு**.

ஒருவனுடைய உள்ளம் உண்மைப் பொருளை ஆராய்ந்து உறுதியாக உணர்ந்தால், அவனுக்கு மீண்டும் பிறப்பு உள்ளதென எண்ண வேண்டா. 357

8. **பிறப்புஎன்னும் பேதைமை நீங்கச் சிறப்புஎன்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு**.

பிறவித் துன்பத்திற்குக் காரணமான அறியாமை நீங்குமாறு, முத்தி என்னும் சிறந்த நிலைக்குக் காரணமான செம்பொருளைக் காண்பதே மெய்யுணர்வு. 358

9. **சார்புஉணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்**
**சார்தரா சார்தரும் நோய்**.

எல்லாப் பொருளுக்கும் சார்பான செம்பொருளை உணர்ந்து பற்றுக் கெடுமாறு ஒழுகினால், சார்வதற்கு உரிய துன்பங்கள் திரும்ப வந்து அடையா. 359

10. **காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்**
**நாமம் கெடக்கெடும் நோய்**.

விருப்பு, வெறுப்பு, அறியாமை ஆகிய இக்குற்றங்கள் மூன்றனுடைய பெயரும் கெடுமாறு ஒழுகினால் துன்பங்கள் வாராமற் கெடும். 360

1. **அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்**
**தவாஅப் பிறப்புஈனும் வித்து**.

எல்லா உயிர்களுக்கும் எக்காலத்திலும் ஒழியாமல் வருகின்ற பிறவித் துன்பத்தை உண்டாக்கும் வித்து அவா என்று கூறுவர். 361

2. **வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை: மற்றுஅது**
**வேண்டாமை வேண்ட வரும்**.

ஒருவன் ஒன்றை விரும்புவதானால், பிறவா நிலைமையை விரும்பவேண்டும்; அது, அவா அற்ற நிலையை விரும்பினால் உண்டாகும். 362

3. **வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை:**
**யாண்டும் அஃதுஒப்பது இல்**.

அவா அற்ற நிலைமை போன்ற சிறந்த செல்வம் இவ்வுலகில் இல்லை; வேறு எங்கும் அதற்கு நிகரான ஒன்று இல்லை. 363

4. **தூஉய்மை என்பது அவாவின்மை: மற்றுஅது**
**வாஅய்மை வேண்ட வரும்**.

தூயநிலை என்று கூறப்படுவது அவா இல்லாதிருத்தலே யாகும்; அவா அற்ற அத்தன்மை, மெய்ப் பொருளை விரும்புவதால் உண்டாகும். 364

5. **அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்**
**அற்றாக அற்றது இலர்**.

பற்றற்றவர் என்று கூறப்படுவோர் அவா அற்றவரே; அவா அறாத மற்றவர், அவ்வளவாகப் பற்று அற்றவர் அல்லர். 365

6. **அஞ்சுவது ஓரும் அறனே: ஒருவனை**
**வஞ்சிப்பது ஓரும் அவா**.

ஒருவன் அவாவிற்கு அஞ்சி வாழ்வதே அறம்; ஏன் எனில் ஒருவனைச் சோர்வு கண்டு கெடுத்து வஞ்சிப்பது அவாவே. 366

7. **அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை**
**தான்வேண்டும் ஆற்றான் வரும்**.

ஒருவன் ஆசையை முழுதும் ஒழித்தால், அவன் கெடாமல் வாழ்வதற்கு உரிய நல்ல செயல் அவன் விரும்புமாறு வாய்க்கும். 367

8. **அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம்அஃது உண்டேல்**
**தவாஅது மேன்மேல் வரும்**.

அவா இல்லாதவர்க்குத் துன்பம் இல்லையாகும்; அவா இருந்தால் எல்லாத் துன்பங்களும் மேலும்மேலும் ஒழியாமல் வரும். 368

9. **இன்பம் இடையறாது ஈண்டும் அவாவென்னும்**
**துன்பத்துள் துன்பம் கெடின்**.

அவா என்றுசொல்லப் படுகின்ற துன்பங்களுள் பொல்லாத துன்பம் கெடுமானால் இவ்வுலகிலும் இன்பம் இடையறாமல் வாய்க்கும். 369

10. **ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே**
    **பேரா இயற்கை தரும்.**

ஒருபோதும் நிரம்பாத தன்மை உடைய அவாவை ஒழித்தால் ஒழித்த அந்நிலையே எப்போதும் மாறாதிருக்கும் இன்ப வாழ்வைத் தரும். 370

1. **ஆகுஊழால் தோன்றும் அசைவின்மை: கைப்பொருள்**
    **போகுஊழால் தோன்றும் மடி.**

கைப்பொருள் ஆவதற்குக் காரணமான ஊழால் சோர்வில்லாத முயற்சி உண்டாகும்; கைப்பொருள் போவதற்குக் காரணமான ஊழால் சோம்பல் ஏற்படும். 371

2. **பேதைப் படுக்கும் இழவுஊழ்: அறிவகற்றும்**
    **ஆகல்ஊழ் உற்றக் கடை.**

பொருள் இழத்தற்குக் காரணமான ஊழ், பேதை யாக்கும்; பொருள் ஆவதற்குக் காரணமான ஊழ், அறிவைப் பெருக்கும். 372

3. **நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றும்தன்**
    **உண்மை அறிவே மிகும்.**

ஒருவன் நுட்பமான நூல் பலவற்றைக் கற்றாலும், ஊழிற்கு ஏற்றவாறு அவனுக்கு உள்ளதாகும் அறிவே மேற்பட்டுத் தோன்றும். 373

4. **இருவேறு உலகத்து இயற்கை: திருவேறு**
    **தெள்ளியர் ஆதலும் வேறு.**

உலகத்தின் இயற்கை, ஊழின் காரணமாக இருவேறு வகைப்படும்; செல்வம் உடையவராதலும் வேறு, அறிவு உடையவராதலும் வேறு. 374

5. **நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்**
**நல்லவாம் செல்வம் செயற்கு**.

செல்வத்தை ஈட்டும் முயற்சிக்கு, ஊழ்வகையால் நல்லவை எல்லாம் தீயவை ஆதலும் உண்டு; தீயவை நல்லவை ஆதலும் உண்டு. 375

6. **பரியினும் ஆகாவாம் பால்அல்ல உய்த்துச்**
**சொரியினும் போகா தம**.

ஊழால் தமக்கு உரியவை அல்லாத பொருள்கள் வருந்திக் காப்பாற்றினாலும் நில்லாமல் போகும்; தமக்கு உரியவை கொண்டுபோய்ச் சொரிந்தாலும் போகா. 376

7. **வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி**
**தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது**.

ஊழ் ஏற்படுத்திய வகையால் அல்லாமல் முயன்று கோடிக்கணக்கான பொருள்களைச் சேர்த்தவர்க்கும் அவற்றை நுகர முடியாது. 377

8. **துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால**
**ஊட்டா கழியும் எனின்**.

வரவேண்டிய துன்பங்கள் வந்து வருத்தாமல் நீங்குமானால், நுகரும் பொருள் இல்லாத வறியவர் துறவறம் மேற்கொள்வர். 378

9. **நன்றுஆம்கால் நல்லவாக் காண்பவர் அன்றுஆம்கால்**
**அல்லற் படுவது எவன்?**

நல்வினை விளையும்போது நல்லவை எனக் கருதி மகிழ்கின்றவர், தீவினை விளையும்போது துன்பப்பட்டுக் கலங்குவது ஏனோ? 379

10. **ஊழின் பெருவலி யாவுள? மற்றொன்று**
**சூழினும் தான்முந் துறும்**.

ஊழைவிட மிக்க வலிமையுள்ளவை வேறு எவை உள்ளன? ஊழை விலக்கும் பொருட்டு மற்றொரு வழியை ஆராய்ந்தாலும் அங்கும் தானே முன் வந்து நிற்கும். 380

1. **படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு.**

படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என்று கூறப்படும் ஆறு அங்கங்களையும் உடையவனே அரசருள் ஆண் சிங்கம் போன்றவன். 381

2. **அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் இந்நான்கும்**
**எஞ்சாமை வேந்தற்கு இயல்பு.**

அஞ்சாமை, ஈகை, அறிவுடைமை, ஊக்கமுடைமை ஆகிய இந்த நான்கு பண்புகளும் குறைவுபடாமல் இருத்தலே அரசனுக்கு இயல்பாகும். 382

3. **தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்**
**நீங்கா நிலன்ஆள் பவர்க்கு.**

காலம் தாழ்த்தாத தன்மை, கல்வியுடைமை, துணிவுடைமை ஆகிய இந்த மூன்று பண்புகளும் நிலத்தை ஆளும் அரசனுக்கு நீங்காமல் இருக்க வேண்டியவை. 383

4. **அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா**
**மானம் உடையது அரசு.**

ஆட்சி முறைக்கு உரிய அறத்தில் தவறாமல், அறமல்லாதவற்றை நீக்கி, வீரத்தில் குறைபடாத மானத்தை உடையவனே சிறந்த அரசன் ஆவான். 384

5. **இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு.**

பொருள் வரும் வழிகளை மேன்மேலும் இயற்றலும் வந்த பொருள்களைச் சேர்த்தலும், காத்தலும், காத்தவற்றை வகுத்துச் செலவு செய்தலும் வல்லவன் அரசன். 385

6. **காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்**
**மீக்கூறும் மன்னன் நிலம்.**

காண்பதற்கு எளியவனாய், கடுஞ்சொல் கூறாதவனாய் இருந்தால், அந்த மன்னனுடைய ஆட்சிக்கு உட்பட்ட நாட்டை உலகம் புகழும். 386

7. **இன்சொலால் ஈத்துஅளிக்க வல்லார்க்குத் தன்சொலால்**
   **தான்கண் டனைத்துஇவ் வுலகு**.

இனிய சொற்களுடன் தக்கவர்க்குப் பொருளை உதவிக் காக்கவல்ல அரசனுக்கு இவ்வுலகம் தன் புகழோடு தான் கருதியபடி அமைவதாகும். 387

8. **முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
   **இறைஎன்று வைக்கப் படும்**.

நீதிமுறை செய்து குடிமக்களைக் காப்பாற்றும் மன்னவன், மக்களுக்குத் தலைவன் என்று தனியே கருதி மதிக்கப்படுவான். 388

9. **செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
   **கவிகைக்கீழ்த் தங்கும் உலகு**.

குறைகூறுவோரின் சொற்களைச் செவி கைக்கும் நிலையிலும் பொறுக்கின்ற பண்பு உடைய அரசனது குடைநிழலில் உலகம் தங்கும். 389

10. **கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்**
    **உடையான்ஆம் வேந்தர்க்கு ஒளி**.

கொடை, அருள், செங்கோல்முறை, தளர்ந்த குடிகளைக் காத்தல் ஆகிய நான்கும் உடைய அரசன், அரசர்க்கெல்லாம் விளக்குப் போன்றவன். 390

1. **கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
   **நிற்க அதற்குத் தக**.

கற்கத் தகுந்த நூல்களைக் குற்றமறக் கற்க வேண்டும்; அவ்வாறு கற்ற பிறகு கற்ற கல்விக்குத் தக்கவாறு நெறியில் நிற்க வேண்டும். 391

2. **எண்என்ப ஏனை எழுத்துஎன்ப இவ்விரண்டும்**
**கண்என்ப வாழும் உயிர்க்கு**.

எண் என்று சொல்லப்படுவன, எழுத்து என்று சொல்லப்படுவன ஆகிய இருவகைக் கலைகளையும் வாழும் மக்களுக்குக் கண்கள் என்று கூறுவர். 392

3. **கண்உடையர் என்பவர் கற்றோர்: முகத்துஇரண்டு**
**புண்உடையர் கல்லா தவர்**.

கண்ணுடையவர் என்று உயர்வாகக் கூறப்படுகின்றவர் கற்றவரே; கல்லாதவர் முகத்தில் இரண்டு புண் உடையவர் ஆவர். 393

4. **உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்**
**அனைத்தே புலவர் தொழில்**.

மகிழும்படியாகக் கூடிப் பழகி. (இனி இவரை எப்போது காண்போம் என்று) வருந்தி நினைக்கும் படியாகப் பிரிதல் புலவரின் தொழிலாகும். 394

5. **உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்**
**கடையரே கல்லா தவர்**.

செல்வர்முன் வறியவர் நிற்பதுபோல் (கற்றவர்முன்) ஏங்கித் தாழ்ந்து நின்றும் கல்வி கற்றவரே உயர்ந்தவர்; கல்லாதவர் இழிந்தவர். 395

6. **தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத்து ஊறும் அறிவு**.

மணலில் உள்ள கேணியில் தோண்டிய அளவிற்கு நீர் ஊறும்; அதுபோல், மக்களுக்குக் கற்ற கல்வியின் அளவிற்கு அறிவு ஊறும். 396

7. **யாதானும் நாடாமால் ஊராமால் என்ஒருவன்**
**சாந்துணையுங் கல்லாத வாறு**.

கற்றவனுக்குத் தன் நாடும் ஊரும்போலவே வேறு எதுவாயினும் நாடாகும்; ஊராகும்; ஆகையால் ஒருவன் சாகும்வரையில் கல்லாமல் காலங்கழிப்பது ஏன்? 397

8. **ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து**.

ஒரு பிறப்பில் தான் கற்ற கல்வியானது அப்பிறப்பிற்கு மட்டும் அல்லாமல் ஒருவனுக்கு எழுபிறப்பிலும் உதவும் தன்மையுடையதாகும். 398

9. **தாம்இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்**.

தாம் இன்புறுவதற்குக் காரணமான கல்வியால் உலகமும் இன்புறுவதைக் கண்டு, கற்றறிந்த அறிஞர் மேன்மேலும் (அக்கல்வியையே) விரும்புவர். 399

10. **கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடுஅல்ல மற்றை யவை**.

ஒருவனுக்கு அழிவு இல்லாத சிறந்த செல்வம் கல்வியே ஆகும்; கல்வி தவிர மற்றப் பொருள்கள் (அத்தகைய சிறப்புடைய ) செல்வம் அல்ல. 400

1. **அரங்குஇன்றி வட்டுஆடி யற்றே நிரம்பிய**
**நூல்இன்றிக் கோட்டி கொளல்**.

அறிவு நிரம்புவதற்குக் காரணமான நூல்களைக் கற்காமல் கற்றவரிடம் சென்று பேசுதல், சூதாடும் அரங்கு இழைக்காமல் வட்டுக்காயை உருட்டி ஆடினாற் போன்றது. 401

2. **கல்லாதான் சொல்கா முறுதல் முலைஇரண்டும்**
**இல்லாதாள் பெண்காமுற் றற்று**.

(கற்றவரின் அவையில்) கல்லாதவன் ஒன்றைச் சொல்ல விரும்புதல், முலை இரண்டும் இல்லாதவள் பெண் தன்மையை விரும்பினாற் போன்றது. 402

3. **கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்**
**சொல்லாது இருக்கப் பெறின்**.

கற்றவரின் முன்னிலையில் ஒன்றையும் சொல்லாமல் அமைதியாக இருக்கப்பெற்றால், கல்லாதவர்களும் மிகவும் நல்லவரே ஆவர். 403

4. **கல்லாதான் ஒட்பம் கழியநன்று ஆயினும்**
   **கொள்ளார் அறிவுஉடை யார்**.

கல்லாதவனுடைய அறிவுடைமை ஒருகால் மிக நன்றாக இருந்தாலும் அறிவுடையோர் அதனை அறிவின் பகுதியாக ஏற்றுக் கொள்ளமாட்டார். 404

5. **கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து**
   **சொல்லாடச் சோர்வு படும்**.

கல்லாத ஒருவன் தன்னைத் தான் மதித்துக் கொள்ளும் மதிப்பு (கற்றவரிடம்) கூடிப் பேசும்போது அப்பேச்சினால் கெடும். 405

6. **உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்**
   **களர்அனையர் கல்லா தவர்**.

கல்லாதவர் உயிரோடிருக்கின்றனர் என்று சொல்லப் படும் அளவினரே அல்லாமல், ஒன்றும் விளையாத களர்நிலத்திற்கு ஒப்பாவர். 406

7. **நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்**
   **மண்மாண் புனைபாவை யற்று**.

நுட்பமானதாய் மாட்சியுடையதாய் ஆராயவல்லதான அறிவு இல்லாதவனுடைய எழுச்சியான அழகு, மண்ணால் சிறப்பாகப் புனையப்பட்ட பாவை போன்றது. 407

8. **நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே**
   **கல்லார்கண் பட்ட திரு**.

கல்லாதவரிடம் சேர்ந்துள்ள செல்வமானது, கற்றறிந்த நல்லவரிடம் உள்ள வறுமையைவிட மிகத் துன்பம் செய்வதாகும். 408

9. **மேல்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்**
**கற்றார் அனைத்திலர் பாடு**.

கல்லாதவர் உயர்ந்த குடியில் பிறந்தவராக இருப்பினும் தாழ்ந்த குடியில் பிறந்திருந்தும் கல்வி கற்றவரைப் போன்ற பெருமை இல்லாதவரே. 409

10. **விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
**கற்றாரோடு ஏனை யவர்**.

அறிவு விளங்குவதற்குக் காரணமான நூல்களைக் கற்றவரோடு கல்லாதவர், மக்களோடு விலங்குகளுக்கு உள்ள அவ்வளவு வேற்றுமை உடையவர். 410

1. **செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை**.

செவியால் கேட்டறியும் செல்வம், செல்வங்களுள் ஒன்றாகப் போற்றப்படும் செல்வமாகும்; அச் செல்வம் செல்வங்கள் எல்லாவற்றிலும் தலையானதாகும். 411

2. **செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கும் ஈயப் படும்**.

செவிக்குக் கேள்வியாகிய உணவு இல்லாதபோது (அதற்குத் துணையாக உடலை ஓம்புமாறு) வயிற்றுக்கும் சிறிது உணவு தரப்படும். 412

3. **செவிஉணவிற் கேள்வி யுடையார் அவிஉணவின்**
**ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து**.

செவியுணவாகிய கேள்வி உடையவர் நிலத்தில் வாழ்கின்றவரே ஆயினும், அவி உணவைக்கொள்ளும் தேவரோடு ஒப்பாவர். 413

4. **கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்றாம் துணை**.

நூல்களைக் கற்கவில்லையாயினும், கற்றறிந்தவரிடம் கேட்டறிய வேண்டும்; அஃது ஒருவனுக்கு வாழ்க்கையில் தளர்ச்சி வந்தபோது ஊன்றுகோல்போல் துணையாகும். 414

5. **இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே**
**ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்**.

ஒழுக்கமுடைய சான்றோரின் வாய்ச்சொற்கள், வழுக்கல் உடைய சேற்றுநிலத்தில் ஊன்றுகோல்போல் வாழ்க்கையில் உதவும். 415

6. **எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்**
**ஆன்ற பெருமை தரும்**.

எவ்வளவு சிறிதேயாயினும் நல்லவற்றைக் கேட்டறிய வேண்டும்; கேட்ட அந்த அளவிற்கு அவை நிறைந்த பெருமையைத் தரும். 416

7. **பிழைத்துஉணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்து**
**ஈண்டிய கேள்வி யவர்**.

நுட்பமாக உணர்ந்து நிறைந்த கேள்வியறிவை உடையவர். (ஒருகால் பொருள்களைத்) தவறாக உணர்ந்திருந்தாலும் பேதைமையானவற்றைச் சொல்லார். 417

8. **கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்**
**தோட்கப் படாத செவி**.

கேள்வியறிவால் துளைக்கப்படாத செவிகள், (இயற்கையான துளைகள் கொண்டு ஒசையைக்) கேட்டறிந்தலும், கேளாத செவிட்டுத் தன்மை உடையனவே. 418

9. **நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**
**வாயினர் ஆதல் அரிது**.

நுட்பமான பொருள்களைக் கேட்டறிந்தவர் அல்லாத மற்றவர், வணக்கமான சொற்களைப் பேசும் வாயினை உடையவராக முடியாது. 419

10. **செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்**
**அவியினும் வாழினும் என்?**

செவியால் கேள்விச்சுவை உணராமல் வாயின் சுவையுணர்வு மட்டும் உடைய மக்கள், இறந்தாலும் என்ன? உயிரோடு வாழ்ந்தாலும் என்ன? 420

1. **அறிவற்றங் காக்கும் கருவி செறுவார்க்கும்**
   **உள்ளழிக்கல் ஆகா அரண்.**

அறிவு, அழிவு வராமல் காக்கும் கருவியாகும்; அன்றியும் பகைகொண்டு எதிர்ப்பவர்க்கும் அழிக்க முடியாத உள்ளரணும் ஆகும். 421

2. **சென்ற இடத்தால் செலவிடா தீதுஒரீஇ**
   **நன்றின்பால் உய்ப்பது அறிவு.**

மனத்தைச் சென்ற இடத்தில் செல்லவிடாமல், தீமையானதிலிருந்து நீக்கிக் காத்து நன்மையானதில் செல்லவிடுவதே அறிவாகும். 422

3. **எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
   **மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

எப்பொருளை யார் யாரிடம் கேட்டாலும் (கேட்டவாறே கொள்ளாமல்) அப்பொருளின் மெய்யான பொருளைக் காண்பதே அறிவாகும். 423

4. **எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்**
   **நுண்பொருள் காண்பது அறிவு.**

தான் சொல்லுவன எளிய பொருளையுடையனவாகப் பதியுமாறு சொல்லித், தான் பிறரிடம் கேட்பவற்றின் நுட்பமான பொருளையும் ஆராய்ந்து காண்பது அறிவாகும். 424

5. **உலகம் தழீஇயது ஒட்பம்: மலர்தலும்**
   **கூம்பலும் இல்லது அறிவு.**

உலகத்து உயர்ந்தவரை நட்பாக்கிக்கொள்வது சிறந்த அறிவு; முன்னே மகிழ்ந்து விரிதலும் பின்னே வருந்திக் குவிதலும் இல்லாதது அறிவு. 425

6. **எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு**
**அவ்வது உறைவது அறிவு**.

உலகம் எவ்வாறு நடைபெறுகின்றதோ, உலகத்தோடு பொருந்திய வகையில் தானும் அவ்வாறு நடப்பதே அறிவாகும். 426

7. **அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்**
**அஃதுஅறி கல்லா தவர்**.

அறிவுடையவர் எதிர்காலத்தில் நிகழப்போவதை முன்னே எண்ணி அறியவல்லார்; அறிவில்லாதவர் அதனை அறிய முடியாதவர். 427

8. **அஞ்சுவது அஞ்சாமை பேதைமை: அஞ்சுவது**
**அஞ்சல் அறிவார் தொழில்**.

அஞ்சத்தக்கதைக் கண்டு அஞ்சாதிருப்பது அறியாமையாகும்; அஞ்சத்தக்கதைக் கண்டு அஞ்சுவதே அறிவுடைவரின் தொழிலாகும். 428

9. **எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை**
**அதிர வருவதோர் நோய்**.

வரப்போவதை முன்னே அறிந்து காத்துக் கொள்ளவல்ல அறிவுடையவர்க்கு, அவர் நடுங்கும்படியாக வரக்கூடிய துன்பம் ஒன்றும் இல்லை. 429

10. **அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்**.

அறிவுடையவர் (வேறொன்றும் இல்லாதிருப்பினும்) எல்லாம் உடையவரே ஆவர்; அறிவில்லாதவர் வேறு என்ன உடையவராக இருப்பினும் ஒன்றும் இல்லாதவரே ஆவர். 430

1. **செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்**
**பெருக்கம் பெருமித நீர்த்து**.

செருக்கும் சினமும் காமமும் ஆகிய இந்தக் குற்றங்கள் இல்லாதவருடைய வாழ்வில் காணும் பெருக்கம் மேம்பாடு உடையதாகும். 431

2. **இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா**
**உவகையும் ஏதம் இறைக்கு**.

பொருள் கொடாத தன்மையும், மாட்சியில்லாத மானமும், தகுதியற்ற மகிழ்ச்சியும் தலைவனாக இருப்பவனுக்குக் குற்றங்களாகும். 432

3. **தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பழிநாணு வார்**.

பழி நாணுகின்ற பெருமக்கள் தினையளவாகிய சிறு குற்றம் நேர்ந்தாலும், அதைப் பனையளவாகக் கருதிக் (குற்றம் செய்யாமல்) காத்துக்கொள்வர். 433

4. **குற்றமே காக்க பொருளாக குற்றமே**
**அற்றம் தரூஉம் பகை**.

குற்றமே ஒருவனுக்கு அழிவை உண்டாக்கும் பகையாகும். ஆகையால் குற்றம் செய்யாமல் இருப்பதே நோக்கமாகக் கொண்டு காத்துக் கொள்ளவேண்டும். 434

5. **வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும்**.

குற்றம் நேர்வதற்கு முன்னமே வராமல் காத்துக் கொள்ளாதவனுடைய வாழ்க்கை, நெருப்பின்முன் நின்ற வைக்கோல்போர்போல் அழிந்துவிடும். 435

6. **தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்**
**என்குற்ற மாகும் இறைக்கு?**

முன்னே தன் குற்றத்தைக் கண்டு நீக்கிப் பிறகு பிறருடைய குற்றத்தை ஆராயவல்லவனானால் தலைவனுக்கு என்ன குற்றமாகும்? 436

7. **செயற்பால செய்யாது இவறியான் செல்வம்**
**உயற்பாலது அன்றிக் கெடும்**.

செய்யத்தக்க நன்மைகளைச்செய்யாமல் பொருளைச் சேர்த்து வைத்திருப்பவனுடைய செல்வம் உய்யுந்தன்மை இல்லாமல் அழியும். 437

8. **பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்**
**எண்ணப் படுவதொன்று அன்று**.

பொருளினிடத்தில் பற்றுக் கொள்ளும் உள்ளமாகிய ஈயாத்தன்மை, குற்றம் எதனோடும் சேர்த்து எண்ணத்தகாத ஒரு தனிக் குற்றமாகும். 438

9. **வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க**
**நன்றி பயவா வினை**.

எக்காலத்திலும் தன்னை மிக உயர்வாக எண்ணி வியந்து மதிக்கக்கூடாது; நன்மை தராத செயலைத் தான் விரும்பவும் கூடாது. 439

10. **காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்**
**ஏதில ஏதிலார் நூல்**.

தன் விருப்பம் பிறர்க்குத் தெரியாதபடி விருப்பமானவற்றை நுகர வல்லவனானால், பகைவர் தன்னை வஞ்சிப்பதற்காகச் செய்யும சூழ்ச்சிகள் பலிக்காமல் போகும். 440

1. **அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை**
**திறன்அறிந்து தேர்ந்து கொளல்**.

அறம் உணர்ந்தவராய்த் தன்னைவிட மூத்தவராய் உள்ள அறிவுடையவரின் நட்பைக், கொள்ளும் வகை அறிந்து ஆராய்ந்து கொள்ள வேண்டும். 441

2. **உற்றநோய் நீக்கி உறாஅமை முன்காக்கும்**
**பெற்றியார்ப் பேணிக் கொளல்**.

வந்துள்ள துன்பத்தை நீக்கி, இனித் துன்பம் வராதபடி முன்னதாகவே காக்கவல்ல தன்மையுடையவரைப் போற்றி நட்புக் கொள்ள வேண்டும். 442

3. **அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்**
**பேணித் தமராக் கொளல்**.

பெரியாரைப் போற்றித் தமக்குச் சுற்றத்தாராக்கிக் கொள்ளுதல் பெறத்தக்க அரிய பேறுகள் எல்லாவற்றிலும் அருமையானதாகும். 443

4. **தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்**
**வன்மையுள் எல்லாம் தலை**.

தம்மை விட, ( அறிவு முதலியவற்றால் ) பெரியவர் தமக்குச் சுற்றத்தாராகுமாறு நடத்தல், வல்லமை எல்லாவற்றிலும் சிறந்ததாகும். 444

5. **சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்**
**சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்**.

தக்க வழிகளை ஆராய்ந்து கூறும் அறிஞரையே உலகம் கண்ணாகக் கொண்டு நடத்தலால், மன்னவனும் அத்தகையாரை ஆராய்ந்து நட்புக் கொள்ள வேண்டும். 445

6. **தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்**
**செற்றார் செயக்கிடந்தது இல்**.

தக்க பெரியாரின் கூட்டத்தில் உள்ளவனாய் நடக்கவல்ல ஒருவனுக்கு அவனுடைய பகைவர் செய்யக்கூடிய தீங்கு ஒன்றும் இல்லை. 446

7. **இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே**
**கெடுக்கும் தகைமை யவர்?**

கடிந்து அறிவுரை கூறவல்ல பெரியாரின் துணை கொண்டு நடப்பவரைக் கெடுக்கும் ஆற்றல் உடையவர் யார் இருக்கின்றனர்? 447

8. **இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பார் இலானுங் கெடும்**.

கடிந்து அறிவுரை கூறும் பெரியாரின் துணை இல்லாத காவலற்ற அரசன் தன்னைக் கெடுக்கும் பகைவர் எவரும் இல்லாவிட்டாலும் கெடுவான். 448

9. **முதல்இலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்**
**சார்புஇலார்க்கு இல்லை நிலை**.

முதல் இல்லாத வணிகர்க்கு அதனால் வரும் ஊதியம் இல்லை; அது போல் தம்மைத் தாங்கிக் காப்பாற்றும் துணை இல்லாதவர்க்கு நிலைபேறு இல்லை. 449

10. **பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே**
**நல்லார் தொடர்கை விடல்**.

நல்லவராகிய பெரியாரின் தொடர்பைக் கைவிடுதல் பலருடைய பகையைத் தேடிக்கொள்வதைவிடப் பத்து மடங்கு தீமை உடையதாகும். 450

1. **சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்**
**சுற்றமாச் சூழ்ந்து விடும்**.

பெரியோரின் இயல்பு சிற்றினத்தை அஞ்சி ஒதுக்கும்; சிறியோரின் இயல்பு அதையே சுற்றமாக எண்ணித் தழுவிக் கொள்ளும். 451

2. **நிலத்துஇயல்பால் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்துஇயல்பது ஆகும் அறிவு**.

சேர்ந்த நிலத்தின் இயல்பால் நீர் வேறுபட்டு அந்நிலத்தின் தன்மையுடையதாகும்; அது போல் மக்களுடைய அறிவு இனத்தின் இயல்பினை உடையதாகும் 452

3. **மனத்தான்ஆம் மாந்தர்க் குணர்ச்சி இனத்தான்ஆம்**
**இன்னான் எனப்படும் சொல்**.

மக்களுக்கு இயற்கையறிவு மனத்தால் ஏற்படும்; இப்படிப்பட்டவன் என்று உலகத்தாரால் மதிக்கப்படும் சொல் சேர்ந்த இனத்தால் ஏற்படும். 453

4. **மனத்து உளதுபோலக் காட்டி ஒருவற்கு**
**இனத்துஉள தாகும் அறிவு**.

ஒருவனுக்குச் சிறப்பறிவு மனத்தில் உள்ளது போலக்காட்டி (உண்மையாக நோக்கும் போது) அவன் சேர்ந்த இனத்தில் உள்ளதாகும். 454

5. **மனம்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்**
   **இனம்தூய்மை தூவா வரும்**.

மனத்தின் தூய்மை, செய்யும் செயலின் தூய்மை ஆகிய இவ்விரண்டும் சேர்ந்த இனத்தின் தூய்மையைப் பொறுத்தே ஏற்படும். 455

6. **மனம்தூயார்க்கு எச்சம்நன் றாகும் இனம்தூயார்க்கு**
   **இல்லைநன்று ஆகா வினை**.

மனம் தூய்மையாகப் பெற்றவர்க்கு அவர்க்குப்பின் எஞ்சி நிற்கும் புகழ் முதலியவை நன்மையாகும். இனம் தூய்மையாக உள்ளவர்க்கு நன்மையாகாத செயல் இல்லை. 456

7. **மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் இனநலம்**
   **எல்லாப் புகழும் தரும்**.

மனத்தின் நன்மை உயிர்க்கு ஆக்கமாகும்; இனத்தின் நன்மை (அவ்வளவோடு நிற்காமல்) எல்லாப் புகழையும் கொடுக்கும். 457

8. **மனநலம் நன்குஉடைய ராயினும் சான்றோர்க்கு**
   **இனநலம் ஏமாப்பு உடைத்து**.

மனத்தின் நன்மையை உறுதியாக உடையவராயினும் சான்றோர்க்கு இனத்தின் நன்மை மேலும் நல்ல காவலாக அமைவதாகும். 458

9. **மனநலத்தின் ஆகும் மறுமை:மற் றஃதும்**
   **இனநலத்தின் ஏமாப் புடைத்து**.

மனத்தின் நன்மையால் மறுமை இன்பம் உண்டாகும்; அதுவும் இனத்தின் நன்மையால் மேலும் சிறப்புடையதாகும். 459

10. **நல்லினத்தின் ஊங்கும் துணையில்லை: தீயினத்தின்**
**அல்லற் படுப்பதூஉம் இல்**.

நல்ல இனத்தைவிடச் சிறந்ததாகிய துணையும் உலகத்தில் இல்லை; தீய இனத்தைவிடத் துன்பப்படுத்தும் பகையும் இல்லை. 460

1. **அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்**
**ஊதியமும் சூழ்ந்து செயல்**.

(ஒரு செயலைத் தொடங்குமுன்) அதனால் அழிவதையும், அழிந்தபின் ஆவதையும், பின்பு உண்டாகும் ஊதியத்தையும் ஆராய்ந்து செய்ய வேண்டும். 461

2. **தெரிந்த இனத்தொடு தேர்ந்துஎண்ணிச் செய்வார்க்கு**
**அரும்பொருள் யாதொன்றும் இல்**.

ஆராய்ந்து சேர்ந்த இனத்துடன் (செயலைப்பற்றி) நன்றாகத் தேர்ந்து, தாமும் எண்ணிப் பார்த்துச் செய்கின்றவர்க்கு அரிய பொருள் ஒன்றும் இல்லை. 462

3. **ஆக்கங் கருதி முதல்இழக்கும் செய்வினை**
**ஊக்கார் அறிவுடை யார்**.

பின் விளையும் ஊதியத்தைக் கருதி இப்போது உள்ள முதலை இழந்துவிடக் காரணமான செயலை அறிவுடையவர் மேற்கொள்ளமாட்டார். 463

4. **தெளிவு இலதனைத் தொடங்கார் இளிவுஎன்னும்**
**ஏதப்பாடு அஞ்சு பவர்**.

இழிவு தருவதாகிய குற்றத்திற்கு அஞ்சுகின்றவர் ( இன்ன ஊதியம் பயக்கும் என்னும்) தெளிவு இல்லாத செயலைத் தொடங்கமாட்டார். 464

5. **வகையறச் சூழாது எழுதல் பகைவரைப்**
**பாத்திப் படுப்பதோர் ஆறு**.

செயலின் வகைகளை எல்லாம் முற்ற எண்ணாமல் செய்யத் தொடங்குதல் பகைவரை வளரும் பாத்தியில் நிலைபெறச் செய்வதொரு வழியாகும். 465

6. **செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க**
**செய்யாமை யானும் கெடும்**.

ஒருவன் செய்யத்தகாத செயல்களைச் செய்வதனால் கெடுவான்; செய்யத்தக்க செயல்களைச் செய்யாமல் விடுவதனாலும் கெடுவான். 466

7. **எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்**
**எண்ணுவம் என்பது இழுக்கு**.

(செய்யத் தகுந்த) செயலையும் வழிகளை எண்ணிய பிறகே துணிந்து தொடங்க வேண்டும். துணிந்தபின் எண்ணிப் பார்க்கலாம் என்பது குற்றமாகும். 467

8. **ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று**
**போற்றினும் பொத்துப் படும்**.

தக்கவழியில் செய்யப்படாத முயற்சி பலர் துணையாக நின்று (அதை முடிக்குமாறு) காத்த போதிலும் குறையாகி விடும். 468

9. **நன்றுஆற்ற லுள்ளும் தவறுஉண்டு அவரவர்**
**பண்பறிந்து ஆற்றாக் கடை**.

அவரவருடைய இயல்புகளை அறிந்து அவரவர்க்குப் பொருந்துமாறு செய்யாவிட்டால் நன்மை செய்வதிலும் தவறு உண்டாகும். 469

10. **எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு**
**கொள்ளாத கொள்ளாது உலகு**.

தம் நிலைமையோடு பொருந்தாதவற்றை உலகம் ஏற்றுக் கொள்ளாது. ஆகையால் உலகம் இகழ்ந்து தள்ளாத செயல்களை ஆராய்ந்து செய்ய வேண்டும்.. 470

1. **வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்**
**துணைவலியும் தூக்கிச் செயல்**.

செயலின் வலிமையும், தன் வலிமையும், பகைவனுடைய வலிமையும், இருவர்க்கும் துணையானவரின் வலிமையும் ஆராய்ந்து செய்யவேண்டும். 471

2. **ஒல்வது அறிவது அறிந்ததன் கண்தங்கிச்**
   **செல்வார்க்குச் செல்லாதது இல்**.

தனக்குப் பொருந்தும் செயலையும், அதற்காக அறிய வேண்டியதையும் அறிந்து அதனிடம் நிலைத்து முயல்கின்றவர்க்கு முடியாதது ஒன்றும் இல்லை ஒன்றும் இல்லை. 472

3. **உடைத்தம் வலிஅறியார் ஊக்கத்தின் ஊக்கி**
   **இடைக்கண் முரிந்தார் பலர்**.

தம்முடைய வலிமை இவ்வளவு என்று அறியாமல் ஊக்கத்தால் முனைந்து தொடங்கி இடையில் அதை முடிக்க வகையில்லாமல் அழிந்தவர் பலர். 473

4. **அமைந்தாங்கு ஒழுகான் அளவுஅறியான் தன்னை**
   **வியந்தான் விரைந்து கெடும்**.

மற்றவர்களோடு ஒத்து நடக்காமல். தன் வலிமையின் அளவையும் அறியாமல், தன்னை வியந்து மதித்துக் கொண்டிருப்பவன் விரைவில் கெடுவான். 474

5. **பீலிபெய் சாகாடும் அச்சுஇறும் அப்பண்டம்**
   **சால மிகுத்துப் பெயின்**.

மயிலிறகு ஏற்றிய வண்டியே ஆனாலும், அந்தப் பண்டமும் (அளவோடு ஏற்றாமல்) அளவுகடந்து மிகுதியாக ஏற்றினால் அச்சு முறியும். 475

6. **நுனிக்கொம்பர் ஏறினார் அஃதுஇறந்து ஊக்கின்**
   **உயிர்க்குஇறுதி யாகி விடும்**.

ஒரு மரத்தின் நுனிக்கொம்பில் ஏறியவர், அதையும் கடந்து மேலும் ஏற முனைந்தால், அவருடைய உயிர்க்கு முடிவாக நேர்ந்துவிடும் 476

7. **ஆற்றின் அளவறிந்து ஈக: அதுபொருள்**
**போற்றி வழங்கும் நெறி**.

தக்க வழியில் பிறர்க்குக் கொடுக்கும் அளவு அறிந்து கொடுக்கவேண்டும்; அதுவே பொருளைப் போற்றி வாழும் வழியாகும். 477

8. **ஆகுஆறு அளவுஇட்டிது ஆயினும் கேடுஇல்லை**
**போகுஆறு அகலாக் கடை**.

பொருள் வரும் வழி (வருவாய்) சிறியதாக இருந்தாலும், போகும் வழி (செலவு) விரிவுபடாவிட்டால் அதனால் தீங்கு இல்லை. 478

9. **அளவுஅறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல**
**இல்லாகித் தோன்றாக் கெடும்**.

பொருளின் அளவு அறிந்து வாழாதவனுடைய வாழ்க்கை (பல வளமும்) இருப்பது போல் தோன்றி இல்லாமல் மறைந்து கெட்டுவிடும். 479

10. **உளவரை தூக்காத ஒப்புரவு ஆண்மை**
**வளவரை வல்லைக் கெடும்**.

தனக்குப் பொருள் உள்ள அளவை ஆராயாமல் மேற்கொள்ளும் ஒப்புரவினால், ஒருவனுடைய செல்வத்தின் அளவு விரைவில் கெடும். 480

1. **பகல்வெல்லும் கூகையைக் காக்கை: இகல்வெல்லும்**
**வேந்தர்க்கு வேண்டும் பொழுது**.

காக்கை தன்னைவிட வலிய கோட்டானைப் பகலில் வென்றுவிடும்; அதுபோல் பகையை வெல்லக் கருதும் அரசர்க்கும் அதற்கு ஏற்ற காலம் வேண்டும் 481

2. **பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்**
**தீராமை ஆர்க்கும் கயிறு**.

காலத்தோடு பொருந்துமாறு ஆராய்ந்து நடத்தல் (நில்லாத இயல்பு உடைய) செல்வத்தை நீங்காமல் நிற்குமாறு கட்டும் கயிறாகும். 482

3. **அருவினை என்ப உளவோ கருவியான்**
**காலம் அறிந்து செயின்?**

(செய்யும் செயலை முடிப்பதற்கு வேண்டிய) கருவிகளுடன் ஏற்ற காலத்தையும் அறிந்து செய்தால், அரிய செயல்கள் என்பவை உண்டோ? 483

4. **ஞாலம் கருதினும் கைகூடும் காலம்**
**கருதி இடத்தால் செயின்.**

(செயலை முடிப்பதற்கு ஏற்ற) காலத்தை அறிந்து இடத்தோடு பொருந்துமாறு செய்தால், உலகமே வேண்டும் எனக் கருதினாலும் கைகூடும். 484

5. **காலம் கருதி இருப்பர் கலங்காது**
**ஞாலம் கருது பவர்.**

உலகத்தைக் கொள்ளக் கருதுகின்றவர் அதைப்பற்றி எண்ணிக் கலங்காமல் அதற்கு ஏற்ற காலத்தைக் கருதிக் கொண்டு பொறுத்திருப்பர். 485

6. **ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்**
**தாக்கற்குப் பேரும் தகைத்து.**

ஊக்கம் மிகுந்தவன் (காலத்தை எதிர்பார்த்து) அடங்கியிருத்தல், போர் செய்யும் ஆட்டுக்கடா தன் பகையைத் தாக்குவதற்காகப் பின்னே கால்வாங்குதலைப் போன்றது. 486

7. **பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து**
**உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.**

அறிவுடையவர், (பகைவர் தீங்கு செய்த) அப்பொழுதே உடனே புறத்தில் சினம் கொள்ளமாட்டார்;(வெல்வதற்கு ஏற்ற) காலம் பார்த்து அகத்தில் சினம் கொள்வர். 487

8. **செறுநரைக் காணின் சுமக்க இறுவரை**
**காணின் கிழக்காம் தலை.**

பகைவரைக் கண்டால் பொறுத்துச் செல்ல வேண்டும்; அப் பகைவர்க்கு முடிவுகாலம் வந்தபோது அவருடைய தலைகீழே விழும். 488

9. **எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே**
**செய்தற்கு அரிய செயல்**.

கிடைத்தற்கரிய காலம் வந்து வாய்க்குமானால், அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு அப்போதே செய்தற்கரிய செயல்களைச் செய்யவேண்டும். 489

10. **கொக்குஒக்க கூம்பும் பருவத்து மற்றுஅதன்**
**குத்துஒக்க சீர்த்த இடத்து**.

பொறுத்திருக்கும் காலத்தில் கொக்குப்போல் அமைதியா இருக்கவேண்டும்; காலம் வாய்த்தபோது அதன் குத்துப் போல் தவறாமல் செய்து முடிக்கவேண்டும். 490

1. **தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்**
**இடங்கண்ட பின்அல் லது**.

முற்றுகை செய்வதற்கு ஏற்ற இடத்தைக் கண்டபின் அல்லாமல் எச் செயலையும் தொடங்கக் கூடாது; பகைவரை இகழவும் கூடாது. 491

2. **முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்துஆம்**
**ஆக்கம் பலவுந் தரும்**.

மாறுபாடு பொருந்திய வலிமை உடையவர்க்கும் அரணோடு பொருந்தி ஏற்படுகின்ற வெற்றியானது பலவகைப் பயன்களையும் கொடுக்கும். 492

3. **ஆற்றாரும் ஆற்றி அடுப இடன்அறிந்து**
**போற்றார்கண் போற்றிச் செயின்**.

தக்க இடத்தை அறிந்து தம்மைக் காத்துக்கொண்டு பகைவரிடத்திற் சென்று தம் செயலைச் செய்தால், வலிமை இல்லாதவரும் வலிமை உடையவராய் வெல்வர். 493

4. **எண்ணியார் எண்ணம் இழப்பர் இடன்அறிந்து**
   **துன்னியார் துன்னிச் செயின்**.

தக்க இடத்தை அறிந்து பொருந்தியவராய்ச் செயலை நெருங்கிச் செய்வாராயின், அவரை வெல்ல எண்ணியிருந்த பகைவர் தம் எண்ணத்தை இழந்துவிடுவார். 494

5. **நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்**
   **நீங்கின் அதனைப் பிற**.

ஆழமுள்ள நீரில் முதலை மற்ற உயிர்களை வெல்லும்; ஆனால் நீரிலிருந்து நீங்கி வந்தால் அந்த முதலையையும் மற்ற உயிர்கள் வென்று விடும். 495

6. **கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் கடல்ஓடும்**
   **நாவாயும் ஓடா நிலத்து**.

வலிய சக்கரங்களையுடைய பெரிய தேர்கள் கடலில் ஓடமுடியாது; கடலில் ஓடுகின்ற கப்பல்களும் நிலத்தில் ஓடமுடியாது. 496

7. **அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை**
   **எண்ணி இடத்தாற் செயின்**.

(செய்யும் வழிவகைகளைக்) குறைவில்லாமல் எண்ணித் தக்க இடத்தில் பொருந்திச் செய்தால், அஞ்சாமை அல்லாமல் வேறு துணை வேண்டியதில்லை. 497

8. **சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்**
   **ஊக்கம் அழிந்து விடும்**.

சிறிய படை உடையவனுக்குத் தக்கதாக உள்ள இடத்தில் பொருந்தி நின்றால், பெரிய படை உடையவன் தன் ஊக்கம் அழிவான். 498

9. **சிறைநலனும் சீரும் இலர்எனினும் மாந்தர்**
   **உறைநிலத்தோடு ஒட்டல் அரிது**.

அரணாகிய நன்மையும் மற்றச் சிறப்பும் இல்லாதவராயினும் பகைவர் வாழ்கின்ற இடத்திற்குச் சென்று அவரைத் தாக்குதல் அரிது. 499

10. **கால்ஆழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா**
**வேலாள் முகத்த களிறு**.

வேல் ஏந்திய வீரரைக் கோத்தெடுத்த கொம்பு உடைய அஞ்சாத யானையையும், கால் ஆழும் சேற்று நிலத்தில் அகப்பட்டபோது நரிகள் கொன்றுவிடும். 500

1. **அறம்பொருள் இன்பம் உயிர்அச்சம் நான்கின்**
**திறம்தெரிந்து தேறப் படும்**.

அறம், பொருள், இன்பம், உயிர்க்காக அஞ்சும் அச்சம் ஆகிய நான்கு வகையாலும் ஆராயப்பட்ட பிறகே ஒருவன் (ஒரு தொழிலுக்கு உரியவனாகத்) தெளியப்படுவான். 501

2. **குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்**
**நாண்உடையான் கட்டே தெளிவு**.

நல்ல குடியில் பிறந்து குற்றங்களிலிருந்து நீங்கிப் பழியான செயல்களைச் செய்ய அஞ்சுகின்ற நாணம் உடையவனையே நம்பித் தெளிய வேண்டும். 502

3. **அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் தெரியுங்கால்**
**இன்மை அரிதே வெளிறு**.

அரிய நூல்களைக் கற்றுத் தேர்ந்து குற்றம் அற்றவரிடத்திலும் ஆராய்ந்து பார்க்குமிடத்தில் அறியாமை இல்லாதிருப்பது அருமையாகும். 503

4. **குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்**
**மிகைநாடி மிக்க கொளல்**.

ஒருவனுடைய குணங்களை ஆராய்ந்து, பிறகு குற்றங்களையும் ஆராய்ந்து, மிகுதியானவை எவையென ஆராய்ந்து, மிகுந்திருப்பவற்றால் தெளிந்து கொள்ள வேண்டும். 504

5. **பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தம்தம்**
**கருமமே கட்டளைக் கல்**.

(மக்களுடைய குணங்களாலாகிய) பெருமைக்கும் (குற்றங்களாலாகிய) சிறுமைக்கும் தேர்ந்தறியும் உரை கல்லாக இருப்பவை அவரவருடைய செயல்களே ஆகும். 505

6. **அற்றாரைத் தேறுதல் ஓம்புக: மற்றுஅவர்**
**பற்றிலர் நாணார் பழி**.

சுற்றத்தாரின் தொடர்பு அற்றவரை நம்பித் தெளியக் கூடாது; அவர் உலகத்தில் பற்று இல்லாதவராகையால் பழிக்கு நாணமாட்டார். 506

7. **காதன்மை கந்தா அறிவுஅறியார்த் தேறுதல்**
**பேதைமை எல்லாம் தரும்**.

அறியவேண்டியவற்றை அறியாதிருப்பவரை அன்புடைமை காரணமாக நம்பித் தெளிதல், (தெளிந்தவர்க்கு) எல்லா அறியாமையையும் கொடுக்கும். 507

8. **தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை**
**தீரா இடும்பை தரும்**.

மற்றவனைப் பற்றி ஒன்றும் ஆராயாமல் தெளிந்தால் அஃது (அவனுக்கு மட்டும் அல்லாமல்) அவனுடைய வழிமுறையில் தோன்றியவர்க்கும் தீராத துன்பத்தைக் கொடுக்கும். 508

9. **தேறற்க யாரையும் தேராது: தேர்ந்தபின்**
**தேறுக தேறும் பொருள்**.

யாரையும் ஆராயமல் தெளியக்கூடாது; நன்றாக ஆராய்ந்த பிறகு, அவரிடம் தெளிவாகக் கொள்ளத்தக்க பொருள்களைத் தெளிந்து நம்ப வேண்டும். 509

10. **தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்**
**தீரா இடும்பை தரும்**.

ஒருவனை ஆராயாமல் தெளிவடைதலும், ஆராய்ந்து தெளிந்த ஒருவனிடம் ஐயப்படுதலும் ஆகிய இவை நீங்காத துன்பத்தைக் கொடுக்கும். 510

1. **நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த**
**தன்மையான் ஆளப் படும்**.

நன்மையும் தீமையுமாகிய இரண்டையும் ஆராய்ந்து நன்மை தருகின்றவற்றையே விரும்புகின்ற இயல்புடையவன் (செயலுக்கு உரியவனாக) ஆளப்படுவான். 511

2. **வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை**
**ஆராய்வான் செய்க வினை**.

பொருள் வரும் வழிகளைப் பெருகச் செய்து, அவற்றால் வளத்தை உண்டாக்கி, வரும் இடையூறுகளை ஆராய்ந்து நீக்க வல்லவனே செயல் செய்யவேண்டும். 512

3. **அன்புஅறிவு தேற்றம் அவாஇன்மை இந்நான்கும்**
**நன்குடையான் கட்டே தெளிவு**.

அன்பு, அறிவு, ஐயமில்லாமல் தெளியும் ஆற்றல், அவா இல்லாமை ஆகிய இந் நான்கு பண்புகளையும் நிலையாக உடையவனைத் தெளியலாம். 513

4. **எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்**
**வேறுஆகும் மாந்தர் பலர்**.

எவ்வகையால் ஆராய்ந்து தெளிந்த பிறகும் (செயலை மேற்கொண்டு செய்யும்போது) அச் செயல்வகையால் வேறுபடும் மக்கள் உலகத்தில் உண்டு. 514

5. **அறிந்துஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்**
**சிறந்தான் என்று ஏவற்பாற் றன்று**.

(செய்யும் வழிகளை) அறிந்து இடையூறுகளைத் தாங்கிச் செய்துமுடிக்க வல்லவனை அல்லாமல், மற்றவனைச் சிறந்தவன் என்று கருதி ஒரு செயலைச் செய்யுமாறு ஏவக்கூடாது. 515

6. **செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு**
**எய்த உணர்ந்து செயல்**.

செய்கின்றவனுடைய தன்மையை ஆராய்ந்து, செயலின் தன்மையையும் ஆராய்ந்து, தக்க காலத்தோடு பொருந்துமாறு உணர்ந்து செய்விக்க வேண்டும். 516

7. **இதனை இதனால் இவன்முடிக்கும் என்றுஆய்ந்து**
**அதனை அவன்கண் விடல்**.

இந்தத் தொழிலை இக் கருவியால் இன்னவன் முடிப்பான் என்று ஆராய்ந்த பிறகு அத் தொழிலை அவனிடம் ஒப்படைக்க வேண்டும். 517

8. **வினைக்குஉரிமை நாடிய பின்றை அவனை**
**அதற்குஉரிய னாகச் செயல்**.

ஒருவன் ஒரு தொழிலைச் செய்வதற்கு உரியவனாக இருப்பதை ஆராய்ந்த பிறகு அவனை அத் தொழிலுக்கு உரியவனாகும்படி உயர்த்தவேண்டும். 518

9. **வினைக்கண் வினையுடையான் கேண்மைவேறு ஆக**
**நினைப்பானை நீங்கும் திரு**.

மேற்கொண்ட தொழிலில் எப்போதும் முயற்சி உடையவனின் உறவைத் தவறாக நினைக்கும் தலைவனை விட்டுச் செல்வம் நீங்கும். 519

10. **நாள்தோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்**
**கோடாமை கோடாது உலகு**.

தொழில் செய்கின்றவன் கோணாதிருக்கும் வரையில் உலகம் கெடாது; ஆகையால் மன்னன் நாள்தோறும் அவனுடைய நிலைமையை ஆராய வேண்டும். 520

1. **பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்**
**சுற்றத்தார் கண்ணே உள**.

ஒருவன் வறியவனான காலத்திலும் அவனுக்கும் தமக்கும் இருந்த பழைய உறவைப் பாராட்டிப் பேசும் பண்புகள் சுற்றத்தாரிடம் உண்டு. 521

2. **விருப்புஅறாச் சுற்றம் இயையின் அருப்புஅறா**
**ஆக்கம் பலவும் தரும்**.

அன்பு நீங்காத சுற்றம் ஒருவனுக்குக் கிடைத்தால், அது மேன்மேலும் வளர்ச்சி குறையாத ஆக்கம் பலவற்றையும் அவனுக்குக் கொடுக்கும். 522

3. **அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்**
   **கோடுஇன்றி நீர்நிறைந் தற்று**.

சுற்றத்தாரோடு மனம் கலந்து பழகும் தன்மை இல்லாதவனுடைய வாழ்க்கை, குளப்பரப்பானது கரையில்லாமல் நீர் நிறைந்தாற் போன்றது. 523

4. **சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வம்தான்**
   **பெற்றத்தால் பெற்ற பயன்**.

சுற்றத்தாரால் சுற்றப்படும்படியாக அவர்களைத் தழுவி அன்பாக வாழ்தல் ஒருவன் செல்வத்தைப் பெற்றதனால் பெற்ற பயனாகும். 524

5. **கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய**
   **சுற்றத்தால் சுற்றப் படும்**.

பொருள் கொடுத்தலும் இன்சொல் கூறுதலுமாகிய இரண்டும் செய்ய வல்லவனானால், ஒருவன் தொடர்ந்த பல சுற்றத்தால் சூழப்படுவான். 525

6. **பெரும்கொடையான் பேணான் வெகுளி அவனின்**
   **மருங்குஉடையார் மாநிலத்து இல்**.

பெரிய கொடையாளியாகவும் சினமற்றவனாகவும் ஒருவன் இருந்தால் அவனைப்போல் சுற்றத்தாரை உடையவர் உலகத்தில் யாரும் இல்லை. 526

7. **காக்கை கரவா கரைந்துஉண்ணும் ஆக்கமும்**
   **அன்னநீ ரார்க்கே உள**.

காக்கை (தனக்குக் கிடைத்ததை) மறைத்துவைக்காமல் சுற்றத்தைக் கூவி அழைத்து உண்ணும்; ஆக்கமும் அத்தகைய இயல்பு உடையவர்க்கே உண்டு. 527

8. **பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்**
**அதுநோக்கி வாழ்வார் பலர்**.

அரசன் எல்லாரையும் பொதுவகையாக நோக்காமல், அவரவர் சிறப்புக்கு ஏற்றவாறு நோக்கினால், அதை விரும்பிச் சுற்றமாக வாழ்கின்றவர் பலர் ஆவர். 528

9. **தமராகித் தன்துறந்தார் சுற்றம் அமராமைக்**
**காரணம் இன்றி வரும்**.

முன் சுற்றத்தாராக இருந்து பின் ஒரு காரணத்தால் பிரிந்தவரின் உறவு, அவ்வாறு அவர் பொருந்தாமலிருந்த காரணம் நீங்கியபின் தானே வந்து சேரும். 529

10. **உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்**
**இழைத்துஇருந்து எண்ணிக் கொளல்**.

தன்னிடமிருந்து பிரிந்து சென்று ஒரு காரணம்பற்றித் திரும்பி வந்தவனை, அரசன், அவன் நாடிய உதவியைச் செய்து ஆராய்ந்து உறவு கொள்ளவேண்டும். 530

1. **இறந்த வெகுளியின் தீதே சிறந்த**
**உவகை மகிழ்ச்சியின் சோர்வு**.

பெரிய உவகையால் மகிழ்ந்திருக்கும்போது மறதியால் வரும் சோர்வு, ஒருவனுக்கு வரம்பு கடந்த சினம் வருவதைவிடத் தீமையானதாகும். 531

2. **பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை**
**நிச்ச நிரப்புக்கொன் றாங்கு**.

நாள்தோறும் விடாமல் வரும் வறுமை அறிவைக் கொல்வதுபோல, ஒருவனுடைய புகழை அவனுடைய மறதி கொன்றுவிடும். 532

3. **பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுஉலகத்து**
**எப்பால்நூ லோர்க்கும் துணிவு**.

மறதியால் சோர்ந்து நடப்பவர்க்குப் புகழுடன் வாழும் தன்மையில்லை; அஃது உலகத்தில் எப்படிப்பட்ட நூலோர்க்கும் ஒப்பமுடிந்த முடிபாகும். 533

4. **அச்ச முடையார்க்கு அரண்இல்லை ஆங்கில்லை**
**பொச்சாப்பு உடையார்க்கு நன்கு**.

உள்ளத்தில் அச்சம் உடையவர்க்குப் புறத்திலே அரண் இருந்தும் பயன் இல்லை; அதுபோல் மறதி உடையவர்க்கு நல்ல நிலை வாய்த்தும் பயன் இல்லை. 534

5. **முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை**
**பின்ஊறு இரங்கி விடும்**.

வரும் இடையூறுகளை முன்னே அறிந்து காக்காமல் மறந்து சோர்ந்தவன், பின்பு அவை வந்துற்றபோது தன் பிழையை நினைந்து இரங்குவான். 535

6. **இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை**
**வாயின் அதுஒப்பது இல்**.

யாரிடத்திலும் எக்காலத்திலும் மறந்தும் சோர்ந்திருக்காத தன்மை தவறாமல் பொருந்தியிருக்குமானால், அதற்கு ஒப்பான நன்மை வேறொன்றும் இல்லை. 536

7. **அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்**
**கருவியால் போற்றிச் செயின்**.

மறவாமை என்னும் கருவிகொண்டு (கடமைகளைப்) போற்றிச் செய்தால், செய்வதற்கு அரியவை என்று ஒருவனால் முடியாத செயல்கள் இல்லை. 537

8. **புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது**
**இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்**.

சான்றோர் புகழ்ந்து சொல்லிய செயல்களைப் போற்றிச் செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாமல் மறந்து சோர்ந்தவருக்கு ஏழு பிறப்பிலும் நன்மை இல்லை. 538

9. **இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம்தம்**
**மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து**.

தாம் தம் மகிழ்ச்சியால் செருக்குக் கொண்டு கடமையை மறந்திருக்கும் போது, அவ்வாறு சோர்ந்திருந்த காரணத்தால் முற்காலத்தில் அழிந்தவரை நினைக்கவேண்டும். 539

10. **உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான்**
**உள்ளியது உள்ளப் பெறின்**.

ஒருவன் எண்ணியதை விடாமல் எண்ணி, (சோர்வில்லாமல்) இருக்கப் பெற்றால், அவன் கருதியதை அடைதல் எளிதாகும். 540

1. **உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான்**
**உள்ளியது உள்ளப் பெறின்**.

யாரிடத்திலும் (குற்றம் இன்னதென்று) ஆராய்ந்து, கண்ணோட்டம் செய்யாமல் நடுவுநிலைமை பொருந்தி (செய்யத்தக்கதை) ஆராய்ந்து செய்வதே நீதிமுறையாகும். 541

2. **வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்**
**கோல்நோக்கி வாழும் குடி**.

உலகத்தில் உள்ள உயிர்கள் எல்லாம் மழையை நோக்கி வாழ்கின்றன. அது போல் குடிகள் எல்லாம் அரசனுடைய செங்கோலை நோக்கி வாழ்கின்றனர். 542

3. **அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்**
**நின்றது மன்னவன் கோல்**.

அந்தணர் போற்றும் மறைநூலுக்கும் அறத்திற்கும் அடிப்படையாய் நின்று உலகத்தைக் காப்பது அரசனுடைய செங்கோலாகும். 543

4. **குடிதழீஇக் கோல்ஓச்சும் மாநில மன்னன்**
**அடிதழீஇ நிற்கும் உலகு**.

குடிகளை அன்போடு அணைத்துக் கொண்டு செங்கோல் செலுத்துகின்ற அரசனுடைய அடியைப் பொருந்தி உலகம் நிலைபெறும். 544

5. **இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட**
**பெயலும் விளையுளும் தொக்கு**.

நீதிமுறைப்படி செங்கோல் செலுத்தும் அரசனுடைய நாட்டில் பருவ மழையும் நிறைந்த விளைவும் ஒரு சேர ஏற்படுவனவாகும். 545

6. **வேல்அன்று வென்றி தருவது: மன்னவன்**
**கோல்அதூஉம் கோடாது எனின்**.

ஒருவனுக்கு வெற்றி பெற்றுத் தருவது வேல் அன்று; அரசனுடைய செங்கோலே ஆகும்; அச்செங்கோலும் கோணாதிருக்குமாயின். 546

7. **இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை**
**முறைகாக்கும் முட்டாச் செயின்**.

உலகத்தை எல்லாம் அரசன் காப்பாற்றுவான்; நீதிமுறை கெடாதவாறு ஆட்சி செய்வானாயின் அரசனை அந்த முறையே காப்பாற்றும். 547

8. **எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்**
**தண்பதத்தான் தானே கெடும்**.

எளிய செல்வி உடையவனாய் ஆராய்ந்து நீதிமுறை செய்யாத அரசன் தாழ்ந்த நிலையில் நின்று ( பகைவரில்லாமலும்) தானே கெடுவான். 548

9. **குடிபுறங் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்**
**வடுஅன்று வேந்தன் தொழில்**.

குடிகளைப் பிறர் வருத்தாமல் காத்துத், தானும் வருத்தாமல் காப்பாற்றி, அவர்களுடைய குற்றங்களைத் தக்க தண்டனையால் ஒழித்தல், அரசனுடைய தொழில்; பழி அன்று. 549

10. **கொலையிற் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்**
**களைகட் டதனொடு நேர்**.

கொடியவர் சிலரைக் கொலைத்தண்டனையால் அரசன் ஒறுத்தல் பயிரைக் காப்பாற்றக் களையைக் களைவதற்கு நிகரான செயலாகும். 550

1. **கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்டு**
**அல்லவை செய்துஒழுகும் வேந்து**.

குடிகளை வருத்தும் தொழிலை மேற்கொண்டு, முறையல்லாத செயல்களைச் செய்து நடக்கும் அரசன் கொலைத் தொழிலைக் கொண்டவரைவிடக் கொடியவன். 551

2. **வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்**
**கோலொடு நின்றான் இரவு**.

ஆட்சிக்குரிய கோலை ஏந்தி நின்ற அரசன் குடிகளைப் பொருள் கேட்டல், போகும் வழியில் தனியே வேல் ஏந்தி நின்ற கள்வன் 'கொடு' என்று கேட்பதைப் போன்றது. 552

3. **நாள்தோறும் நாடி முறைசெய்யா மன்னவன்**
**நாள்தோறும் நாடு கெடும்**.

நாள்தோறும தன் ஆட்சியில் விளையும் நன்மை தீமைகளை ஆராய்ந்து முறை செய்யாத அரசன், நாள்தோறும் ( மெல்ல மெல்லத் ) தன் நாட்டை இழந்து வருவான். 553

4. **கூழும் குடியும் ஒருங்குஇழக்கும் கோல்கோடிச்**
**சூழாது செய்யும் அரசு**.

( ஆட்சிமுறை கெட்டுக் ) கொடுங்கோலனாகி ஆராயாமல் எதையும் செய்யும் அரசன், பொருளையும் குடிகளையும் ஒரு சேர இழந்து விடுவான். 554

5. **அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீர்அன்றே**
**செல்வத்தைத் தேய்க்கும் படை**.

( முறை செய்யாதவனுடைய ) செல்வத்தைத் தேய்த்து அழிக்கவல்ல படை, அவனால் பலர் துன்பப்பட்டுத் துன்பம் பொறுக்க முடியாமல் அழுத கண்ணீர் அன்றோ? 555

6. **மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதுஇன்றேல்**
**மன்னாவாம் மன்னர்க்கு ஒளி**.

அரசர்க்குக் புகழ் நிலைபெறக் காரணம் செங்கோல் முறையாகும். அஃது இல்லையானால் அரசர்க்குப் புகழ் நிலைபெறாமல் போகும். 556

7. **துளியின்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே வேந்தன்**
**அளியின்மை வாழும் உயிர்க்கு**.

மழைத்துளி இல்லாதிருத்தல் உலகத்திற்கு எத்தன்மையானதோ அத்தன்மையானது நாட்டில் வாழும் குடிமக்களுக்கு அரசனுடைய அருள் இல்லாத ஆட்சி. 557

8. **இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா**
**மன்னவன் கோல்கீழ்ப் படின்**.

முறை செய்யாத அரசனுடைய கொடுங்கோல் ஆட்சியின் கீழ் இருக்கப்பெற்றால், பொருள் இல்லாத வறுமை நிலையைவிடச் செல்வநிலை துன்பமானதாகும் 558

9. **முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
**ஒல்லாது வானம் பெயல்**.

அரசன் முறைதவறி நாட்டை ஆட்சி செய்வானானால், அந்த நாட்டில் பருவமழை தவறி மேகம் மழை பெய்யாமல் போகும். 559

10. **ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
**காவலன் காவான் எனின்**.

நாட்டைக் காக்கும் தலைவன் முறைப்படி காக்காவிட்டால் அந்நாட்டில் பசுக்கள் பால் தருதலாகிய பயன் குன்றும்; அந்தணரும் அறநூல்களை மறப்பர். 560

1. **தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்**
**ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து**.

செய்த குற்றத்தைத் தக்கவாறு ஆராய்ந்து மீண்டும் அக் குற்றம் செய்யாதபடி குற்றத்திற்குப் பொருந்துமாறு தண்டிப்பவனே அரசன் ஆவான். 561

2. **கடிதுஓச்சி மெல்ல எறிக நெடிதுஆக்கம்**
**நீங்காமை வேண்டு பவர்**.

ஆக்கம் நெடுங்காலம் நீங்காமலிருக்க விரும்புகின்றவர் (தண்டிக்கத் தொடங்கும்போது) அளவு கடந்து செய்வது போல் காட்டி, அளவு மீறாமல் முறை செய்ய வேண்டும். 562

3. **வெருவந்த செய்துஒழுகும் வெங்கோலன் ஆயின்**
**ஒருவந்தம் ஒல்லைக் கெடும்**.

குடிகள் அஞ்சும்படியான கொடுமைகளைச் செய்து ஆளும் கொடுங்கோல் அரசனானால், அவன் திண்ணமாக விரைவில் கெடுவான். 563

4. **இறைகடியன் என்றுஉரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்**
**உறைகடுகி ஒல்லைக் கெடும்**.

'நம் அரசன் கடுமையானவன்' என்று குடிகளால் கூறப்படும் கொடுஞ் சொல்லை உடைய வேந்தன், தன் ஆயுள் குறைந்து விரைவில் கெடுவான். 564

5. **அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்**
**பேஎய்கண் டன்னது உடைத்து**.

எளிதில் காணமுடியாத அருமையும், இனிமையற்ற முகமும் உடையவனது பெரிய செல்வம், பேய் கண்டு காத்திருப்பதைப் போன்ற தன்மையுடையது. 565

6. **கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்**
**நீடுஇன்றி ஆங்கே கெடும்**.

கடுஞ்சொல் உடையவனாய்க் கண்ணோட்டம் இல்லாதவனாய் உள்ளவனுடைய பெரிய செல்வம் நீட்டித்தல் இல்லாமல் அப்பொழுதே கெடும். 566

7. **கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்**
**அடுமுரண் தேய்க்கும் அரம்**.

கடுமையான சொல்லும் முறைகடந்த தண்டனையும் அரசனுடைய வெற்றிக்குக் காரணமான வலிமையைத் தேய்க்கும் அரம் ஆகும். 567

8. **இனத்ததுஆற்றி எண்ணாத வேந்தன் சினத்துஆற்றிச்**
   **சீறின் சிறுகும் திரு.**

அமைச்சர் முதலான தன் இனத்தாரிடம் கலந்து எண்ணாத அரசன், சினத்தின் வழியில் சென்று சீறி நிற்பானானால், அவனுடைய செல்வம் சுருங்கும். 568

9. **செருவந்த போழ்தில் சிறைசெய்யா வேந்தன்**
   **வெருவந்து வெய்து கெடும்.**

முன்னமே தக்கவாறு அரண் செய்துகொள்ளாத அரசன் போர் வந்த காலத்தில் (தற்காப்பு இல்லாமல்) அஞ்சி விரைவில் அழிவான். 569

10. **கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல்: அதுவல்லது**
    **இல்லை நிலக்குப் பொறை.**

கடுங்கோலாகிய ஆட்சிமுறை கல்லாதவரைத் தனக்கு அரணாகச் சேர்த்துக்கொள்ளும்; அது தவிர நிலத்திற்குச் சுமை வேறு இல்லை. 570

1. **கண்ணோட்டம் என்னும் கழிபெரும் காரிகை**
   **உண்மையான் உண்டுஇவ் வுலகு.**

கண்ணோட்டம் என்று சொல்லப்படுகின்ற மிகச் சிறந்த அழகு இருக்கும் காரணத்தால்தான், இந்த உலகம் அழியாமல் இருக்கின்றது. 571

2. **கண்ணோட்டத்து உள்ளது உலகியல்; அஃதிலார்**
   **உன்மை நிலக்குப் பொறை.**

கண்ணோட்டத்தினால் உலகியல் நடைபெறுகின்றது; கண்ணோட்டம் இல்லாதவர் உயிரோடு இருந்தால் நிலத்திற்குச் சுமையே தவிர, வேறு பயனில்லை. 572

3. **பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல்: கண்என்னாம்**
   **கண்ணோட்டம் இல்லாத கண்?**

பாடலோடு பொருந்துதல் இல்லையானால் இசை என்ன பயனுடையதாகும்? அதுபோல், கண்ணோட்டம் இல்லாவிட்டால் கண் என்ன பயனுடையதாகும்? 573

4. **உளபோல் முகத்துஎவன் செய்யும் அளவினால்**
   **கண்ணேட்டம் இல்லாத கண்?**

தக்க அளவிற்குக் கண்ணோட்டம் இல்லாத கண்கள் முகத்தில் உள்ளவைபோல் தோன்றுதல் அல்லாமல் வேறு என்ன பயன் செய்யும்? 574

5. **கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்**
   **புண்ணென்று உணரப் படும்**.

ஒருவனுடைய கண்ணுக்கு அணிகலமாவது கண்ணோட்டம் என்னும் பண்பே; அஃது இல்லையானால் புண் என்று உணரப்படும். 575

6. **மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு**
   **இயைந்துகண் ணோடா தவர்**.

கண்ணோட்டத்திற்கு உரிய கண்ணோடு பொருந்தி இருந்தும் கண்ணோட்டம் இல்லாதவர், (கண் இருந்தும் காணாத) மரத்தினைப் போன்றவர். 576

7. **கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர், கண்ணுடையார்**
   **கண்ணோட்டம் இன்மையும் இல்**.

கண்ணோட்டம் இல்லாத மக்கள் கண் இல்லாதவரே ஆவர். கண் உடைய மக்கள் கண்ணோட்டம் இல்லாதிருத்தலும் இல்லை. 577

8. **கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு**
   **உரிமை உடைத்துஇவ் வுலகு**.

தம் தம் கடமையாகிய தொழில் கெடாமல் கண்ணோட்டம் உடையவராக இருக்கவல்லவர்க்கு, இவ்வுலகம் உரிமை உடையது. 578

9. **ஒறுத்துஆற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்**
**பொறுத்துஆற்றும் பண்பே தலை**.

தண்டித்தற்குரிய தன்மை உடையவரிடத்திலும் கண்ணோட்டம் செய்து, (அவர் செய்த குற்றத்தைப்) பொறுத்துக் காக்கும் பண்பே சிறந்தது. 579

10. **பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்**.

யாவராலும் விரும்பத்தக்க நாகரிகமான கண்ணோட்டத்தை விரும்புகின்றவர், பழகியவர் தமக்கு நஞ்சு இடக்கண்டும் அதை உண்டு அமைவர். 580

1. **ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்**
**தெற்றென்க மன்னவன் கண்**.

ஒற்றரும் புகழ் அமைந்த நீதிநூலும் ஆகிய இவ்விருவகைக் கருவிகளையும் அரசன் தன்னுடைய கண்களாகத் தெளிய வேண்டும். 581

2. **எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்**
**வல்லறிதல் வேந்தன் தொழில்**.

எல்லாரிடத்திலும்நிகழ்கின்றவை எல்லாவற்றையும் எக்காலத்திலும்(ஒற்றரைக்கொண்டு) விரைந்து அறிதல் அரசனுக்குரிய தொழிலாகும். 582

3. **ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்**
**கொற்றம் கொளக்கிடந்தது இல்**.

ஒற்றரால் (நாட்டு நிகழ்ச்சிகளை) அறிந்து அவற்றின் பயனை ஆராய்ந்துணராத அரசன் வெற்றி பெறத்தக்க வழிவேறு இல்லை. 583

4. **வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு**
**அனைவரையும் ஆராய்வது ஒற்று**.

தம்முடைய தொழிலைச் செய்கின்றவர், தம் சுற்றத்தார், தம் பகைவர் என்று கூறப்படும் எல்லாரையும் ஆராய்வதே ஒற்றரின் தொழிலாகும். 584

5. **கடாஅ உருவொடு கண்அஞ்சாது யாண்டும்**
**உகாஅமை வல்லதே ஒற்று**.

ஐயுற முடியாத உருவத்தோடு, பார்த்தவருடைய கண்பார்வைக்கு அஞ்சாமல் எவ்விடத்திலும் மனத்திலுள்ளதை வெளிப்படுத்தாமல், இருக்கவல்லவனே ஒற்றன் ஆவன். 585

6. **துறந்தார் படிவத்தர் ஆகி இறந்துஆராய்ந்து**
**என்செயினும் சோர்வுஇலது ஒற்று**.

துறந்தவரின் வடிவத்தை உடையவராய், அரிய இடங்களிலெல்லாம் சென்று ஆராய்ந்து, (ஐயுற்றவர்) என்ன செய்தாலும் சோர்ந்துவிடாதவரே ஒற்றர் ஆவார். 586

7. **மறைந்தவை கேட்கவற்று ஆகி அறிந்தவை**
**ஐயப்பாடு இல்லதே ஒற்று**.

மறைந்த செய்திகளையும் கேட்டறியவல்லவனாய் அறிந்த செய்திகளை ஐயப்படாமல் துணியவல்லவனாய் உள்ளவனே ஒற்றன் ஆவான். 587

8. **ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்**
**ஒற்றினால் ஒற்றிக் கொளல்**.

ஓர் ஒற்றன் மறைந்து கேட்டுத் தெரிவித்த செய்தியையும் மற்றோர் ஒற்றனால் கேட்டுவரச் செய்து ஒப்புமை கண்டபின் உண்மை என்று கொள்ள வேண்டும். 588

9. **ஒற்றுஒற்று உணராமை ஆள்க உடன்மூவர்**
**சொல்தொக்க தேறப் படும்**.

ஓர் ஒற்றனை மற்றோர் ஒற்றன் அறியாதபடி ஆளவேண்டும்; அவ்வாறு ஆளப்பட்ட ஒற்றர் மூவரின் சொல் ஒத்திருந்தால் அவை உண்மை எனத் தெளியப்படும். 589

10. **சிறப்புஅறிய ஒற்றின்கண் செய்யற்க: செய்யின்**
**புறப்படுத்தான் ஆகும் மறை**.

ஒற்றனிடத்தில் செய்யும் சிறப்பைப் பிறர் அறியுமாறு செய்யக்கூடாது; செய்தால் மறைப்பொருளைத் தானே வெளிப்படுத்தியவன் ஆவான். 590

1. **உடையர் எனப்படுவது ஊக்கம்அஃது இல்லார்**
   **உடையது உடையரோ மற்று?**

ஒருவர் பெற்றிருக்கின்றார் என்று சொல்லத்தக்க சிறப்புடையது ஊக்கமாகும்; ஊக்கம் இல்லாதவர் வேறு எதைப் பெற்றிருந்தாலும் அதை உடையவர் ஆவரோ? 591

2. **உள்ளம் உடைமை உடைமை: பொருள்உடைமை**
   **நில்லாது நீங்கி விடும்.**

ஒருவர்க்கு ஊக்கமுடைமையே நிலையான உடைமையாகும்; மற்றப் பொருளுடைமையானது நிலைபேறு இல்லாமல் நீங்கிவிடுவதாகும். 592

3. **ஆக்கம் இழந்தேம்என்று அல்லாவார் ஊக்கம்**
   **ஒருவந்தம் கைத்துஉடை யார்.**

ஊக்கத்தை உறுதியாகத் தம்கைப் பொருளாக உடையவர், ஆக்கம் (இழந்துவிட்ட காலத்திலும்) இழந்துவிட்டோம் என்று கலங்கமாட்டார். 593

4. **ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா**
   **ஊக்கம் உடையா னுழை.**

சோர்வு இல்லாத ஊக்கம் உடையவனிடத்தில் ஆக்கமானது தானே அவன் உள்ள இடத்திற்கு வழி கேட்டுக்கொண்டு போய்ச் சேரும். 594

5. **வெள்ளத்து அனைய மலர்நீட்டம்: மாந்தர்தம்**
   **உள்ளத்து அனையது உயர்வு.**

நீர்ப்பூக்களின் தாளின் நீளம் அவை நின்ற நீரின் அளவினவாகும்; மக்களின் ஊக்கத்தின் அளவினதாகும் வாழ்க்கையின் உயர்வு. 595

6. **உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல்: மற்றுஅது**
**தள்ளினும் தள்ளாமை நீர்த்து**.

எண்ணுவதெல்லாம் உயர்வைப் பற்றியே எண்ணவேண்டும்; அவ்வுயர்வு கைகூடாவிட்டாலும் அவ்வாறு எண்ணுவதை விடக்கூடாது. 596

7. **சிதைவுஇடத்து ஒல்கார் உரவோர் புதையம்பின்**
**பட்டுப்பாடு ஊன்றும் களிறு**.

உடம்பை மறைக்குமளவு அம்புகளால் புண்பட்டும், யானை தன் பெருமையை நிலைநிறுத்தும்; அதுபோல், ஊக்கம் உடையவர் அழிவு வந்தவிடத்திலும் தளரமாட்டார். 597

8. **உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து**
**வள்ளியம் என்னும் செருக்கு**.

ஊக்கம் இல்லாதவர், 'இவ்வுலகில் யாம் வண்மை உடையேம் ' என்று தம்மைத் தாம் எண்ணி மகிழும் மகிழ்ச்சியை அடையமாட்டார். 598

9. **பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை**
**வெரூஉம் புலிதாக் குறின்**.

யானை பருத்த உடம்பை உடையது; கூர்மையான கொம்புகளை உடையது; ஆயினும் ஊக்கமுள்ளதாகிய புலி தாக்கினால் அதற்கு அஞ்சும். 599

10. **உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கை: அஃதுஇல்லார்**
**மரம்மக்கள் ஆதலே வேறு**.

ஒருவனுக்கு வலிமையாவது ஊக்க மிகுதியே. அவ்வூக்கம் இல்லாதவர் மரங்களே; (வடிவால்) மக்களைப் போல் இருத்தலே வேறுபாடு. 600

1. **குடிஎன்னும் குன்றா விளக்கம் மடிஎன்னும்**
**மாசுஊர மாய்ந்து கெடும்**.

ஒருவனுக்குத் தன் குடியாகிய மங்காத விளக்கு, அவனுடைய சோம்பலாகிய மாசு படியப் படிய ஒளி மங்கிக் கெட்டுவிடும். 601

2. **மடியை மடியா ஒழுகல் குடியைக்**
**குடியாக வேண்டு பவர்.**

தம் குடியைச் சிறப்புடைய குடியாக விளங்குமாறு செய்ய விரும்புகின்றவர் சோம்பலைச் சோம்பலாகக் கொண்டு முயற்சியுடையவராய் நடக்கவேண்டும். 602

3. **மடிமடிக் கொண்டுஒழுகும் பேதை பிறந்த**
**குடிமடியும் தன்னினும் முந்து.**

அழிக்கும் இயல்புடைய சோம்பலைத் தன்னிடம் கொண்டு நடக்கும் அறிவில்லாதவன் பிறந்த குடி, அவனுக்கு முன் அழிந்துவிடும். 603

4. **குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து**
**மாண்ட உஞற்றி லவர்க்கு.**

சோம்பலில் அகப்பட்டுச் சிறந்த முயற்சி இல்லாதவராய் வாழ்கின்றவர்க்குக் குடியின் பெருமை அழிந்து குற்றம் பெருகும். 604

5. **நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்**
**கெடுநீரார் காமக் கலன்.**

காலம் நீட்டித்தல், மறதி, சோம்பல், அளவு மீறிய தூக்கம் ஆகிய இந் நான்கும் கெடுகின்ற இயல்புடையவர் விரும்பி ஏறும் மரக்கலமாம். 605

6. **படியுடையார் பற்றுஅமைந்தக் கண்ணும் மடியுடையார்**
**மாண்பயன் எய்தல் அரிது.**

நாட்டை ஆளும் தலைவருடைய உறவு தானே வந்து சேர்ந்தாலும், சோம்பல் உடையவர் சிறந்த பயனை அடைய முடியாது. 606

7. **இடிபுரிந்து எள்ளும்சொல் கேட்பர் மடிபுரிந்து**
**மாண்ட உஞற்றி லவர்.**

சோம்பலை விரும்பி மேற்கொண்டு சிறந்த முயற்சி இல்லாதவராய் வாழ்கின்றவர், பிறர் இடித்துக் கூறி இகழ்கின்ற சொல்லைக் கேட்கும் நிலைமை அடைவர். 607

8. **மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு**
**அடிமை புகுத்தி விடும்**.

சோம்பல் நல்ல குடியில் பிறந்தவனிடம் வந்து பொருந்தினால், அஃது அவனை அவனுடைய பகைவர்க்கு அடிமையாகுமாறு செய்துவிடும். 608

9. **குடிஆண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்**
**மடிஆண்மை மாற்றக் கெடும்**.

ஒருவன் சோம்பலை ஆளுந் தன்மையை மாற்றி விட்டால் அவனுடைய குடியிலும் ஆண்மையிலும் வந்த குற்றம் தீர்ந்து விடும். 609

10. **மடிஇலா மன்னவன் எய்தும் அடிஅளந்தான்**
**தாஅயது எல்லாம் ஒருங்கு**.

அடியால் உலகத்தை அளந்த கடவுள் தாவிய பரப்பு எல்லாவற்றையும் சோம்பல் இல்லாத அரசன் ஒருசேர அடைவான். 610

1. **அருமை உடைத்துஎன்று அசாவாமை வேண்டும்**
**பெருமை முயற்சி தரும்**.

இது செய்வதற்கு அருமையானது என்று சோர்வுறாமல் இருக்க வேண்டும்; அதைச் செய்வதற்குத் தக்க பெருமையை முயற்சி உண்டாக்கும். 611

2. **வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை**
**தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு**.

தொழிலாகிய குறையைச் செய்யாமல் கைவிட்டவரை உலகம் கைவிடும்; ஆகையால் தொழிலில் முயற்சி இல்லாதிருத்தலை ஒழிக்க வேண்டும். 612

3. **தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே**
**வேளாண்மை என்னும் செருக்கு**.

பிறர்க்கு உதவி செய்தல் என்னும் மேம்பட்ட நிலைமை, முயற்சி என்று சொல்லப்படுகின்ற உயர்ந்த பண்பில் நிலைத்திருக்கின்றது. 613

4. **தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை**
**வாள்ஆண்மை போலக் கெடும்**.

முயற்சி இல்லாதவன் உதவி செய்பவனாக இருத்தல், பேடி தன் கையால் வாளை எடுத்து ஆளும் தன்மைபோல் நிறைவேறாமல் போகும். 614

5. **இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்**
**துன்பம் துடைத்துஊன்றும் தூண்**.

தன் இன்பத்தை விரும்பாதவனாய் மேற்கொண்ட செயலை முடிக்க விரும்புகின்றவன், தன் சுற்றத்தாரின் துன்பத்தைப் போக்கித் தாங்குகின்ற தூண் ஆவான். 615

6. **முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை**
**இன்மை புகுத்தி விடும்**.

முயற்சி ஒருவனுக்குச் செல்வத்தைப் பெருகச் செய்யும்; முயற்சி இல்லாதிருத்தல் அவனுக்கு வறுமையைச் சேர்த்து விடும். 616

7. **மடியுளாள் மாமுகடி என்ப மடிஇலான்**
**தாள்உளாள் தாமரையி னாள்**.

ஒருவனுடைய சோம்பலிலே கரிய மூதேவி வாழ்கின்றாள்; சோம்பல் இல்லாதவனுடைய முயற்சியிலே திருமகள் வாழ்கின்றாள். 617

8. **பொறிஇன்மை யார்க்கும் பழிஅன்று அறிவுஅறிந்து**
**ஆள்வினை இன்மை பழி**.

நன்மை விளைக்கும் ஊழ் இல்லாதிருத்தல் யார்க்கும் பழி அன்று; அறிய வேண்டியவற்றை அறிந்து முயற்சி செய்யாதிருத்தலே பழி. 618

9. **தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும்**.

ஊழின் காரணத்தால் ஒரு செயல் முடியாமல் போகுமாயினும், முயற்சி தன் உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியையாவது கொடுக்கும். 619

10. **ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்**
**தாழாது உஞற்று பவர்**.

சோர்வு இல்லாமல் முயற்சியில் குறைவு இல்லாமல் முயல்கின்றவர், (செயலுக்கு இடையூறாக வரும்) ஊழையும் ஒரு காலத்தில் தோல்வியுறச் செய்வர். 620

1. **இடுக்கண் வருங்கால் நகுக அதனை**
**அடுத்துஊர்வது அஃதுஒப்பது இல்**.

துன்பம் வரும்போதும் (அதற்காகக் கலங்காமல்) நகுதல் வேண்டும். அத் துன்பத்தை நெருங்கி எதிர்த்து வெல்லவல்லது அதைப் போன்றது வேறு இல்லை. 621

2. **வெள்ளத்து அனைய இடும்பை அறிவுஉடையான்**
**உள்ளத்தின் உள்ளக் கெடும்**.

வெள்ளம்போல் அளவற்றதாய் வரும் துன்பமும், அறிவுடையவன் தன் உள்ளத்தினால் அத் துன்பத்தின் இயல்பை நினைத்த அளவில் கெடும். 622

3. **இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு**
**இடும்பை படாஅ தவர்**.

துன்பம் வந்தபோது அதற்காக வருந்திக் கலங்காதவர் அந்தத் துன்பத்திற்கே துன்பம் உண்டாக்கி அதை வென்று விடுவர். 623

4. **மடுத்தவாய் எல்லாம் பகடுஅன்னான் உற்ற**
**இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து**.

தடைப்பட்ட இடங்களில் எல்லாம் (வண்டியை இழுத்துச் செல்லும்) எருதுபோல் விடாமுயற்சி உடையவன் உற்ற துன்பமே துன்பப்படுவதாகும். 624

5. **அடுக்கி வரினும் அழிவுஇலான் உற்ற**
   **இடுக்கண் இடுக்கண் படும்**.

விடாமல் மேன்மேலும் துன்பம் வந்தபோதிலும் கலங்காமலிருக்கும் ஆற்றலுடையவன் அடைந்த துன்பமே துன்பப்பட்டுப் போகும். 625

6. **அற்றேம்என்று அல்லல் படுபவோ பெற்றேம்என்று**
   **ஓம்புதல் தேற்றா தவர்?**

செல்வம் வந்தபோது `இதைப் பெற்றோமே` என்று பற்றுக் கொண்டு காத்தறியாதவர், வறுமை வந்தபோது `இழந்தோமே` என்று அல்லல்படுவாரோ? 626

7. **இலக்கம் உடம்புஇடும்பைக் கென்று கலக்கத்தைக்**
   **கையாறாக் கொள்ளாதாம் மேல்**.

மேலோர், உடம்பு துன்பத்திற்கு இலக்கமானது என்று உணர்ந்து, (துன்பம் வந்தபோது) கலங்குவதை ஒழுக்க நெறியாகக் கொள்ளமாட்டார். 627

8. **இன்பம் விழையான் இடும்பை இயல்புஎன்பான்**
   **துன்பம் உறுதல் இலன்**.

இன்பமானதை விரும்பாதவனாய்த் துன்பம் இயற்கையானது என்று தெளிந்திருப்பவன் துன்பம் வந்தபோது துன்ப முறுவது இல்லை. 628

9. **இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
   **துன்பம் உறுதல் இலன்**.

இன்பம் வந்த காலத்தில் அந்த இன்பத்தை விரும்பிப் போற்றாதவன், துன்பம் வந்த காலத்தில் அந்தத் துன்பத்தை அடைவதும் இல்லை. 629

10. **இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்**
**ஒன்னார் விழையும் சிறப்பு**.

ஒருவன் துன்பத்தையே தனக்கு இன்பமாகக் கருதிக் கொள்வானானால் அவனுடைய பகைவரும் விரும்பத்தக்க சிறப்பு உண்டாகும். 630

1. **கருவியும் காலமும் செய்கையும் செய்யும்**
**அருவினையும் மாண்டது அமைச்சு**.

செயலுக்கு உரிய கருவியும், ஏற்ற காலமும், செய்யும் வகையும், செய்யப்படும் அரிய செயலும் சிறப்படையச் செய்ய வல்லவன் அமைச்சன். 631

2. **வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு**
**ஐந்துடன் மாண்டது அமைச்சு**.

அஞ்சாமையும், குடிபிறப்பும், காக்கும் திறனும், கற்றறிந்த அறிவும், முயற்சியும் ஆகிய இவ்வைந்தும் திருந்தப் பெற்றவன் அமைச்சன். 632

3. **பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்**
**பொருத்தலும் வல்லது அமைச்சு**.

பகைவர்க்குத் துணையானவரைப் பிரித்தலும், தம்மிடம் உள்ளவரைக் காத்தலும், பிரிந்தவரை மீண்டும் சேர்த்துக் கொள்ளலும் வல்லவன் அமைச்சன். 633

4. **தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்**
**சொல்லலும் வல்லது அமைச்சு**.

(செய்யத்தக்க செயலை) ஆராய்தலும், அதற்குரிய வழிகளை ஆராய்ந்து செய்தலும், துணிவாகக் கருத்தைச் சொல்லுதலும் வல்லவன் அமைச்சன். 634

5. **அறன்அறிந்து ஆன்றுஅமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்**
**திறன்அறிந்தான் தேர்ச்சித் துணை**.

அறத்தை அறிந்தவனாய் அறிவு நிறைந்து அமைந்த சொல்லை உடையவனாய், எக்காலத்திலும் செயல்செய்யும் திறன் அறிந்தவனாய் உள்ளவன் ஆராய்ந்து கூறும் துணையாவான். 635

6. **மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்**
**யாஉள முன்நிற் பவை**.

இயற்கையான நுட்ப அறிவை நூலறிவோடு ஒருங்கே உடையவர்க்கு மிக்க நுட்பமான சூழ்ச்சிகளாய் முன் நிற்பவை எவை உள்ளன? 636

7. **செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து**
**இயற்கை அறிந்து செயல்**.

நூலறிவால் செயலைச் செய்யும் வகைகளை அறிந்த போதிலும் உலகத்தின் இயற்கையை அறிந்து அதனோடு பொருந்துமாறு செய்ய வேண்டும். 637

8. **அறிகொன்று அறியான் எனினும் உறுதி**
**உழைஇருந்தான் கூறல் கடன்**.

அறிவுறுத்துவாரின் அறிவையும் அழித்துத் தானும் அறியாதவனாக அரசன் இருந்தாலும், அமைச்சன் அவனுக்கு உறுதியானவற்றை எடுத்துக்கூறுதல் கடமையாகும். 638

9. **பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்**
**எழுபது கோடி உறும்**.

தவறான வழியை எண்ணிக் கூறுகின்ற அமைச்சனை விட எழுபது கோடி பகைவர் பக்கத்தில் இருந்தாலும் நன்மையாகும். 639

10. **முறைப்படச் சூழ்ந்தும் முடிவுஇலவே செய்வர்**
**திறப்பாடு இலாஅ தவர்**.

(செயல்களை முடிக்கும்) திறன் இல்லாதவர், முன்னே முறையாக எண்ணி வைத்திருந்தும் (செய்யும்போது) குறையானவைகளையே செய்வர். 640

1. **நாநலம் என்னும் நலன்உடைமை அந்நலம்**
**யாநலத்து உள்ளதூஉம் அன்று**.

நாவன்மையாகிய நலம் ஒருவகைச் செல்வம் ஆகும்; அந்த நாநலம் தனிச்சிறப்புடையது. ஆகையால் மற்ற எந்த நலங்களிலும் அடங்குவது அன்று. 641

2. **ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்**
**காத்துஓம்பல் சொல்லின்கண் சோர்வு**.

ஆக்கமும் கேடும் சொல்கின்ற சொல்லால் வருதலால் ஒருவன் தன்னுடைய சொல்லில் தவறு நேராமல் காத்துக் கொள்ள வேண்டும். 642

3. **கேட்டார்ப் பிணிக்குந் தகைஅவாய்க் கேளாரும்**
**வேட்ப மொழிவதாஞ் சொல்**.

சொல்லும்போது கேட்டவரைத் தன் வயப்படுத்தும் பண்புகளுடன், கேட்காதவரும் கேட்க விரும்புமாறு கூறப்படுவது சொல்வன்மையாகும், 643

4. **திறன்அறிந்து சொல்லுக சொல்லை அறனும்**
**பொருளும் அதனின்ஊங்கு இல்**.

சொல்லின் திறத்தை அறிந்து சொல்லை வழங்க வேண்டும்; அத்தகைய சொல்வன்மையைவிடச் சிறந்த அறமும் பொருளும் இல்லை. 644

5. **சொல்லுக சொல்லைப் பிறிதுஓர்சொல் அச்சொல்லை**
**வெல்லும்சொல் இன்மை அறிந்து**.

வேறொரு சொல் அந்தச் சொல்லை வெல்லும் சொல்லாக இல்லாதிருத்தலை அறிந்த பிறகே சொல்லக் கருதியதைச் சொல்லவேண்டும். 645

6. **வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்**
**மாட்சியின் மாசுஅற்றார் கோள்**.

பிறர் விரும்பும் படியாகத் தாம் சொல்லி, பிறர் சொல்லும் போது அச்சொல்லின் பயனை ஆராய்ந்து கொள்ளுதல் மாசற்ற சிறப்புடையவரின் கொள்கையாகும். 646

7. **சொலல்வல்லன் சோர்வுஇலன் அஞ்சான் அவனை**
**இகல்வெல்லல் யார்க்கும் அரிது**.

தான் கருதியவற்றை நன்கு சொல்ல வல்லவனாய், சொல்லும் போது சோர்வு இல்லாதவனாய், அஞ்சாதவனாய் உள்ளவனை மாறுபாட்டால் வெல்வது யார்க்கும் முடியாது. 647

8. **விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது**
**சொல்லுதல் வல்லார்ப் பெறின்**.

கருத்துக்களை ஒழுங்காகக் கோத்து இனிமையாகச் சொல்ல வல்லவரைப் பெற்றால், உலகம் விரைந்து அவருடைய ஏவலைக் கேட்டு நடக்கும். 648

9. **பலசொல்லக் காமுறுவர் மன்றமாசு அற்ற**
**சிலசொல்லல் தேற்றா தவர்**.

குற்றமற்றவையாகிய சில சொற்களைச் சொல்லத் தெரியாதவர், உண்மையாகவே பல சொற்களைச் சொல்லிக் கொண்டிருக்க விரும்புவர். 649

10. **இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் கற்றது**
**உணர விரித்துஉரையா தார்**.

தாம் கற்ற நூற்பொருளைப் பிறர் உணருமாறு விரித்துரைக்க முடியாதவர், கொத்தாக மலர்ந்திருந்த போதிலும் மணம் கமழாத மலரைப் போன்றவர். 650

1. **துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்**
**வேண்டிய எல்லாம் தரும்**.

ஒருவனுக்கு வாய்ந்த துணையின் நன்மை ஆக்கத்தைக் கொடுக்கும்; செய்யும் வினையின் நன்மை அவன் விரும்பிய எல்லாவற்றையும் கொடுக்கும். 651

2. **என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு**
**நன்றி பயவா வினை**.

புகழையும் அறத்தையும் தாராத (தூய்மை அற்ற) செயல்களை எக்காலத்திலும் ஒருவன் செய்யாமல் விட்டொழிக்க வேண்டும். 652

3. **ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை**
**ஆஅதும் என்னு மவர்**.

மேன்மேலும் உயர்வோம் என்று விரும்பி முயல்கின்றவர் தம்முடைய புகழ் கெடுவதற்குக் காரணமான செயலைச் செய்யாமல் விடவேண்டும். 653

4. **இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்**
**நடுக்கற்ற காட்சி யவர்**.

அசைவற்ற தெளிந்த அறிவினையுடையவர், துன்பத்தில் சிக்குண்டாலும் (அத் துன்பத்தைத் தீர்ப்பதற்காகவும்) இழிவான செயல்களைச் செய்யமாட்டார். 654

5. **எற்றுஎன்று இரங்குவ செய்யற்க செய்வானேல்**
**மற்றுஅன்ன செய்யாமை நன்று**.

பிறகு நினைந்து வருந்துவதற்குக் காரணமான செயல்களைச் செய்யக்கூடாது. ஒருகால் தவறிச் செய்தாலும், மீண்டும் அத்தன்மையானவற்றைச் செய்யாதிருத்தல் நல்லது. 655

6. **ஈன்றான் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை**.

பெற்ற தாயின் பசியைக் கண்டு வருந்த நேர்ந்தாலும், சான்றோர் பழிப்பதற்குக் காரணமான இழிவுற்ற செயல்களை ஒருவன் செய்யக்கூடாது. 656

7. **பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்**
**கழிநல் குரவே தலை**.

பழியை மேற்கொண்டு இழிதொழில் செய்து பெறும் செல்வத்தைவிடச் சான்றோர் வினைத்தூய்மை யோடிருந்து பெறும் பொல்லாத வறுமையே சிறந்தது. 657

8. **கடிந்த கடிந்துஓரார் செய்தார்க்கு அவைதாம்**
**முடிந்தாலும் பீழை தரும்**.

ஆகாதவை என விலக்கப்பட்ட செயல்களை விலக்கி விடாமல் மேற்கொண்டு செய்தவர்க்கு, அச் செயல்கள் நிறைவேறினாலும் துன்பமே கொடுக்கும். 658

9. **அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்**
**பிற்பயக்கும் நற்பா லவை.**

பிறர் வருந்துமாறு செய்து பெற்ற பொருள் எல்லாம் பெற்றவன் வருந்துமாறு செய்து போய்விடும்; நல்வழியில் வந்தவை இழக்கப்பட்டாலும் பிறகு பயன் தரும். 659

10. **சலத்தால் பொருள்செய்துஏம் ஆர்த்தல் பசுமண்**
**கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று**

வஞ்சனையான வழியால் பொருளைச் சேர்த்துக் காப்பாற்றுதல், பச்சை மண்கலத்துள் நீரைவிட்டு அதைக் காப்பாற்றி வைத்தாற் போன்றது. 660

1. **வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்**
**மற்றைய எல்லாம் பிற.**

ஒரு தொழிலின் திட்பம் என்று சொல்லப்படுவது ஒருவனுடைய மனத்தின் திட்பமே (உறுதியே) ஆகும்; மற்றவை எல்லாம் வேறானவை. 661

2. **ஊறுஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்**
**ஆறுஎன்பர் ஆய்ந்தவர் கோள்.**

இடையூறு வருவதற்கு முன்பே நீக்குதல், வந்தபின் தளராமை ஆகிய இந்த இரண்டினது வழியே வினைத் திட்பம் பற்றி ஆராய்ந்தவரின் கொள்கையாம். 662

3. **கடைக்கொட்கச் செய்தக்கது ஆண்மை இடைக்கொட்கின்**
**எற்றா விழுமம் தரும்.**

செய்யும் செயலை முடிவில் வெளிப்படும்படியாகச் செய்யும் தகுதியே ஆண்மையாகும்; இடையில் வெளிப்பட்டால் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும். 663

4. **சொல்லுதல் யார்க்கும் எளிய: அரியஆம்**
**சொல்லிய வண்ணம் செயல்**.

'இச்செயலை இவ்வாறு செய்து முடிக்கலாம்' என்று சொல்லுதல் எவர்க்கும் எளியனவாம் ; சொல்லியபடி செய்து முடித்தல் அரியனவாம். 664

5. **வீறுஎய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்**
**ஊறுஎய்தி உள்ளப் படும்**.

செயல் திறனால் பெருமை பெற்று உயர்ந்தவரின் வினைத் திட்பமானது, நாட்டை ஆளும் அரசனிடத்திலும் எட்டி மதிக்கப்பட்டு விளங்கும். 665

6. **எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்**
**திண்ணியர் ஆகப் பெறின்**.

எண்ணியவர் (எண்ணியபடியே செயல் ஆற்றுவதில்) உறுதியுடையவராக இருக்கப் பெற்றால், அவர் எண்ணியவற்றை எண்ணியவாறே அடைவர். 666

7. **உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு**
**அச்சுஆணி அன்னார் உடைத்து**.

உருளும் பெரிய தேர்க்கு அச்சில் இருந்து தாங்கும் சிறிய ஆணிபோன்றவர்கள் உலகத்தில் உள்ளனர். அவர்களுடைய உருவின் சிறுமையைக் கண்டு இகழக் கூடாது. 667

8. **கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது**
**தூக்கம் கடிந்து செயல்**.

மனம் கலங்காமல் ஆராய்ந்து துணிந்து ஏற்ற தொழிலைச் சோர்வு கொள்ளாமல் காலந் தாழ்த்தாமல் செய்து முடிக்க வேண்டும். 668

9. **துன்பம் உறவரினும் செய்க துணிவுஆற்றி**
**இன்பம் பயக்கும் வினை**.

(முடிவில்) இன்பம் கொடுக்கும் தொழிலைச் செய்யும் போது துன்பம் மிக வந்தபோதிலும் துணிவு மேற் கொண்டு செய்து முடிக்க வேண்டும். 669

10. **எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்**
**வேண்டாரை வேண்டாது உலகு**.

வேறு எத்தகைய உறுதி உடையவராக இருந்தாலும், செய்யும் தொழிலில் உறுதி இல்லாதவரை உலகம் விரும்பிப் போற்றாது. 670

1. **சூழ்ச்சி முடிவு துணிவுஎய்தல் அத்துணிவு**
**தாழ்ச்சியுள் தங்குதல் தீது**.

ஆராய்ந்து எண்ணுவதற்கு எல்லை துணிவு கொள்வதே ஆகும். அவ்வாறு கொண்ட துணிவு காலந் தாழ்த்து நிற்பது குற்றமாகும். 671

2. **தூங்குக தூங்கிச் செயற்பால: தூங்கற்க**
**தூங்காது செய்யும் வினை**.

காலந்தாழ்த்துச் செய்யத் தக்கவற்றைக் காலந்தாழ்த்தே செய்யவேண்டும்; காலந்தாழ்க்காமல் விரைந்து செய்ய வேண்டிய செயல்களைச் செய்யக் காலந்தாழ்த்தக்கூடாது. 672

3. **ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே: ஒல்லாக்கால்**
**செல்லும்வாய் நோக்கிச் செயல்**.

இயலுமிடத்திலெல்லாம் செயலைச் செய்து முடித்தல் நல்லது; இயலவில்லையானால் பயன்படும் இடம் நோக்கியாவது செய்யவேண்டும். 673

4. **வினைபகை என்றஇரண்டின் எச்சம் நினையுங்கால்**
**தீஎச்சம் போலத் தெறும்**.

செய்யத் தொடங்கிய செயல், கொண்ட பகை என்று இவ்விரண்டின் குறை, ஆராய்ந்து பார்த்தால், தீயின் குறைபோல் தெரியாமல் வளர்ந்து கெடுக்கும். 674

5. **பொருள்கருவி காலம் வினைஇடனொடு ஐந்தும்**
**இருள்தீர எண்ணிச் செயல்**.

வேண்டிய பொருள், ஏற்ற கருவி, தக்க காலம், மேற்கொண்ட தொழில், உரிய இடம் ஆகிய ஐந்தினையும் மயக்கம் தீர எண்ணிச் செய்ய வேண்டும். 675

6. **முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்**
**படுபயனும் பார்த்துச் செயல்.**

செயலை முடிக்கும் வகையும், வரக்கூடிய இடையூறும், முடிந்தபோது கிடைக்கும் பெரும்பயனும் ஆகியவற்றை ஆராய்ந்து செய்ய வேண்டும். 676

7. **செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை**
**உள்ளறிவான் உள்ளம் கொளல்.**

செயலைச் செய்கின்றவன் செய்யவேண்டியமுறை, அந்தச் செயலின் உண்மையான இயல்பை அறிந்தவனுடைய கருத்தைத் தான் ஏற்றுக் கொள்வதாகும். 677

8. **வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்**
**யானையால் யானையாத் தற்று.**

ஒரு செயலைச் செய்யும்போது அச்செயலால் மற்றொரு செயலையும் செய்து முடித்துக்கொள்ளல், ஒரு யானையால் மற்றொரு யானையைப் பிடித்தலைப் போன்றது. 678

9. **நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே**
**ஒட்டாரை ஒட்டிக் கொளல்.**

பகைவராக உள்ளவரைப் பொருந்துமாறு சேர்த்துக் கொள்ளல், நண்பர்க்கு உதவியானவற்றைச் செய்தலை விட விரைந்து செய்யத்தக்கதாகும். 679

10. **உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்**
**கொள்வர் பெரியார்ப் பணிந்து.**

வலிமை குறைந்தவர், தம்மைச் சார்ந்துள்ளவர் நடுங்குவதற்காகத் தாம் அஞ்சி, வேண்டியது கிடைக்குமானால் வலிமை மிக்கவரைப் பணிந்து ஏற்றுக் கொள்வார். 680

1. **அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்துஅவாம்**
**பண்புடைமை தூதுஉரைப்பான் பண்பு**.

அன்புடையவனாதல், தகுதியான குடிப்பிறப்பு உடையவனாதல், அரசர் விரும்பும் சிறந்த பண்பு உடையவனாதல் அகிய இவை தூது உரைப்பவனுடைய தகுதிகள். 681

2. **அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுஉரைப்பார்க்கு**
**இன்றி யமையாத மூன்று**.

அன்பு, அறிவு, ஆராய்ந்து சொல்கின்ற சொல்வன்மை ஆகிய இவை தூது உரைப்பவர்க்கு இன்றியமையாத மூன்று பண்புகளாகும். 682

3. **நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்**
**வென்றி வினையுரைப்பான் பண்பு**.

அரசனிடம் சென்று தன் அரசனுடைய வெற்றிக்குக் காரணமான செயலைப்பற்றித் தூது உரைப்பவன் திறம், நூலறிந்தவருள் நூல் வல்லவனாக விளங்குதல் ஆகும். 683

4. **அறிவுஉரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்**
**செறிவுடையான் செல்க வினைக்கு**.

இயற்கை அறிவு, விரும்பத்தக்க தோற்றம், ஆராய்ச்சி உடைய கல்வி ஆகிய இம் மூன்றின் பொருத்தம் உடையவன் தூது உரைக்கும் தொழிலுக்குச் செல்லலாம் 684

5. **தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி**
**நன்றி பயப்பதாம் தூது**.

பலவற்றைத் தொகுத்துச் சொல்லியும், அவற்றுள் பயனற்றவைகளை நீக்கியும், மகிழுமாறு சொல்லியும் தன் தலைவனுக்கு நன்மை உண்டாக்குகின்றவன் தூதன். 685

6. **கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்**
**தக்கது அறிவதாம் தூது**.

கற்பன கற்று, பிறருடைய பகையான பார்வைக்கு அஞ்சாமல், கேட்பவர் உள்ளத்தில் பதியுமாறு சொல்லி, காலத்திற்குப் பொருத்தமானதை அறிகின்றவனே தூதன். 686

7. **கடன்அறிந்து காலம் கருதி இடன்அறிந்து**
**எண்ணி உரைப்பான் தலை**.

தன் கடமை இன்னது என்று தெளிவாக அறிந்து, அதைச் செய்வதற்கு ஏற்ற காலத்தை எதிர்நோக்கித் தக்க இடத்தையும் அறிந்து ஆராய்ந்து சொல்கின்றவனே தூதன். 687

8. **தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்**
**வாய்மை வழியுரைப்பான் பண்பு**.

தூய ஒழுக்கம் உடையவனாதல், துணை உடையவனாதல், துணிவு உடையவனாதல் இந்த மூன்றும் வாய்த்திருத்தலே தூது உரைப்பவனுடைய தகுதியாகும். 688

9. **விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்**
**வாய்சோரா வன்க ணவன்**.

குற்றமான சொற்களை வாய் சோர்ந்தும் சொல்லாத உறுதி உடையவனே அரசன் சொல்லியனுப்பிய சொற்களை மற்ற வேந்தர்க்கு உரைக்கும் தகுதியுடையவன். 689

10. **இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவர்க்கு**
**உறுதி பயப்பதாம் தூது**.

தனக்கு அழிவே தருவதாக இருந்தாலும், அதற்காக அஞ்சி விட்டுவிடாமல், தன் அரசனுக்கு நன்மை உண்டாகுமாறு செய்கின்றவனே தூதன். 690

1. **அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க**
**இகல்வேந்தர்ச் சேர்ந்துஒழுகு வார்**.

அரசரைச் சார்ந்து வாழ்கின்றவர், அவரை மிக நீங்காமலும், மிக அணுகாமலும் நெருப்பில் குளிர் காய்கின்றவர்போல இருக்க வேண்டும். 691

2. **மன்னர் விழைப விழையாமை மன்னரால்**
**மன்னிய ஆக்கம் தரும்**.

அரசர் விரும்புகின்றவைகளைத் தாம் விரும்பாமலிருத்தல் (அரசரைச் சார்ந்திருப்பவர்க்கு) அரசரால் நிலையான ஆக்கத்தைப் பெற்றுத் தரும். 692

3. **போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்**
**தேற்றுதல் யார்க்கும் அரிது**.

(அரசரைச் சார்ந்தவர்) தம்மைக் காத்துக்கொள்ள விரும்பினால், அரிய தவறுகள் நேராமல் காத்துக் கொள்ள வேண்டும்; ஐயுற்றபின் அரசரைத் தெளிவித்தல் எவர்க்கும் முடியாது. 693

4. **செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்துஒழுகல்**
**ஆன்ற பெரியா ரகத்து**.

வல்லமை அமைந்த பெரியாரிடத்தில், (மற்றொருவன்) செவியை நெருங்கிச் சொல்லுதலும் உடன் சேர்ந்து நகைத்தலும் செய்யாமல் ஒழுக வேண்டும். 694

5. **எப்பொருளும் ஓரார் தொடரார்மற்று அப்பொருளை**
**விட்டக்கால் கேட்க மறை**.

(அரசர் மறைப்பொருள் பேசும்போது) எப்பொருளையும் உற்றுக்கேட்காமல், தொடர்ந்து வினவாமல், அப்பொருளை அவரே விட்டுச் சொன்னபோது கேட்டறிய வேண்டும். 695

6. **குறிப்புஅறிந்து காலம் கருதி வெறுப்புஇல**
**வேண்டுப வேட்பச் சொலல்**.

அரசருடைய குறிப்பை அறிந்து, தக்க காலத்தை எதிர் நோக்கி, வெறுப்பில்லாதவற்றையும் விருப்பமானவற்றையும் அவர் விரும்புமாறு சொல்ல வேண்டும். 696

7. **வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்**
**கேட்பினும் சொல்லா விடல்**.

அரசர் விரும்புகின்றவற்றை மட்டும் சொல்லிப் பயனில்லாதவற்றை அவரே கேட்டபோதிலும் எப்போதும் சொல்லாமல் விட வேண்டும். 697

8. **இளையர் இனமுறையர் என்றுஇகழார் நின்ற**
**ஒளியோடு ஒழுகப் படும்**.

(அரசனை) "எமக்கு இளையவர்; எமக்கு இன்ன முறை உடையவர்" என்று இகழாமல் அவருடைய நிலைக்கு ஏற்றவாறு அமைந்த புகழுடன் பொருந்த நடக்க வேண்டும். 698

9. **கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத செய்யார்**
**துளக்குற்ற காட்சி யவர்**.

அசைவற்ற தெளிந்த அறிவினை உடையவர், யாம் அரசரால் விரும்பப்பட்டோம்` என்று எண்ணி அவர் விரும்பாதவற்றைச் செய்யமாட்டார். 699

10. **பழையம் எனக்கருதிப் பண்புஅல்ல செய்யும்**
**கெழுதகைமை கேடு தரும்**.

`யாம் அரசர்க்குப் பழைமையானவராய் உள்ளோம் எனக் கருதித் தகுதி அல்லாதவற்றைச் செய்யும் உரிமை கேட்டைத் தரும். 700

1. **கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்**
**மாறாநீர் வையக்கு அணி**.

ஒருவர் சொல்லாமலே அவருடைய முகத்தை நோக்கி அவர் கருதிய குறிப்பை அறிகின்றவன் எப்போதும் உலகத்திற்கு ஓர் அணிகலன் ஆவான். 701

2. **ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்**
**தெய்வத்தோடு ஒப்பக் கொளல்**.

ஐயப்படாமல் மனத்தில் உள்ளதை உணரவல்லவனை (அவன் மனிதனே ஆனாலும்) தெய்வத்தோடு ஒப்பாகக் கொள்ள வேண்டும். 702

3. **குறிப்பின் குறிப்புஉணர் வாரை உறுப்பினுள்**
**யாது கொடுத்தும் கொளல்**.

(முகம் கண் இவற்றின்) குறிப்புக்களால் உள்ளக் குறிப்பை உணர வல்லவரை நாட்டின் உறுப்புக்களுள் எதைக் கொடுத்தாவது துணையாகப் பெற்றுக்கொள்ள வேண்டும். 703

4. **குறித்தது கூறாமைக் கொள்வாரோடு ஏனை**
   **உறுப்புஓர் அனையரால் வேறு**.

ஒருவன் மனத்தில் கருதியதை அவன் கூறாமலே அறிந்து கொள்ள வல்லவரோடு மற்றவர் உறுப்பால் ஒத்தவராக இருந்தாலும் அறிவால் வேறுபட்டவர் ஆவர். 704

5. **குறிப்பின் குறிப்புஉணரா வாயின் உறுப்பினுள்**
   **என்ன பயத்தவோ கண்**.

(முகம் கண் இவற்றின்) குறிப்புக்களால் உள்ளக் குறிப்பை உணராவிட்டால், ஒருவனுடைய உறுப்புக்களுள் கண்கள் என்ன பயன்படும்? 705

6. **அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
   **கடுத்தது காட்டும் முகம்**.

தன்னை அடுத்த பொருளைத் தன்னிடம் காட்டும் பளிங்கு போல். ஒருவனுடைய நெஞ்சத்தில் மிகுந்துள்ளதை அவனுடைய முகம் காட்டும் 706

7. **முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்**
   **காயினும் தான்முந் துறும்**.

ஒருவன் விருப்பம் கொண்டாலும் வெறுப்புக் கொண்டாலும், அவனுடைய முகம் முற்பட்டு அதைத் தெரிவிக்கும்; அம் முகத்தைவிட அறிவு மிக்கது உண்டோ? 707

8. **முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி**
   **உற்றது உணர்வார்ப் பெறின்**.

உள்ளக் குறிப்பை நோக்கி உற்றதை உணரவல்லவரைப் பெற்றால்,(அவரிடம் எதையும் கூறாமல்) அவருடைய முகத்தை நோக்கி நின்றால் போதும். 708

9. **பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்**
   **வகைமை உணர்வார்ப் பெறின்**.

கண்பார்வையின் வேறுபாடுகளை உணரவல்லவரைப் பெற்றால், (ஒருவனுடைய மனத்தில் உள்ள) பகையையும் நட்பையும் அவனுடைய கண்களே சொல்லிவிடும். 709

10. **நுண்ணியம் என்பார் அளக்கும்கோல் காணும்கால்**
**கண்அல்லது இல்லை பிற**.

யாம் நுட்பமான அறிவுடையேம் என்று பிறர் கருத்தை அறிபவரின் அளக்குங்கோல், ஆராய்ந்து பார்த்தால் அவருடைய கண்களே அல்லாமல் வேறு இல்லை. 710

1. **அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்**
**தொகைஅறிந்த தூய்மை யவர்**.

சொற்களின் தொகுதி அறிந்த தூய்மை உடையவர், அவைக்களத்தின் தன்மை அறிந்து ஏற்ற சொற்களை ஆராய்ந்து சொல்ல வேண்டும். 711

2. **இடைதெரிந்து நன்குஉணர்ந்து சொல்லுக சொல்லின்**
**நடைதெரிந்த நன்மை யவர்**.

சொற்களின் நடையை ஆராய்ந்த நன்மை உடையவர், அவையின் செவ்வியை ஆராய்ந்து நன்றாக உணர்ந்து சொல்ல வேண்டும். 712

3. **அவைஅறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்**
**வகையறியார் வல்லதூஉம் இல்**.

அவையின் தன்மை அறியாமல் சொல்லுதலை மேற்கொள்கின்றவர், சொற்களின் வகை அறியாதவரே; அவர் சொல்லவல்லதும் இல்லை. 713

4. **ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்**
**வான்சுதை வண்ணம் கொளல்**.

அறிவிற் சிறந்தவரின்முன் தாமும் அறிவிற் சிறந்தவராய்ப் பேச வேண்டும்; அறிவில்லாதவர் முன் தாமும் வெண் சுண்ணம்போல் அறிவில்லாதவராய் இருக்க வேண்டும். 714

5. **நன்றுஎன்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்**
**முந்து கிளவாச் செறிவு**.

அறிவு மிகுந்தவரிடையே முந்திச் சென்று பேசாத அடக்கம் ஒருவனுக்கு நன்மை என்று சொல்லப்பட்டவை எல்லாவற்றிலும் நல்லது. 715

6. **ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்**
**ஏற்றுஉணர்வார் முன்னர் இழுக்கு**.

விரிவான அறிவுத்துறைகளை அறிந்து உணர்கின்றவரின் முன்னே குற்றப்படுதல், ஒழுக்கநெறியிலிருந்து நிலை தளர்ந்து கெடுவதைப் போன்றதாகும். 716

7. **கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்**
**சொல்தெரிதல் வல்லார் அகத்து**.

குற்றமறச் செயல்களை ஆராய்வதில் வல்ல அறிஞரிடத்தில், பல நூல்களையும் கற்றறிந்தவரின் கல்வியானது நன்றாக விளங்கித் தோன்றும். 717

8. **உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்**
**பாத்தியுள் நீர்சொரிந் தற்று**.

தாமே உணர்கின்ற தன்மை உடையவரின் முன் கற்றவர் பேசுதல், தானே வளரும் பயிருள்ள பாத்தியில் நீரைச் சொரிந்தாற் போன்றது. 718

9. **புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்**
**நன்கு செலச்சொல்லு வார்**.

நல்ல அறிஞரின் அவையில் நல்ல பொருளை மனத்தில் பதியுமாறு சொல்லவல்லவர், அறிவில்லாதவரின் கூட்டத்தில் மறந்தும் பேசக்கூடாது. 719

10. **அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தம்கணத்தார்**
**அல்லார்முன் கோட்டி கொளல்**.

தம் இனத்தவர் அல்லாதவரின் கூட்டத்தின்முன் ஒரு பொருள் பற்றிப் பேசுதல், தூய்மையில்லாத முற்றத்தில் சிந்திய அமிழ்தம் போன்றது. 720

1. **வகைஅறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்**
   **தொகைஅறிந்த தூய்மை யவர்**.

சொற்களின் தொகுதி அறிந்த தூய்மை உடையவர் அவைக்களத்தின் வகையினை அறிந்து, வல்லவரின் அவையில் வாய் சோர்ந்து பிழை சொல்லமாட்டார். 721

2. **கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்**
   **கற்ற செலச்சொல்லு வார்**.

கற்றவரின்முன் தாம் கற்றவைகளை அவருடைய மனத்தில் பதியுமாறு சொல்லவல்லவர், கற்றவர் எல்லாரிலும் கற்றவராக மதித்துச் சொல்லப்படுவார். 722

3. **பகையகத்துச் சாவார் எளியர் அரியர்**
   **அவையகத்து அஞ்சா தவர்**.

பகைவர் உள்ள போரக்களத்தில் (அஞ்சாமல் சென்று) சாகத் துணிந்தவர் உலகத்தில் பலர்; கற்றவரின் அவைக் களத்தில் அஞ்சாமல் பேசவல்லவர் சிலரே. 723

4. **கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற**
   **மிக்காருள் மிக்க கொளல்**.

கற்றவரின்முன் தாம் கற்றவைகளை அவருடைய மனத்தில் பதியுமாறு சொல்லி, மிகுதியாகக் கற்றவரிடம் அம் மிகுதியான கல்வியை அறிந்து கொள்ள வேண்டும். 724

5. **ஆற்றின் அளவுஅறிந்து கற்க அவைஅஞ்சா**
   **மாற்றம் கொடுத்தல் பொருட்டு**.

அவையில் (ஒன்றைக் கேட்டவர்க்கு) அஞ்சாது விடை கூறும் பொருட்டாக நூல்களைக் கற்கும் நெறியில் அளவை நூல் அறிந்து கற்க வேண்டும். 725

6. **வாளொடுஎன் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடுஎன்**
   **நுண்ணவை அஞ்சு பவர்க்கு?**

அஞ்சாத வீரர் அல்லாத மற்றவர்க்கு வாளோடு என்ன தொடர்பு உண்டு? நுண்ணறிவுடையவரின் அவைக்கு அஞ்சுகின்றவர்க்கு நூலோடு என்ன தொடர்பு உண்டு? 726

7. **பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து**
**அஞ்சு மவன்கற்ற நூல்**.

அவையினிடத்தில் அஞ்சுகின்றவன் கற்ற நூல், பகைவரின் போர்க்களத்தில் அஞ்சுகின்ற பேடியின் கையில் ஏந்திய கூர்மையான வாள் போன்றது. 727

8. **பல்லவை கற்றும் பயம்இலரே நல்லவையுள்**
**நன்கு செலச்செல்லா தார்**.

நல்ல அறிஞரின் அவையில் நல்ல பொருளைக் கேட்பவர் மனத்தில் பதியுமாறு சொல்லமுடியாதவர், பல நூல்களைக் கற்றாலும் பயன் இல்லாதவரே. 728

9. **கல்லா தவரின் கடையென்ப கற்றுஅறிந்தும்**
**நல்லார் அவைஅஞ்சு வார்**.

நூல்களைக் கற்றறிந்தபோதிலும் நல்ல அறிஞரின் அவைக்கு அஞ்சுகின்றவர், கல்லாதவரைவிடக் கடைப்பட்டவர் என்று கூறுவர். 729

10. **உளர்எனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்**
**கற்ற செலச்சொல்லா தார்**.

அவைக்களத்திற்கு அஞ்சித் தாம் கற்றவைகளை (கேட்பவர் மனத்தில்) பதியுமாறு சொல்லமுடியாதவர், உயிரோடு வாழ்ந்தாலும் இறந்தவர்க்கு ஒப்பாவர். 730

1. **தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வுஇலாச்**
**செல்வரும் சேர்வது நாடு**.

குறையாத விளைபொருளும், தக்க அறிஞரும், கேடில்லாத செல்வம் உடையவரும் கூடிப் பொருந்தியுள்ள நாடே நாடாகும். 731

2. **பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்**
**ஆற்ற விளைவது நாடு**.

மிக்க பொருள்வளம் உடையதாய், எல்லாரும் விரும்பத்தக்கதாய், கேடு இல்லாததாய், மிகுதியாக விளைபொருள் தருவதே நாடாகும். 732

3. **பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு**
**இறைஒருங்கு நேர்வது நாடு**.

(மற்ற நாட்டு மக்கள் குடியேறுவதால்) சுமை ஒரு சேரத் தன்மேல் வரும்போது தாங்கி, அரசனுக்கு இறைப்பொருள் முழுவதும் தரவல்லது நாடாகும். 733

4. **உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேரா இயல்வது நாடு**.

மிக்க பசியும், ஓயாத நோயும், (வெளியே இருந்துவந்து தாக்கி) அழிவு செய்யும் பகையும் தன்னிடம் சேராமல் நல்ல வகையில் நடைபெறுவதே நாடாகும். 734

5. **பல்குழுவும் பாழ்செயயும் உட்பகையும் வேந்துஅலைக்கும்**
**கொல்குறும்பும் இல்லது நாடு**.

பலவகையாக மாறுபடும் கூட்டங்களும், உடனிருந்தே அழிவு செய்யும் பகையும், அரசனை வருத்துகின்ற கொலைத் தொழில் பொருந்திய குறுநில மன்னரும் இல்லாதது நாடு. 735

6. **கேடுஅறியாக் கெட்ட இடத்தும் வளங்குன்றா**
**நாடுஎன்ப நாட்டின் தலை**.

பகைவரால் கெடுக்கப்படாததாய், கெட்டுவிட்ட காலத்திலும் வளம் குன்றாததாய், உள்ள நாடே நாடுகள் எல்லாவற்றிலும் தலையானது என்று கூறுவர். 736

7. **இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு**.

ஊற்றும் மழையுமாகிய இருவகை நீர்வளமும், தக்கவாறு அமைந்த மலையும், அந்த மலையிலிருந்து ஆறாக வரும் நீர் வளமும், வலிய அரணும் நாட்டிற்கு உறுப்புக்களாம். 737

8. **பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்**
**அணிஎன்ப நாட்டிற்குஇவ் வைந்து**.

நோயில்லாதிருத்தல், செல்வம், விளை பொருள் வளம், இன்பவாழ்வு, நல்ல காவல் ஆகிய இந்த ஐந்தும் நாட்டிற்கு அழகு என்று கூறுவர். 738

9. **நாடுஎன்ப நாடா வளத்தன**: **நாடுஅல்ல**
**நாட வளந்தரு நாடு**.

முயற்சி செய்து தேடாமலே தரும் வளத்தை உடைய நாடுகளைச் சிறந்த நாடுகள் என்று கூறுவர்; தேடி முயன்றால் வளம் தரும் நாடுகள் அல்ல, 739

10. **ஆங்குஅமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே**
**வேந்துஅமை வில்லாத நாடு**.

நல்ல அரசன் பொருந்தாத நாடு, மேற்சொன்ன நன்மைகள் எல்லாம் அமைந்திருந்த போதிலும் அவற்றால் பயன் இல்லாமற் போகும். 740

1. **ஆற்று பவர்க்கும் அரண்பொருள்**: **அஞ்சித்தன்**
**போற்று பவர்க்கும் பொருள்**.

(படையெடுத்துப்) போர்செய்யச் செல்பவர்க்கும் அரண் சிறந்ததாகும்; (படையெடுத்தவர்க்கு) அஞ்சித் தன்னைப் புகலிடமாக அடைந்தவர்க்கும் அது சிறந்ததாகும். 741

2. **மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்**
**காடும் உடையது அரண்**.

மணிபோல் தெளிந்த நீரும், வெட்ட வெளியான நிலமும், மலையும், அழகிய நிழல் உடைய காடும் ஆகிய இவை நான்கும் உடையதே அரண் ஆகும். 742

3. **உயர்வுஅகலம் திண்மை அருமைஇந் நான்கின்**
**அமைவுஅரண் என்றுஉரைக்கும் நூல்**.

உயரம், அகலம், உறுதி, பகைவரால் அழிக்க முடியாத அருமை ஆகிய நான்கும் அமைந்திருப்பதே அரண் என்று நூலோர் கூறுவர். 743

4. **சிறுகாப்பின் பேரிடத்த தாகி உறுபகை**
**ஊக்கம் அழிப்பது அரண்.**

காக்கவேண்டிய இடம் சிறியதாய், மற்ற இடம் பெரிய பரப்புள்ளதாய், தன்னை எதிர்த்து வந்த பகைவருடைய ஊக்கத்தை அழிக்கவல்லது அரண் ஆகும் 744

5. **கொளற்குஅரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்**
**நிலைக்குஎளிதாம் நீரது அரண்.**

பகைவரால் கைப்பற்றப்படுவதற்கு முடியாததாய், தன்னிடம் உணவுப்பொருள் கொண்டதாய், உள்ளிருப்போர் நிலைத்திருப்பதற்கு எளியதாகிய தன்மை உடையது அரண். 745

6. **எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துஉதவும்**
**நல்ஆள் உடையது அரண்.**

தன்னிடம் உள்ளவர்க்கு (வேண்டிய) எல்லாப் பொருளும் உடையதாய், போர் நெருக்கடியானவிடத்தில் உதவ வல்ல நல்ல வீரர்களை உடையது அரண் ஆகும். 746

7. **முற்றியும் முற்றாது எறிந்தும் அறைப்படுத்தும்**
**பற்றற்கு அரியது அரண்.**

முற்றுகையிட்டும், முற்றுகையிடாமல் போர் செய்தும், வஞ்சனை செய்தும் எப்படியும் பகைவரால் கைப்பற்ற முடியாத அருமை உடையது அரண் ஆகும். 747

8. **முற்றுஆற்றி முற்றி யவரையும் பற்றுஆற்றிப்**
**பற்றியார் வெல்வது அரண்.**

முற்றுகையிடுவதில் வல்லமை கொண்டு முற்றுகை இட்டவரையும் (உள்ளிருந்தவர் பற்றிய) பற்றை விடாமலிருந்து வெல்வதற்கு உரியது அரண் ஆகும். 748

9. **முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து**
**வீறுஎய்தி மாண்டது அரண்**.

போர்முனையில் பகைவர் அழியும்படியாக (உள்ளிருந்தவர் செய்யும்) போர்ச் செயல் வகையால் பெருமை பெற்றுச் சிறப்புடையதாய் விளங்குவது அரண் ஆகும். 749

10. **எனைமாட்சித்து ஆகிய கண்ணும் வினைமாட்சி**
**இல்லார்கண் இல்லது அரண்**.

எத்தகைய பெருமைகளை உடையதாக இருந்த போதிலும், செயல்வகையால் சிறப்பு இல்லாதவரிடத்தில் அரண் பயனில்லாததாகும். 750

1. **பொருள்அல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருள்அல்லது இல்லை பொருள்**.

ஒரு பொருளாக மதிக்கத் தகாதவரையும் மதிப்புடையவராகச் செய்வதாகிய பொருள் அல்லாமல், சிறப்புடைய பொருள் வேறு இல்லை. 751

2. **இல்லாரை எல்லோரும் எள்ளுவர்: செல்வரை**
**எல்லாரும் செய்வர் சிறப்பு**.

பொருள் இல்லாதவரை (வேறு நன்மை உடையவராக இருந்தாலும்) எல்லாரும் இகழ்வர்; செல்வரை (வேறு நன்மை இல்லாவிட்டாலும்) எல்லாரும் சிறப்புச் செய்வர். 752

3. **பொருளென்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்**
**எண்ணிய தேயத்துச் சென்று**.

பொருள் என்று சொல்லப்படுகின்ற நந்தாவிளக்கு, நினைத்த இடத்திற்குச் சென்று உள்ள இடையூற்றைக் கெடுக்கும். 753

4. **அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து**
**தீதுஇன்றி வந்த பொருள்**.

சேர்க்கும் திறம் அறிந்து தீமை ஒன்றும் இல்லாமல் சேர்க்கப்பட்டு வந்த செல்வத்தின் ஆக்கத்தைப் பெற்று மகிழாமல் அதைத் தீமையானது என்று நீக்கிவிட வேண்டும். 754

5. **அருளொடும் அன்பொடும் வாராப் பொருள்ஆக்கம்**
**புல்லார் புரள விடல்**.

அருளோடும் அன்போடும் பொருந்தாத வழிகளில் வந்த செல்வத்தின் ஆக்கத்தைப் பெற்று மகிழாமல் அதைத் தீமையானது என்று நீக்கிவிட வேண்டும். 755

6. **உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்**
**தெறுபொருளும் வேந்தன் பொருள்**.

இறையாக வந்து சேரும் பொருளும், சுங்கமாகக் கொள்ளும் பொருளும், தன் பகைவரை வென்று திறமையாகக் கொள்ளும் பொருளும் அரசனுடைய பொருள்களாகும். 756

7. **அருள்என்னும் அன்புஈன் குழவி பொருள்என்னும்**
**செல்வச் செவிலியால் உண்டு**.

அன்பினால் பெறப்பட்ட அருள் என்று கூறப்படும் குழந்தை, பொருள் என்று கூறப்படும் செல்வமுள்ள செவிலித் தாயால் வளர்வதாகும். 757

8. **குன்றுஏறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்துஒன்று**
**உண்டாகச் செய்வான் வினை**.

தன் கைப்பொருள் ஒன்று தன்னிடம் இருக்க அதைக் கொண்டு ஒருவன் செயல் செய்தல், மலையின்மேல் ஏறி, யானைப் போரைக் கண்டாற் போன்றது. 758

9. **செய்க பொருளை: செறுநர் செருக்கறுக்கும்**
**எஃகுஅதனின் கூரியது இல்**.

ஒருவன் பொருளை ஈட்டவேண்டும்; அவனுடைய பகைவரின் செருக்கைக் கெடுக்கவல்ல வாள் அதைவிடக் கூர்மையானது வேறு இல்லை. 759

10. **ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்**
**ஏனை இரண்டும் ஒருங்கு**.

சிறந்ததாகிய பொருளை மிகுதியாக ஈட்டியவர்க்கு, மற்ற அறமும் இன்பமுமாகிய இரண்டும் ஒருசேரக் கை கூடும் எளிய பொருளாகும். 760

1. **உறுப்புஅமைந்து ஊறுஅஞ்சா வெல்படை வேந்தன்**
   **வெறுக்கையுள் எல்லாம் தலை**.

எல்லா உறுப்புக்களும் நிறைந்ததாய் இடையூறுகளுக்கு அஞ்சாததாய் உள்ள வெற்றி தரும் படை அரசனுடைய செல்வங்கள் எல்லாவற்றிலும் சிறந்ததாகும். 761

2. **உலைவுஇடத்து ஊறுஅஞ்சா வன்கண் தொலைவுஇடத்துத்**
   **தொல்படைக்கு அல்லால் அரிது**.

போரில் அழிவு வந்தவிடத்தில் வலிமை குன்றினாலும் இடையூறுகளுக்கு அஞ்சாத அஞ்சாமை தொன்றுதொட்டுப் பெருமை உடைய படைக்கு அல்லாமல் முடியாது. 762

3. **ஒலித்தக்கால் என்ஆம் உவரி எலிப்பகை?**
   **நாகம் உயிர்ப்பக் கெடும்**.

எலியாகிய பகை கூடிக் கடல்போல் ஒலித்தாலும் என்ன தீங்கு ஏற்படும்? பாம்பு மூச்சு விட்ட அளவில் அவை கெட்டழியும். 763

4. **அழிவுஇன்று அறைபோகாது ஆகி வழிவந்த**
   **வன்க ணதுவே படை**.

(போர்முனையில்) அழிவு இல்லாததாய், (பகைவருடைய) வஞ்சனைக்கு இரையாகாததாய், தொன்று தொட்டு வந்த அஞ்சாமை உடையதே படையாகும். 764

5. **கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்**
   **ஆற்ற லதுவே படை**.

எமனே சினங்கொண்டு தன்மேல் எதிர்த்து வந்தாலும், ஒன்றாகத் திரண்டு எதிர்த்து நிற்கும் ஆற்றல் உடையதே படையாகும். 765

6. **மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்**
**எனநான்கே ஏமம் படைக்கு**.

வீரம், மானம், சிறந்த வழியில்நடக்கும் நடக்கை, தலைவரால் நம்பித் தெளியப்படுதல் ஆகிய நான்கு பண்புகளும் படைக்குச் சிறந்தவையாகும். 766

7. **தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த**
**போர்தாங்கும் தன்மை அறிந்து**.

தன்மேல் எதிர்த்துவந்த பகைவரின் போரைத் தாங்கி, வெல்லும் தன்மை அறிந்து, அவருடைய தூசிப்படையை எதிர்த்துச் செல்லவல்லதே படையாகும். 767

8. **அடல்தகையும் ஆற்றலும் இல்எனினும் தானை**
**படைத்தகையால் பாடு பெறும்**.

போர் செய்யும் வீரமும் (எதிர்ப்பைத் தாங்கும்) ஆற்றலும் இல்லையானாலும் படை தன்னுடைய அணி வகுப்பால் பெருமை பெறும். 768

9. **சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்**
**இல்லாயின் வெல்லும் படை**.

தன் அளவு சிறிதாகத் தேய்தலும், தலைவரிடம் நீங்காத வெறுப்பும் வறுமையும் இல்லாதிருக்குமானால் அத்தகைய படை வெற்றிபெறும். 769

10. **நிலைமக்கள் சால உடைத்துஎனினும் தானை**
**தலைமக்கள் இல்வழி இல்**.

நெடுங்காலமாக நிலைத்திருக்கும் வீரர் பலரை உடையதே ஆனாலும், தலைமை தாங்கும் தலைவர் இல்லாதபோது படைக்குப் பெருமை இல்லையாகும். 770

1. **என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் ! பலர்என்ஐ**
**முன்நின்று கல்நின் றவர்**!

பகைவரே! என்னுடைய தலைவன்முன் எதிர்த்து நிற்காதீர்கள்; என்னுடைய தலைவன்முன் எதிர்த்து நின்று மடிந்து கல்வடிவாய் நின்றவர் பலர். 771

2. **கான முயல்எய்த அம்பினில் யானை**
**பிழைத்தவேல் ஏந்தல் இனிது**.

காட்டில் ஓடும் முயலை நோக்கிக் குறிதவறாமல் எய்த அம்பை ஏந்துதலைவிட, வெட்டவெளியில் நின்ற யானை மேல் எறிந்து தவறிய வேலை ஏந்துதல் சிறந்தது. 772

3. **பேராண்மை என்ப தறுகண்:ஒன்று உற்றக்கால்**
**ஊராண்மை மற்றுஅதன் எஃகு**.

பகைவரை எதிர்க்கும் வீரத்தை மிக்க ஆண்மை என்று கூறுவர்; ஒரு துன்பம் வந்தபோது பகைவர்க்கும் உதவி செய்தலை அந்த ஆண்மையின் கூர்மை என்று கூறுவர். 773

4. **கைவேல் களிற்றோடு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும்**.

கையில் ஏந்திய வேலை ஒரு யானையின் மேல் எறிந்து துரத்திவிட்டு, வேறு வேல் தேடி வருகின்றவன் தன் மார்பில்பட்டிருந்த வேலைக் கண்டு பறித்து மகிழ்கின்றான். 774

5. **விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்துஇமைப்பின்**
**ஓட்டன்றோ வன்க ணவர்க்கு**.

பகைவரைச் சினந்து நோக்கிய கண், அவர் வேலைக் கொண்டு எறிந்தபோது மூடி இமைக்குமானாலும், அது வீரமுடையவர்க்குத் தோல்வி அன்றோ? 775

6. **விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்**
**வைக்கும்தன் நாளை எடுத்து**.

வீரன் கழிந்த தன் நாட்களைக் கணக்கிட்டு விழுப்புண் படாத நாட்களை எல்லாம் பயன்படாமல் தவறிய நாட்களுள் சேர்ப்பான். 776

7. **சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்**
**கழல்யாப்புக் காரிகை நீர்த்து**.

பரந்து நிற்கும் புகழை விரும்பி, உயிர்வாழ்வையும் விரும்பாத வீரர், வீரக் கழலைக் காலில் கட்டிக் கொள்ளுதல் அழகு செய்யும் தன்மையுடையதாகும். 777

8. **உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்**
**செறினும்சீர் குன்றல் இலர்**.

போர் வந்தாலும் உயிரின் பொருட்டு அஞ்சாமல் போர் செய்யத் துணியும் வீரர், அரசன் சினந்தாலும் தம்முடைய சிறப்புக் குன்றாதவர் ஆவார். 778

9. **இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே**
**பிழைத்தது ஒறுக்கிற் பவர்?**

தாம் உரைத்த சூள் தவறாதபடி போர்செய்து சாகவல்லவரை, அவர் செய்த பிழைக்காகத் தண்டிக்க வல்லவர் யார்? 779

10. **புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு**
**இரந்துகோள் தக்கது உடைத்து**.

தம்மைக் காத்த தலைவருடைய கண்கள் நீர் பெருக்குமாறு சாகப் பெற்றால், சாவு இரந்தாவது பெற்றுக் கொள்ளத் தக்க பெருமை உடையதாகும். 780

1. **செயற்குஅரிய யாவுள நட்பின்? அதுபோல்**
**வினைக்குஅரிய யாவுள காப்பு?**

நட்பைப்போல் செய்துகொள்வதற்கு அருமையானவை எவை உள்ளன? அதுபோல் தொழிலுக்கு அரிய காவலாக இருப்பவை எவை உள்ளன? 781

2. **நிறைநீர நீரவர் கேண்மை பிறை:மதிப்**
**பின்நீர பேதையார் நட்பு**.

அறிவுடையவரின் நட்பு பிறை நிறைந்துவருதல் போன்ற தன்மையுடையன; அறிவில்லாதவரின் நட்பு முழுமதி தேய்ந்து பின்செல்லுதல் போன்ற தன்மையுடையன. 782

3. **நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்**
**பண்புடை யாளர் தொடர்பு**.

பழகப் பழக நற்பண்பு உடையவரின் நட்பு இன்பம் தருதல், நூலின் நற்பொருள் கற்கக் கற்க மேன்மேலும் இன்பம் தருதலைப் போன்றதாகும். 783

4. **நகுதல் பொருட்டன்று நட்டல்: மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தல் பொருட்டு**.

நட்புச் செய்தல் ஒருவரோடு ஒருவர் சிரித்து மகிழும் பொருட்டு அன்று; நண்பர் நெறி கடந்து சொல்லும்போது முற்பட்டுச் சென்று இடித்துரைப்பதற்காகும். 784

5. **புணர்ச்சி பழகுதல் வேண்டா: உணர்ச்சிதான்**
**நட்புஆம் கிழமை தரும்**.

நட்புச் செய்வதற்குத் தொடர்பும் பழக்கமும் வேண்டியதில்லை; ஒத்த உணர்ச்சியே நட்பு ஏற்படுவதற்கு வேண்டிய உரிமையைக் கொடுக்கும். 785

6. **முகம்நக நட்பது நட்பன்று: நெஞ்சத்து**
**அகம்நக நட்பது நட்பு**.

முகம் மட்டும் மலரும்படியாக நட்புச் செய்வது நட்பு அன்று; நெஞ்சமும் மலரும்படியாக உள்ளன்புகொண்டு நட்புச் செய்வதே நட்பு ஆகும். 786

7. **அழிவின் அவைநீக்கி ஆறுஉய்த்து அழிவின்கண்**
**அல்லல் உழப்பதாம் நட்பு**.

அழிவைத் தரும் தீமைகளிலிருந்து நீக்கி, நல்ல வழியில் நடக்கச் செய்து, அழிவு வந்த காலத்தில் உடனிருந்து துன்பப்படுவதே நட்பாகும். 787

8. **உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதுஆம் நட்பு**.

உடை நெகிழ்ந்தவனுடைய கை, உடனே உதவிக் காப்பது போல், (நண்பனுக்குத் துன்பம் வந்தால்) அப்பொழுதே சென்று துன்பத்தைக் களைவது நட்பு. 788

9. **நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி**
**ஒல்லும்வாய் ஊன்றும் நிலை**.

நட்புக்குச் சிறந்த நிலை எது என்றால், எப்போதும் வேறுபடுதல் இல்லாமல், முடியும்போதெல்லாம் உதவி செய்து தாங்கும் நிலையாகும். 789

10. **இனையர் இவர்எமக்கு இன்னம்யாம் என்று**
**புனையினும் புல்லென்னும் நட்பு**.

`இவர், எமக்கு இத்தன்மையானவர், யாம் இவர்க்கு இத்தன்மையுடையேம்` என்று புனைந்துரைத்தாலும் நட்புச் சிறப்பிழந்துவிடும். 790

1. **நாடாது நட்டலின் கேடுஇல்லை: நட்டபின்**
**வீடுஇல்லை நட்பாள் பவர்க்கு**.

நட்புச் செய்தபிறகு நட்பை உடையவர்க்கு அதிலிருந்து விடுதலை இல்லை; ஆகையால் ஆராயாமல் நட்புச் செய்வதைப் போல் கெடுதியானது வேறு இல்லை. 791

2. **ஆய்ந்துஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை**
**தான்சாம் துயரம் தரும்**.

ஆராய்ந்து ஆராய்ந்து நட்புக் கொள்ளாதவனுடைய நட்பு, இறுதியில் தான் சாவதற்குக் காரணமான துயரத்தை உண்டாக்கிவிடும். 792

3. **குணனும் குடிமையும் குற்றமும் குன்றா**
**இனனும் அறிந்தியாக்க நட்பு**.

ஒருவனுடைய குணத்தையும், குடிப்பிறப்பையும், குற்றத்தையும், குறையாத இனத்தாரின் இயல்பையும் அறிந்து அவனோடு நட்புக் கொள்ளவேண்டும். 793

4. **குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்**
**கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு**.

உயர்ந்த குடியில் பிறந்து, தன்னிடத்தில் வரக்கூடிய பழிக்கு நாணுகின்றவனைப் பொருள் கொடுத்தாவது நட்புக் கொள்ளவேண்டும்,. 794

5. **அழச்சொல்லி அல்லது இடித்து வழக்குஅறிய**
**வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்**.

நன்மையில்லாத செயலைக் கண்டபோது வருந்தும் படியாக இடித்துச் சொல்லி, உலக நடையை அறிய வல்லவரின் நட்பை ஆராய்ந்து கொள்ளவேண்டும். 795

6. **கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை**
**நீட்டி அளப்பதோர் கோல்**.

கேடு வந்தபோதும் ஒருவகை நன்மை உண்டு; அக்கேடு ஒருவனுடைய நண்பரின் இயல்புகளை நீட்டி அளந்து பார்ப்பதொரு கோலாகும். 796

7. **ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்**
**கேண்மை ஒரீஇ விடல்**.

ஒருவனுக்கு ஊதியம் என்று சொல்லப்படுவது, அறிவில்லாதவருடன் செய்துகொண்ட நட்பிலிருந்து நீங்கி அவரைக் கைவிடுதலாகும், 797

8. **உள்ளற்க உள்ளம் சிறுகுவ: கொள்ளற்க**
**அல்லல்கண் ஆற்றுஅறுப்பார் நட்பு**.

ஊக்கம் குறைவதற்குக் காரணமான செயல்களை எண்ணாமலிருக்கவேண்டும்; அதுபோல் துன்பம் வந்த போது கைவிடுகின்றவரின் நட்பைக் கொள்ளாதிருக்க வேண்டும். 798

9. **கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை**
**உள்ளினும் உள்ளம் சுடும்**.

கேடு வரும் காலத்தில் கைவிட்டு ஒதுங்குகின்றவரின் நட்பு, எமன் கொல்லும் காலத்தில் நினைத்தாலும் நினைத்த உள்ளத்தை வருத்தும். 799

10. **மருவுக மாசற்றார் கேண்மை:ஒன்று ஈத்தும்**
**ஒருவுக ஒப்பிலார் நட்பு**.

குற்றமற்றவருடைய நட்பைக் கொள்ளவேண்டும்; ஒத்த பண்பு இல்லாதவருடைய நட்பை ஒன்றைக் கொடுத்தாவது கைவிடவேண்டும். 800

1. **பழைமை எனப்படுவது யாதுஎனின் யாதும்**
**கிழமையைக் கீழ்ந்திடா நட்பு**.

பழைமை என்று சொல்லப்படுவது எது என்று வினவினால் அது பழகியவர் உரிமைபற்றிச் செய்யும் செயலைக் கீழ்ப்படுத்தாமல் ஏற்கும் நட்பாகும். 801

2. **நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை மற்றுஅதற்கு**
**உப்புஆதல் சான்றோர் கடன்**.

நட்பிற்கு உறுப்பாவது நண்பருடைய உரிமைச் செயலாகும்; அந்த உரிமைச் செயலுக்கு உடன்பட்டவராதல் சான்றோரின் கடமையாகும். 802

3. **பழகிய நட்புஎவன் செய்யும் கெழுதகைமை**
**செய்தாங்கு அமையாக் கடை?**

பழகியவர் உரிமைபற்றிச் செய்யும் செயலைத் தாம் செய்தது போலவே கருதி உடன்படாவிட்டால் அவரோடு தாம் பழகிய நட்பு என்ன பயன் தரும்? 803

4. **விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையால்**
**கேளாது நட்டார் செயின்**.

உரிமையால் கேளாமலே நண்பர் ஒன்றைச் செய்தால், அந்த உரிமையைப் போற்றி விரும்பும் தன்மையோடு அச்செயலையும் விரும்பி உடன்பட்டிருப்பர் அறிஞர். 804

5. **பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுஉணர்க**
**நோதக்க நட்டார் செயின்**.

வருந்தத்தக்க செயல்களை நண்பர் செய்தால் அதற்குக் காரணம், அறியாமை என்றாவது மிகுந்த உரிமை என்றாவது உணரவேண்டும். 805

6. **எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்**
**தொல்லைக்கண் நின்றார் தொடர்பு**.

உரிமைவாழ்வின் எல்லையில் நின்றவர், தமக்கு அழிவு நேர்ந்தவிடத்திலும் பழைமையாய் உறவுகொண்டு நின்றவரின் தொடர்பைக் கைவிடமாட்டார். 806

7. **அழிவந்த செய்யினும் அன்புஅறார் அன்பின்**
**வழிவந்த கேண்மை யவர்**.

அன்புடன் தொன்றுதொட்டு வந்த உறவை உடையவர், அழிவு தரும் செயல்களைப் பழகியவர் செய்த போதிலும் தம் அன்பு நீங்காமலிருப்பார். 807

8. **கேள்இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு**
**நாள்இழுக்கம் நட்டார் செயின்**.

பழகிய நண்பர் செய்த தவறு பற்றிப் பிறர் சொன்னாலும் கேளாமலிருக்கும் உரிமை வல்லவர்க்கு, அந் நண்பர் தவறு செய்வாரானால் அது பயனுள்ள நாளாகும். 808

9. **கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை**
**விடாஅர் விழையும் உலகு**.

உரிமை கெடாமல் தொன்றுதொட்டு வந்த உறவு உடையவரின் தொடர்பைக் கைவிடாதவரை உலகம் விரும்பிப் போற்றும். 809

10. **விழையார் விழையப் படுப பழையார்கண்**
**பண்பின் தலைப்பிரியா தார்**.

(தவறு செய்தபோதிலும்) பழகிய நண்பரிடத்தில் தம் உரிமைப் பண்பிலிருந்து மாறாதவர், தம் பகைவராலும் விரும்பப்படுதற்குரிய சிறப்பை அடைவர். 810

1. **பருகுவார் போலினும் பண்புஇலார் கேண்மை**
**பெருகலின் குன்றல் இனிது**.

அன்பு மிகுதியால் பருகுவார்போல் தோன்றினாலும் நற்பண்பு இல்லாதவரின் நட்பு, வளர்ந்து பெருகுவதைவிடத் தேய்ந்து குறைவது நல்லது. 811

2. **உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை**
**பெறினும் இழப்பினும் என்?**

தமக்குப் பயன் உள்ளபோது நட்புச் செய்து, பயன் இல்லாதபோது நீங்கிவிடும் தகுதியில்லாதவரின் நட்பைப் பெற்றாலும் என்ன? இழந்தாலும் என்ன? 812

3. **உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது**
**கொள்வாரும் கள்வரும் நேர்.**

கிடைக்கும் பயனை அளந்து பார்க்கும் நண்பரும், அன்பைக் கொள்ளாமல் பெறுகின்ற பொருளைக் கொள்ளும் விலைமகளிரும், கள்வரும் ஒரு நிகரானவர். 813

4. **அமரகத்து ஆற்றுஅறுக்கும் கல்லாமா அன்னார்**
**தமரின் தனிமை தலை.**

போர் வந்தபோது களத்தில் தள்ளிவிட்டு ஓடும் அறிவில்லாத குதிரை போன்றவரின் உறவைவிட, ஒரு நட்பும் இல்லாமல் தனித்திருத்தலே சிறந்தது. 814

5. **செய்துஏமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை**
**எய்தலின் எய்தாமை நன்று.**

காவல் செய்து வைத்தாலும் காவல் ஆகாத கீழ்மக்களின் தீய நட்பு, ஒருவனுக்கு ஏற்படுவதைவிட ஏற்படாமலிருப்பதே நன்மையாகும். 815

6. **பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுஉடையார்**
**ஏதின்மை கோடி உறும்.**

அறிவில்லாதவனுடைய மிகப் பொருந்திய நட்பைவிட அறிவுடையவரின் நட்பில்லாத தன்மை கோடி மடங்கு நன்மை தருவதாகும். 816

7. **நகைவகையர் ஆகிய நட்பின் பகைவரால்**
**பத்துஅடுத்த கோடி உறும்**.

(அகத்தில் அன்பு இல்லாமல் புறத்தில்) நகைக்கும் தன்மை உடையவரின் நட்பைவிட, பகைவரால் வருவன பத்துக்கோடி மடங்கு நன்மையாகும். 817

8. **ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை**
**சொல்ஆடார் சோர விடல்**.

முடியும் செயலையும் முடியாதபடி செய்து கெடுப்பவரின் உறவை, அவர் அறியுமாறு ஒன்றும் சொல்லாமலே தளரச் செய்து கைவிட வேண்டும். 818

9. **கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு**
**சொல்வேறு பட்டார் தொடர்பு**.

செய்யும் செயல் வேறாகவும் சொல்லும் சொல் வேறாகவும் உள்ளவரின் நட்பு, ஒருவனுக்குக் கனவிலும் துன்பம் தருவதாகும். 819

10. **எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ**
**மன்றில் பழிப்பார் தொடர்பு**.

தனியே வீட்டில் உள்ளபோது பொருந்தியிருந்து, பலர் கூடிய மன்றத்தில் பழித்துப் பேசுவோரின் நட்பை எவ்வளவு சிறிய அளவிலும் அணுகாமல் விடவேண்டும். 820

1. **சீர்இடம் காணின் எறிதற்குப் பட்டடை**
**நேரா நிரந்தவர் நட்பு**.

அகத்தே பொருந்தாமல் புறத்தில் பொருந்தி நடப்பவரின் நட்பு, தக்க இடம் கண்டபோது எறிவதற்கு உரிய பட்டடையாகும். 821

2. **இனம்போன்று இனம்அல்லார் கேண்மை மகளிர்**
**மனம்போல வேறு படும்**.

இனம் போலவே இருந்து உண்மையில் இனம் அல்லாதவரின் நட்பு, பொதுமகளிரின் மனம்போல உள்ளொன்று புறமொன்றாக வேறுபட்டு நிற்கும். 822

3. **பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்**
**ஆகுதல் மாணார்க்கு அரிது**.

பல நல்ல நூல்களைக் கற்றுத் தேர்ந்தபோதிலும், அவற்றின் பயனாக நல்ல மனம் உடையவராகப் பழகுதல், (உள்ளன்பினால்) மாட்சியடையாதவர்க்கு இல்லை. 823

4. **முகத்தின் இனிய நகாஅ அகத்துஇன்னா**
**வஞ்சரை அஞ்சப் படும்**.

முகத்தால் இனிமையாகச் சிரித்துப் பழகி அகத்தில் தீமை கொண்டுள்ள வஞ்சகருடன் நட்புக் கொள்வதற்கு அஞ்சவேண்டும். 824

5. **மனத்தின் அமையா தவரை எனைத்துஒன்றும்**
**சொல்லினால் தேறற்பாற்று அன்று**.

மனத்தால் தம்மொடு பொருந்தாமல் பழகுகின்றவரை அவர் கூறுகின்ற சொல்லைக் கொண்டு எத்தகைய ஒரு செயலிலும் நம்பித் தெளியக்கூடாது. 825

6. **நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்**
**ஒல்லை உணரப் படும்**.

நண்பர்போல் நன்மையானவற்றைச் சொன்ன போதிலும் பகைமை கொண்டவர் சொல்லும் சொற்களின் உண்மைத் தன்மை விரையில் உணரப்படும். 826

7. **சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்**
**தீங்கு குறித்தமை யான்**.

வில்லின் வணக்கம் வணக்கமாக இருந்தாலும் தீங்கு செய்தலைக் குறித்தமையால், பகைவரிடத்திலும் அவருடைய சொல்லின் வணக்கத்தை நன்மையாகக் கொள்ளக்கூடாது. 827

8. **தொழுதகை உள்ளும் படைஒடுங்கும் ஒன்னார்**
**அழுதகண் ணீரும் அனைத்து**.

பகைவர் வணங்கித் தொழுத கையினுள்ளும் கொலைக் கருவி மறைந்திருக்கும்; பகைவர் அழுது சொரிந்த கண்ணீரும் அத்தன்மையானதே. 828

9. **மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து**
**நட்பினுள் சாப்புல்லல் பாற்று**.

புறத்தே மிகுதியாக நட்புத் தோன்றச் செய்து அகத்தில் இகழ்கின்றவரைத், தாமும் அந் நட்பில் நகைத்து மகிழுமாறு செய்து அத்தொடர்பு சாகுமாறு நடக்கவேண்டும். 829

10. **பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு**
**அகம்நட்பு ஒரீஇ விடல்**.

பகைவர் நண்பராகும் காலம் வரும்போது முகத்தளவில் நட்புக்கொண்டு அகத்தில் நட்பு நீங்கி வாய்ப்புக் கிடைத்தபோது அதையும் விடவேண்டும். 830

1. **பேதைமை என்பதுஒன்று யாதெனின் ஏதங்கொண்டு**
**ஊதியம் போக விடல்**.

பேதைமை என்று சொல்லப்படுவது யாது என்றால், தனக்குக் கெடுதியானதைக் கைக்கொண்டு ஊதியமானதைக் கைவிடுதலாகும். 831

2. **பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை**
**கையல்ல தன்கண் செயல்**.

ஒருவனுக்குப் பேதைமை எல்லாவற்றிலும் மிக்க பேதைமை, தன் ஒழுக்கத்திற்குப் பொருந்தாததில் தன் விருப்பத்தைச் செலுத்துதலாகும். 832

3. **நாணாமை நாடாமை நார்இன்மை யாதொன்றும்**
**பேணாமை பேதை தொழில்**.

தகாதவற்றிற்கு நாணாமலிருத்தல், தக்கவற்றை நாடாமலிருத்தல், அன்பு இல்லாமை, நன்மை ஒன்றையும் விரும்பாமை அகியவை பேதையின் தொழில்கள். 833

4. **ஓதி உணர்ந்தும் பிறர்க்குஉரைத்தும் தான்அடங்காப்**
**பேதையின் பேதையார் இல்**.

நூல்களை ஓதியும், அவற்றின் பொருளை உணர்ந்தும், பிறர்க்கு எடுத்துச் சொல்லியும் தான் அவற்றின் நெறியில் அடங்கி ஒழுகாத பேதைபோல் வேறு பேதையர் இல்லை. 834

5. **ஒருமைச் செயல்ஆற்றும் பேதை எழுமையும்**
**தான்புக்கு அழுந்தும் அளறு**.

எழுபிறப்பிலும் தான் புகுந்து அழுந்துவதற்கு உரிய நரகத் துன்பத்தைப் பேதை தன் ஒரு பிறவியில் செய்து கொள்ள வல்லவனாவான். 835

6. **பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்**
**பேதை வினைமேல் கொளின்**.

ஒழுக்கநெறி அறியாத பேதை ஒரு செயலை மேற் கொண்டால் (அந்தச் செயல் முடிவுபெறாமல்) பொய்படும்; அன்றியும் அவன் குற்றவாளியாகித் தளை பூணுவான். 836

7. **ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை**
**பெருஞ்செல்வம் உற்றக் கடை**.

பேதை பெருஞ் செல்வம் அடைந்தபோது, (அவனோடு தொடர்பில்லாத) அயலார் நிறைய நன்மை பெற. அவனுடைய சுற்றத்தார் பசியால் வருந்துவர். 837

8. **மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்**
**கையொன்று உடைமை பெறின்**.

பேதை தன் கையில் ஒரு பொருள் பெற்றால் (அவன் நிலைமை) பித்துப் பிடித்த ஒருவன் கள் குடித்து மயங்கினாற் போலாகும். 838

9. **பெரிதுஇனிது பேதையார் கேண்மை பிரிவின்கண்**
**பீழை தருவதுஒன்று இல்**.

பேதையரிடமிருந்து பிரிவு நேர்ந்தபோது, அப்பிரிவு துன்பம் ஒன்றும் தருவதில்லை. ஆகையால் பேதையருடன் கொள்ளும் நட்பு மிக இனியதாகும். 839

10. **கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்**
**குழாஅத்துப் பேதை புகல்**.

சான்றோரின் கூட்டத்தில் பேதை புகுதல், ஒருவன் தூய்மையில்லாதவற்றை மிதித்துக் கழுவாத காலைப் படுக்கையில் வைத்தாற் போன்றது. 840

1. **அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதுஇன்மை**
**இன்மையா வையாது உலகு**.

அறிவில்லாமையே இல்லாமை பலவற்றுள்ளும் கொடிய இல்லாமையாகும்; மற்ற இல்லாமைகளை உலகம் அத்தகைய இல்லாமையாகக் கருதாது. 841

2. **அறிவிலான் நெஞ்சுஉவந்து ஈதல் பிறிதுயாதும்**
**இல்லை பெறுவான் தவம்**.

அறிவில்லாதவன் மனம் மகிழ்ந்து ஒரு பொருளைக் கொடுத்தலுக்குக் காரணம், வேறொன்றும் இல்லை; அந்தப் பொருளைப் பெறுகின்றவனுடைய நல்வினையே ஆகும். 842

3. **அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை**
**செறுவார்க்கும் செய்தல் அரிது**.

அறிவில்லாதவர் தம்மைத் தாமே துன்புறுத்தும் துன்பம் அவருடைய பகைவர்க்கும் செய்ய முடியாத அளவினதாகும். 843

4. **வெண்மை எனப்படுவது யாதுஎனின் ஒண்மை**
**உடையம்யாம் என்னும் செருக்கு**.

புல்லறிவு என்று சொல்லப்படுவது யாது என்றால், `யாம் அறிவுடையேம்` என்று ஒருவன் தன்னைத்தானே மதித்துக் கொள்ளும் செருக்காகும். 844

5. **கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடுஅற**
**வல்லதூஉம் ஐயம் தரும்**.

அறிவில்லாதவர் தாம் கல்லாத நூல்களையும் கற்றவர் போல் மேற்கொண்டு நடத்தல், அவர் குற்றமறக் கற்றுவல்ல பொருளைப் பற்றியும் மற்றவர்க்கு ஐயம் உண்டாக்கும். 845

6. **அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்**
   **குற்றம் மறையா வழி**.

தம்மிடத்தில் உள்ள குற்றத்தை அறிந்து நீக்காத போது, உடம்பில் மறைப்பதற்குரிய பகுதியை மட்டும் ஆடையால் மறைத்தல் புல்லறிவாகும். 846

7. **அருமறை சோரும் அறிவுஇலான் செய்யும்**
   **பெருமிறை தானே தனக்கு**.

அரிய மறைபொருளை மனத்தில் வைத்துக் காக்காமல் சோர்ந்து வெளிப்படுத்தும் அறிவில்லாதவன் தனக்குத் தானே பெருந்தீங்கு செய்துகொள்வான். 847

8. **ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்**
   **போஒம் அளவும்ஓர் நோய்**.

தனக்கு நன்மையானவற்றைப் பிறர் ஏவினாலும் செய்யாதவனாய், தானாகவும் உணர்ந்து தெளியாதவனாய் உள்ளவனுடைய உயிர் போகுமளவும் ஒரு நோயாகும். 848

9. **காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்**
   **கண்டான்ஆம் தான்கண்ட வாறு**.

அறிவு இல்லாதவனுக்கு அறிவிப்பான் தானே அறிவில்லாதவனாய் நிற்பான்; அறிவு இல்லாதவனோ தான் அறிந்த வகையால் அறிவுள்ளவனாய்த் தோன்றுவான். 849

10. **உலகத்தார் உண்டுஎன்பது இல்என்பான் வையத்து**
    **அலகையா வைக்கப் படும்**.

உலகத்தார் உண்டு என்று சொல்வதை இல்லை என்று கூறுகின்ற ஒருவன், உலகத்தில் காணப்படும் ஒரு பேயாகக் கருதி விலக்கப்படுவான். 850

1. **இகல்என்ப எல்லா உயிர்க்கும் பகல்என்னும்**
**பண்பின்மை பாரிக்கும் நோய்**.

எல்லா உயிர்களுக்கும் மற்ற உயிர்களோடு பொருந்தாமல் வேறுபடுதலாகிய தீய பண்பை வளர்க்கும் நோய் இகல் (மாறுபாடு) என்று சொல்வர் அறிஞர். 851

2. **பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி**
**இன்னாசெய் யாமை தலை**.

ஒருவன் தன்னோடு பொருந்தாமல் வேறுபடுதலைக் கருதி அன்பில்லாதவற்றைச் செய்தாலும், தான் இகல் கொண்டு அவனுக்குத் துன்பம் செய்யாதிருத்தல் சிறந்தது. 852

3. **இகல்என்னும் எவ்வநோய் நீக்கின் தவல்இல்லாத்**
**தாவில் விளக்கம் தரும்**.

ஒருவன் இகல் என்று சொல்லப்படும் துன்ப நோயை நீக்கிவிட்டால். அஃது அவனுக்கு அழிவில்லாத நிலையான புகழைக் கொடுக்கும். 853

4. **இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல்என்னும்**
**துன்பத்துள் துன்பம் கெடின்**.

இகல் என்று சொல்லப்படும் துன்பங்களில் கொடிய துன்பம் கெட்டுவிட்டால், அஃது ஒருவனுக்கு இன்பங்களில் சிறந்த இன்பத்தைக் கொடுக்கும். 854

5. **இகல்எதிர் சாய்ந்துஒழுக வல்லாரை யாரே**
**மிகல்ஊக்கும் தன்மை யவர்**.

இகல் என்று சொல்லப்படும் துன்பங்களில் கொடிய துன்பம் கெட்டுவிட்டால். அஃது ஒருவனுக்கு இன்பங்களில் சிறந்த இன்பத்தைக் கொடுக்கும். 855

6. **இகலின் மிகல்இனிது என்பவன் வாழ்க்கை**
**தவலும் கெடலும் நணித்து**.

இகல் கொள்வதால் வெல்லுதல் இனியது என்று கருதுகின்றவனுடைய வாழ்க்கை தவறிப்போதலும் அழிதலும் விரைவில் உள்ளனவாம். 856

7. **மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்**
**இன்னா அறிவி னவர்**.

இகலை விரும்புகின்ற தீய அறிவை உடையவர் வெற்றி பொருந்துதலுக்குக் காரணமான உண்மைப் பொருளை அறியமாட்டார். 857

8. **இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை**
**மிகல்ஊக்கின் ஊக்குமாம் கேடு**.

இகலுக்கு எதிரே சாய்ந்து நடத்தல் ஒருவனுக்கு ஆக்கமாகும்; அதனை எதிர்த்து வெல்லக் கருதினால் கேடு அவனிடம் வரக் கருதும். 858

9. **இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை**
**மிகல்காணும் கேடு தரற்கு**.

ஒருவன் தனக்கு ஆக்கம் வரும்போது இகலைக் கருதமாட்டான்; தனக்குக் கேடு தருவித்துக் கொள்ளும் போது அதனை எதிர்த்து வெல்லக் கருதுவான். 859

10. **இகலான்ஆம் இன்னாத எல்லாம் நகலான்ஆம்**
**நல்நயம் என்னும் செருக்கு**.

ஒருவனுக்கு இகலால் துன்பமானவை எல்லாம் உண்டாகும்; அதற்கு மாறான நட்பால் நல்ல நீதியாகிய பெருமித நிலை உண்டாகும். 860

1. **வலியார்க்கு மாறுஏற்றல் ஓம்புக: ஓம்பா**
**மெலியார்மேல் மேக பகை**.

தம்மைவிட வலியவர்க்கு மாறுபட்டு எதிர்த்தலை விட வேண்டும்; தம்மை விட மெலியவர் மேல் பகை கொள்வதை விடாமல் விரும்பி மேற்கொள்ள வேண்டும். 861

2. **அன்புஇலன் ஆன்ற துணைஇலன் தான்துவ்வான்**
**என்பரியும் ஏதிலான் துப்பு?**

ஒருவன் அன்புஇல்லாதவனாய், அமைந்த துணை இல்லாதவனாய், தானும் வலிமை இல்லாதவனாய் இருந்தால், அவன் பகைவனுடைய வலிமையை எவ்வாறு ஒழிக்க முடியும்? 862

3. **அஞ்சும் அறியான் அமைவுஇலன் ஈகலான்**
**தஞ்சம் எளியன் பகைக்கு**.

ஒருவன் அஞ்சுகின்றவனாய், அறிவு இல்லாதவனாய், பொருந்தும் பண்பு இல்லாதவனாய், பிறர்க்கு ஒன்று ஈயாதவனாய் இருந்தால், அவன் பகைவர்க்கு மிக எளியவன். 863

4. **நீங்கான் வெகுளி நிறைஇலன் எஞ்ஞான்றும்**
**யாங்கணும் யார்க்கும் எளிது**.

ஒருவன் சினம் நீங்காதவனாய், நெஞ்சத்தை நிறுத்தியாளும் தன்மை இல்லாதவனாய் இருந்தால், அவன் எக்காலத்திலும் எவ்விடத்திலும் எவர்க்கும் எளியவன். 864

5. **வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்**
**பண்புஇலன் பற்றார்க்கு இனிது**.

ஒருவன் நல்வழியை நோக்காமல், பொருத்தமானவற்றைச் செய்யாமல், பழியையும் பார்க்காமல், நற்பண்பும் இல்லாமல் இருந்தால், அவன் பகைவர்க்கும் எளியனாவான். 865

6. **காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்**
**பேணாமை பேணப் படும்**.

ஒருவன் உண்மை காணாத சினம் உடையவனாய், மிகப் பெரிய ஆசை உடையவனாய் இருந்தால், அவனுடைய பகை விரும்பி மேற்கொள்ளப்படும். 866

7. **கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்துஇருந்து**
**மாணாத செய்வான் பகை**.

தன்னை அடுத்துத் தன்னோடிருந்தும் பொருந்தாதவற்றைச் செய்பவனுடைய பகையைப் பொருள் கொடுத்தாவது கொள்ள வேண்டும். 867

8. **குணன்இலனாய்க் குற்றம் பலஆயின் மாற்றார்க்கு**
**இனன்இலன்ஆம் ஏமாப்பு உடைத்து**.

ஒருவன் குணம் இல்லாதவனாய்க் குற்றம் பல உடையவனானால், அவன் துணை இல்லாதவன் ஆவான்; அந்நிலைமையே அவனுடைய பகைவர்க்கு நன்மையாகும். 868

9. **செறுவார்க்குச் சேண்இகவா இன்பம் அறிவுஇலா**
**அஞ்சும் பகைவர்ப் பெறின்**.

அறிவு இல்லாத அஞ்சும் இயல்பு உடைய பகைவரைப் பெற்றால், அவரை எதிர்த்துப் பகைகொள்பவர்க்கு இன்பங்கள் தொலைவில் நீங்காமல் நிற்கும். 869

10. **கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்**
**ஒல்லானை ஒல்லாது ஒளி**.

கல்வி கற்காதவனைப் பகைத்துக் கொள்ளும் எளிய செயலைச் செய்ய இயலாத ஒருவனிடம், எக்காலத்திலும் புகழ் வந்து பொருந்தாது. 870

1. **பகைஎன்னும் பண்பு இலதனை ஒருவன்**
**நகையேயும் வேண்டற்பாற்று அன்று**.

பகை என்று சொல்லப்படும் பண்பு இல்லாத தீமையை ஒருவன் சிரித்துப் பொழுதுபோக்கும் விளையாட்டாகவும் விரும்புதலாகாது. 871

2. **வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க**
**சொல்ஏர் உழவர் பகை**.

வில்லை ஏராக உடைய உழவராகிய வீரருடன் பகை கொண்ட போதிலும், சொல்லை ஏராக உடைய உழவராகிய அறிஞருடன் பகைகொள்ளக்கூடாது. 872

3. **ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்**
**பல்லார் பகைகொள் பவன்**.

தான் தனியாக இருந்து பலருடைய பகையைத் தேடிக் கொள்பவன், பித்துப் பிடித்தவரைவிட அறிவில்லாதவனாகக் கருதப்படுவான். 873

4. **பகைநட்பாக் கொண்டுஒழுகும் பண்புடை யாளன்**
**தகைமைக்கண் தங்கிற்று உலகு.**

பகையையும் நட்பாகச் செய்துகொண்டு நடக்கும் பண்புடையவனது பெருந்தன்மையில் உலகம் தங்கியிருப்பதாகும். 874

5. **தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்**
**இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று.**

தனக்கு உதவியான துணையோ இல்லை; தனக்குப் பகையோ இரண்டு; தானோ ஒருவன்; இந்நிலையில் அப்பகைகளுள் ஒன்றை இனிய துணையாகக் கொள்ள வேண்டும் 875

6. **தேறினும் தேறா விடினும் அழிவின்கண்**
**தேறான் பகாஅன் விடல்.**

இதற்குமுன் ஒருவனைப்பற்றி ஆராய்ந்து தெளிந்திருந்தாலும், தெளியாவிட்டாலும், அழிவு வந்தகாலத்தில் அவனைத் தெரியாமலும் நீங்காமலும் வாளா விடவேண்டும். 876

7. **நோவற்க நொந்தது அறியார்க்கு: மேவற்க**
**மென்மை பகைவர் அகத்து.**

துன்புற்றதைத் தாமாகவே அறியாத நண்பர்க்குத் துன்பத்தைச் சொல்லக் கூடாது; பகைவரிடத்தில் மென்மை மேற்கொள்ளக்கூடாது. 877

8. **வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்**
**பகைவர்கண் பட்ட செருக்கு.**

செய்யும் வகையை அறிந்து தன்னை வலிமைப்படுத்திக் கொண்டு தற்காப்புத் தேடிக்கொண்டால், பகைவரிடத்தில் ஏற்பட்ட செருக்குத் தானாகவே அழியும், 878

9. **இளைதுஆக முள்மரம் கொல்க: களையுநர்**
**கைகொல்லும் காழ்த்த இடத்து.**

முள்மரத்தை இளையதாக இருக்கும்போதே வெட்ட வேண்டும்; காழ்ப்பு ஏறி முதிர்ந்தபோது வெட்டுகின்றவரின் கையையே அது வருத்தும். 879

10. **உயிர்ப்ப உளர்அல்லர் மன்ற செயிர்ப்பவர்**
    **செம்மல் சிதைக்கலா தார்**.

பகைத்தவருடைய தலைமையைக் கெடுக்க முடியாதவர் திண்ணமாக மூச்சுவிடும் அளவிற்கு உயிரோடு வாழ்கின்றவர் அல்லர். 880

1. **நிழல்நீரும் இன்னாத இன்னா: தமர்நீரும்**
    **இன்னாஆம் இன்னா செயின்**.

இன்பம் தரும் நிழலும் நீரும் நோய் செய்வனவாக இருந்தால் தீயனவே ஆகும்; அதுபோலவே, சுற்றத்தாரின் தன்மைகளும் துன்பம் தருமானால் தீயனவே ஆகும். 881

2. **வாள்போல் பகைவரை அஞ்சற்க: அஞ்சுக**
    **கேள்போல் பகைவர் தொடர்பு**.

வாளைப்போல் வெளிப்படையான பகைவர்க்கு அஞ்ச வேண்டியதில்லை; ஆனால் உறவினரைப்போல இருந்து உட்பகை கொண்டவரின் தொடர்புக்கு அஞ்ச வேண்டும். 882

3. **உட்பகை அஞ்சித்தற் காக்க: உலைவுஇடத்து**
    **மண்பகையின் மாணத் தெறும்**.

உட்பகைக்கு அஞ்சி ஒருவன் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்; தளர்ச்சி வந்தபோது மட்கலத்தை அறுக்கும் கருவிபோல் அந்த உட்பகை தவறாமல் அழிவு செய்யும். 883

4. **மனம்மாணா உட்பகை தோன்றின் இனம்மாணா**
    **ஏதம் பலவுந் தரும்**.

மனம் திருந்தாத உட்பகை ஒருவனுக்கு உண்டாகுமானால், அது அவனுக்குச் சுற்றம் சீர்ப்படாமைக்குக் காரணமான குற்றம் பலவற்றையும் தரும். 884

5. **உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்**
**ஏதம் பலவுந் தரும்**.

உறவுமுறையோடு உட்பகை உண்டாகுமானால், அது ஒருவனுக்கு இறக்கும் வகையான குற்றம் பலவற்றையும் கொடுக்கும். 885

6. **ஒன்றாமை ஒன்றியார் கண்படின் எஞ்ஞான்றும்**
**பொன்றாமை ஒன்றல் அரிது**.

ஒருவனுடைய உற்றாரிடத்தில் பகைமை ஏற்படுமானால், அந்த உட்பகையால் அவன் அழியாமலிருத்தல் எப்போதும் அரிது. 886

7. **செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே**
**உட்பகை உற்ற குடி**.

செப்பின் இணைப்பைப்போல் புறத்தே பொருந்தி இருந்தாலும், உட்பகை உண்டான குடியில் உள்ளவர் அகத்தே பொருந்தி இருக்கமாட்டார். 887

8. **அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது**
**உட்பகை உற்ற குடி**.

உட்பகை உண்டான குடி, அரத்தினால் தேய்க்கப் பட்ட இரும்புபோல் வலிமை குறைக்கப்பட்டுத் தேய்ந்து போகும். 888

9. **எள்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்**
**உட்பகை உள்ளதாம் கேடு**.

எள்ளின் பிளவைப் போன்ற சிறிய அளவு உடையதே ஆனாலும், ஒரு குடியை அழிக்கவல்ல கேடு உட்பகையில் உள்ளதாகும். 889

10. **உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்**
**பாம்போடு உடன்உறைந் தற்று**.

அகத்தின் உடன்பாடு இல்லாதவருடன் கூடி வாழும் வாழ்க்கை, ஒரு குடிசையிற் பாம்போடு உடன்வாழ்ந்தாற் போன்றது. 890

1. **ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்**
**போற்றலுள் எல்லாம் தலை**.

மேற்கொண்ட செயலைச் செய்து முடிக்க வல்லவரின் ஆற்றலை இகழாதிருத்தல், காப்பவர் செய்து கொள்ளும் காவல் எல்லாவற்றிலும் சிறந்தது. 891

2. **பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்**
**பேரா இடும்பை தரும்**.

ஆற்றல் மிகுந்த பெரியாரை விரும்பி மதிக்காமல் நடந்தால், அது அப் பெரியாரால் நீங்காத துன்பத்தைத் தருவதாகும். 892

3. **கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்**
**ஆற்று பவர்கண் இழுக்கு**.

அழிக்க வேண்டுமானால் அவ்வாறே செய்துமுடிக்க வல்லவரிடத்தில் தவறு செய்தலை, ஒருவன் கெட வேண்டுமானால் கேளாமலே செய்யலாம். 893

4. **கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு**
**ஆற்றாதார் இன்னா செயல்**.

ஆற்றல் உடையவர்க்கு ஆற்றல் இல்லாதவர் தீமை செய்தால், தானே வந்து அழிக்கவல்ல எமனைக் கைகாட்டி அழைத்தாற் போன்றது. 894

5. **யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெம்துப்பின்**
**வேந்து செறப்பட் டவர்**.

மிக்க வலிமை உடைய அரசனால் வெகுளப்பட்டவர், அவனிடமிருந்து தப்புவதற்காக எங்கே சென்றாலும் எங்கும் வாழ முடியாது. 895

6. **எரியால் சுடப்படினும் உய்வுஉண்டாம்: உய்யார்**
**பெரியார்ப் பிழைத்துஒழுகு வார்**.

தீயால் சுடப்பட்டாலும் ஒருகால் உயிர்பிழைத்து வாழ முடியும்; ஆற்றல் மிகுந்த பெரியாரிடத்தில் தவறு செய்து நடப்பவர் தப்பிப் பிழைக்க முடியாது. 896

7. **வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்**
   **தகைமாண்ட தக்கார் செறின்?**

தகுதியால் சிறப்புற்ற பெரியார் ஒருவனை வெகுண்டால் அவனுக்குப் பலவகையால் மாண்புற்ற வாழ்க்கையும் பெரும் பொருளும் இருந்தும் என்ன பயன்? 897

8. **குன்றுஅன்னார் குன்ற மதிப்பின் குடியொடு**
   **நின்றன்னார் மாய்வர் நிலத்து**.

மலைபோன்ற பெரியார் கெட நினைத்தால், உலகில் அழியாமல் நிலைபெற்றாற்போல் உள்ளவரும் தம் குடியோடு அழிவர். 898

9. **ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து**
   **வேந்தனும் வேந்து கெடும்**.

உயர்ந்த கொள்கையுடைய பெரியார் சீறினால், நாட்டை ஆளும் அரசனும் இடைநடுவே முரிந்து அரசு இழந்து கெடுவான். 899

10. **இறந்துஅமைந்த சார்புடையர் ஆயினும் உய்யார்**
    **சிறந்துஅமைந்த சீரார் செறின்**.

மிகச் சிறப்பாக அமைந்த பெருமையுடையவர் வெகுண்டால், அளவு கடந்து அமைந்துள்ள சார்புகள் உடையவரானாலும் தப்பிப் பிழைக்க முடியாது. 900

1. **மனைவிழைவார் மாண்பயன் எய்தார்: வினைவிழைவார்**
   **வேண்டாப் பொருளும் அது**.

மனைவியை விரும்பி அவள் சொன்னபடி நடப்பவர் சிறந்த பயனை அடையமாட்டார்; கடமையைச் செய்தலை விரும்புகின்றவர் வேண்டாத பொருளும் அதுவே. 901

2. **பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்**
**நாணாக நாணுத் தரும்**.

கடமையை விரும்பாமல் மனைவியின் பெண்மையை விரும்புகின்றவனுடைய ஆக்கம், பெரியதொரு நாணத்தக்க செயலாக நாணத்தைக் கொடுக்கும். 902

3. **இல்லாள்கண் தாழ்ந்த இயல்புஇன்மை எஞ்ஞான்றும்**
**நல்லாருள் நாணுத் தரும்**.

மனைவியிடத்தில் தாழ்ந்து நடக்கும் இழிந்த தன்மை ஒருவனுக்கு எப்போதும் நல்லவரிடையே இருக்கும்போது நாணத்தைத் தரும். 903

4. **மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்**
**வினையாண்மை வீறுஎய்தல் இன்று**.

மனைவிக்கு அஞ்சி நடக்கின்ற மறுமைப் பயன் இல்லாத ஒருவன், செயல் ஆற்றுந்தன்மை பெருமை பெற்று விளங்க முடிவதில்லை. 904

5. **இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற்று எஞ்ஞான்றும்**
**நல்லார்க்கு நல்ல செயல்**.

மனைவிக்கு அஞ்சி வாழ்கின்றவன் எப்போதும் நல்லவர்க்கு நன்மையான கடமையைச் செய்வதற்கு அஞ்சி நடப்பான். 905

6. **இமையாரின் வாழினும் பாடுஇலரே இல்லாள்**
**அமைஆர்தோள் அஞ்சு பவர்**.

மனைவியின் தோளுக்கு அஞ்சி வாழ்கின்றவர் தேவரைப் போல் இவ்வுலகத்தில் சிறப்பான நிலையில் வாழ்ந்த போதிலும் பெருமை இல்லாதவரே ஆவர். 906

7. **பெண்ஏவல் செய்துஒழுகும் ஆண்மையின் நாணுடைப்**
**பெண்ணே பெருமை உடைத்து**.

மனைவியின் ஏவலைச் செய்து நடக்கின்றவனுடைய ஆண்மையைவிட, நாணத்தைத் தன் இயல்பாக உடையவளின் பெண்மையே பெருமை உடையது. 907

8. **நட்டார் குறைமுடியார் நன்றுஆற்றார் நன்னுதலாள்**
**பெட்டாங்கு ஒழுகு பவர்**.

மனைவி விரும்பியபடி செய்து நடப்பவர், தம்முடைய நண்பர்க்கு உற்ற குறையையும் செய்து முடிக்கமாட்டார்; அறத்தையும் செய்யமாட்டார். 908

9. **அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்**
**பெண்ஏவல் செய்வார்கண் இல்**.

அறச் செயலும் அதற்குக் காரணமாக அமைந்த பொருள் முயற்சியும் மற்றக் கடமைகளும் மனைவியின் ஏவலைச் செய்வோரிடத்தில் இல்லை. 909

10. **எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்றும்**
**பெண்சேர்ந்துஆம் பேதைமை இல்**.

நன்றாக எண்ணுதல் பொருந்திய நெஞ்சத்தோடு தக்க நிலையும் உடையார்க்கு எக்காலத்திலும் மனைவியின் ஏவலுக்கு இணங்கும் அறியாமை இல்லை. 910

1. **அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்**
**இன்சொல் இழுக்குத் தரும்**.

அன்பினால் விரும்பாமல் பொருள் காரணமாக விரும்புகின்ற பொதுமகளிர் பேசுகின்ற இனிய சொல் ஒருவனுக்குத் துன்பத்தைக் கொடுக்கும். 911

2. **பயன்தூக்கிப் பண்புஉரைக்கும் பண்பில் மகளிர்**
**நயன்தூக்கி நள்ளா விடல்**.

கிடைக்கக்கூடிய பயனை அளந்து பார்த்து, அதற்கு ஏற்றவாறு இனியசொல் கூறுகின்ற பண்பற்ற பொது மகளிரின் இன்பத்தை ஆராய்ந்து பொருந்தாமல் விடவேண்டும். 912

3. **பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டுஅறையில்**
**ஏதில் பிணந்தழீஇ யற்று**.

பொருளையே விரும்பும் பொதுமகளிரின் பொய்யான தழுவுதல், இருட்டறையில், தொடர்பு இல்லாத ஒரு பிணத்தைத் தழுவினாற் போன்றது. 913

4. **பொருட்பொருளார் புன்நலம் தோயார் அருட்பொருள்**
**ஆயும் அறிவி னவர்**.

பொருள் ஒன்றையே பொருளாகக் கொண்ட பொது மகளிரின் புன்மையான இன்பத்தை, அருளாகிய சிறந்த பொருளை ஆராயும் அறிவுடையோர் பொருந்தமாட்டார். 914

5. **பொதுநலத்தார் புன்நலம் தோயார் மதிநலத்தின்**
**மாண்ட அறிவி னவர்**.

இயற்கை யறிவின் நன்மையால் சிறப்புற்ற அறிவுடையோர், பொருள் தருவார் எல்லார்க்கும் பொதுவாக இன்பம் தரும் மகளிரின் புன்மையான நலத்தைப் பொருந்தார். 915

6. **தம்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்**
**புன்னலம் பாரிப்பார் தோள்**.

அழகு முதலியவற்றால் செருக்குக் கொண்டு தம் புன்மையான நிலையான நலத்தை விற்கும் பொதுமகளிரின் தோளை, தம் நல்லொழுக்கத்தைப் போற்றும் சான்றோர் பொருந்தார். 916

7. **நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சின்**
**பேணிப் புணர்பவர் தோள்**.

நெஞ்சத்தை நிறுத்தி ஆளும் ஆற்றல் இல்லாதவர், தம் நெஞ்சில் வேறுபொருளை விரும்பிக் கூடும் பொது மகளிரின் தோளைப் பொருந்துவர். 917

8. **ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்குஎன்ப**
**மாய மகளிர் முயக்கு**.

வஞ்சம் நிறைந்த பொதுமகளிரின் சேர்க்கை, ஆராய்ந்தறியும் அறிவு இல்லாதவர்க்கு அணங்கு தாக்கு (மோகினி மயக்கு) என்று கூறுவர். 918

9. **வரைவுஇலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்**
**பூரியர்கள் ஆழும் அளறு**.

ஒழுக்க வரையறை இல்லாத பொதுமகளிரின் மெல்லிய தோள், உயர்வில்லாத கீழ்மக்கள் ஆழ்ந்து கிடக்கின்ற நரகமாகும். 919

10. **இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**
**திருநீக்கப் பட்டார் தொடர்பு**.

இருவகைப்பட்ட மனம் உடைய பொதுமகளிரும் கள்ளும் சூதுமாகிய இம் மூவகையும் திருமகளால் நீக்கப்பட்டவரின் உறவாகும். 920

1. **உட்கப் படாஅர் ஒளிஇழப்பர் எஞ்ஞான்றும்**
**கள்காதல் கொண்டுஒழுகு வார்**.

கள்ளின்மேல் விருப்பம் கொண்டு நடப்பவர், எக்காலத்திலும் பகைவரால் அஞ்சப்படார்; தமக்கு உள்ள புகழையும் இழந்துவிடுவார். 921

2. **உண்ணற்க கள்ளை: உணில்உண்க சான்றோரான்**
**எண்ணப் படவேண்டா தார்**.

கள்ளை உண்ணக்கூடாது; சான்றோரால் நன்கு எண்ணப்படுவதை விரும்பாதவர் கள்ளை உண்ண வேண்டுமானால் உண்ணலாம். 922

3. **ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்: என்மற்றுச்**
**சான்றோர் முகத்துக் களி**?

பெற்ற தாயின் முகத்திலும் கள்ளுண்டு மயங்குதல் துன்பம் தருவதாகும்; குற்றம் கடியும் இயல்புடைய சான்றோரின் முகத்தில் அது என்னவாகும்? 923

4. **நாண்என்னும் நல்லாள் புறம்கொடுக்கும் கள்என்னும்**
**பேணாப் பெருங்குற்றத் தார்க்கு**.

நாணம் என்று சொல்லப்படும் நல்லவள், கள் என்று சொல்லப்படும் விரும்பத்தகாத பெருங்குற்றம் உடையவர்க்கு எதிரே நிற்காமல் செல்வாள். 924

5. **கையறி யாமை யுடைத்தே பொருள் கொடுத்து**
**மெய்அறி யாமை கொளல்**.

விலைப்பொருள் கொடுத்துக் கள்ளுண்டு தன் உடம்பைத் தான் அறியாத நிலையை மேற்கொள்ளுதல், செய்வது இன்னதென்று அறியாத அறியாமை உடையதாகும். 925

6. **துஞ்சினார் செத்தாரின் வேறுஅல்லர் எஞ்ஞான்றும்**
**நஞ்சுஉண்பார் கள்உண் பவர்**.

உறங்கினவர், இறந்தவரைவிட வேறுபட்டவர் அல்லர்; அவ்வாறே கள்ளுண்பவரும் அறிவு மயங்குதலால் நஞ்சு உண்பவரே ஆவர். 926

7. **உள்ஒற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்**
**கள்ஒற்றிக் கண்சாய் பவர்**.

கள்ளை மறைந்திருந்து குடித்து அறிவு மயங்குபவர், உள்ளூரில் வாழ்கின்றவரால் உள்ளான செய்திகள் ஆராயப்பட்டு எந்நாளும் சிரிக்கப்படுவர். 927

8. **களித்துஅறியேன் என்பது கைவிடுக: நெஞ்சத்து**
**ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்**.

கள்ளுண்பவன் `யான் ஒருபோதும் கள்ளுண்டறியேன்' என்று சொல்லுவதை விடவேண்டும்: நெஞ்சில் ஒளிந்திருந்த குற்றமும் கள்ளுண்டபோதே வெளிப்படும். 928

9. **களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்**
**குளித்தானைத் தீத்துரீஇ யற்று**.

கள்ளுண்டு மயங்கினவனைக் காரணம் காட்டித் தெளிவித்தல், நீரின்கீழ் மூழ்கின ஒருவனைத் தீவிளக்குக் கொண்டு தேடினாற் போன்றது. 929

10. **கள்உண்ணாப் போழ்தில் களித்தானைக் காணும்கால்**
**உள்ளான்கொல் உண்டதன் சோர்வு**.

ஒருவன் தான் கள் உண்ணாதபோது கள்ளுண்டு மயங்கினவனைக் காணுமிடத்தில் உண்டு மயங்குவதால் வரும் சோர்வை நினைக்கமாட்டானோ? 930

1. **வேண்டற்க வென்றிடினும் சூதினை: வென்றதூஉம்**
   **தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று**.

வெற்றியே பெறுவதானாலும் சூதாட்டத்தை விரும்பக் கூடாது. வென்ற வெற்றியும், தூண்டில் இரும்பை இரை என்று மயங்கி மீன் விழுங்கினாற் போன்றது. 931

2. **ஒன்றுஎய்தி நூறுஇழக்கும் சூதர்க்கும் உண்டாம்கொல்**
   **நன்றுஎய்தி வாழ்வதோர் ஆறு**.

ஒரு பொருள்பெற்று நூறுமடங்கு பொருளை இழந்துவிடும் சூதாடிகளுக்கும், நன்மை பெற்று வாழும் ஒரு வழி உண்டோ? 932

3. **உருள்ஆயம் ஓவாது கூறின் பொருளாயம்**
   **போஒய்ப் புறமே படும்**.

ஒருவன் உருளுகின்ற கருவியால் வரும் பொருளை இடைவிடாமல் கூறிச் சூதாடினால், பொருள் வருவாய் அவனைவிட்டு நீங்கிப் பகைவரிடத்தில் சேரும் 933

4. **சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்**
   **வறுமை தருவதுஒன்று இல்**.

ஒருவனுக்குத் துன்பம் பலவற்றையும் உண்டாக்கி அவனுடைய புகழைக் கெடுக்கின்ற சூதைப்போல் வறுமை தருவது வேறொன்றும் இல்லை. 934

5. **கவறும் கழகமும் கையும் தருக்கி**
   **இவறியார் இல்லாகி யார்**.

சூதாடு கருவியும், ஆடும் இடமும், கைத்திறமையும் மதித்துக் கைவிடாதவர், (எல்லாப் பொருள் உடையவராக இருந்தும்) இல்லாதவர் ஆய்விடுவார். 935

6. **அகடுஆரார் அல்லல் உழப்பர் சூதுஎன்னும்**
**முகடியால் மூடப்பட் டார்**.

சூது என்று சொல்லப்படும் மூதேவியால் விழுங்கப் பட்டவர், வயிறு நிறைய உணவும் உண்ணாதவராகிப் பல துன்பப்பட்டு வருந்துவார். 936

7. **பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்**
**கழகத்துக் காலை புகின்**.

சூதாடுமிடத்தில் ஒருவனுடைய காலம் கழியுமானால், அது அவனுடைய பழைமையாய் வந்த செல்வத்தையும் இயல்பான நற்பண்பையும் கெடுக்கும். 937

8. **பொருள்கெடுத்துப் பொய்மேல் கொளீஇ அருள்கெடுத்து**
**அல்லல் உழப்பிக்கும் சூது**.

சூது, உள்ள பொருளை அழித்துப் பொய்யை மேற்கொள்ளச் செய்து அருளையும் கெடுத்துப் பலவகையிலும் துன்பமுற்று வருந்தச் செய்யும். 938

9. **உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்**
**அடையாவாம் ஆயம் கொளின்**.

சூதாடுதலை ஒருவன் மேற்கொண்டால், புகழ், கல்வி, செல்வம், உணவு, உடை ஆகிய ஐந்தும் அவனைச் சேராமல் ஒதுங்கும். 939

10. **இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்**
**உழத்தொறூஉம் காதற்று உயிர்**.

பொருள் வைத்து இழக்க இழக்க மேன்மேலும் விருப்பத்தை வளர்க்கும் சூதாட்டம்போல், உடல் துன்பப்பட்டு வருந்த வருந்த உயிர் மேன்மேலும் காதல் உடையதாகும். 940

1. **மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலா எண்ணிய மூன்று**.

மருத்துவ நூலோர் வாதம் பித்தம் சிலோத்துமம் என எண்ணிய மூன்றும் அளவுக்கு மிகுந்தாலும் குறைந்தாலும் நோய் உண்டாக்கும். 941

2. **மருந்துஎன வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**
**அற்றது போற்றி உணின்**.

முன் உண்ட உணவு செரித்த தன்மையை ஆராய்ந்து போற்றிப் பிறகு தக்க அளவு உண்டால், உடம்பிற்கு மருந்து என ஒன்று வேண்டியதில்லை. 942

3. **அற்றால் அளவறிந்து உண்க: அஃதுடம்பு**
**பெற்றான் நெடிதுஉய்க்கும் ஆறு**.

முன் உண்ட உணவு செரித்துவிட்டால், பின் வேண்டிய அளவு அறிந்து உண்ணவேண்டும்; அதுவே உடம்பு பெற்றவன் அதை நெடுங்காலம் செலுத்தும் வழியாகும். 943

4. **அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறுஅல்ல**
**துய்க்க துவரப் பசித்து**.

முன் உண்ட உணவு செரித்த தன்மையை அறிந்து மாறுபாடில்லாத உணவுகளைக் கடைபிடித்து, அவற்றையும் நன்றாகப் பசித்தபிறகு உண்ணவேண்டும். 944

5. **மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துஉண்ணின்**
**ஊறுபாடு இல்லை உயிர்க்கு**.

மாறுபாடில்லாத உணவை அளவு மீறாமல் மறுத்து அளவோடு உண்டால், உயிர் உடம்பில் வாழ்வதற்கு இடையூறான நோய் இல்லை. 945

6. **இழிவுஅறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்**
**கழிபே ரிரையான்கண் நோய்**.

குறைந்த அளவு இன்னதென்று அறிந்து உண்பவனிடத்தில் இன்பம் நிலை நிற்பது போல, மிகப் பெரிதும் உண்பவனிடத்தில் நோய் நிற்கும். 946

7. **தீயளவு அன்றித் தெரியான் பெரிதுஉண்ணின்**
**நோயளவு இன்றிப் படும்**.

பசித்தீயின் அளவின்படி அல்லாமல், அதை ஆராயாமல் மிகுதியாக உண்டால், அதனால் நோய்கள் அளவில்லாமல் ஏற்பட்டுவிடும். 947

8. **நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்**.

நோய் இன்னதென்று ஆராய்ந்து, நோயின் காரணம் ஆராய்ந்து, அதைத் தணிக்கும் வழியையும் ஆராய்ந்து, உடலுக்குப் பொருந்தும்படியாகச் செய்யவேண்டும். 948

9. **உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்**
**கற்றான் கருதிச் செயல்**.

மருத்துவ நூலைக் கற்றவன், நோயுற்றவனுடைய வயது முதலியவற்றையும், நோயின் அளவையும், காலத்தையும் ஆராய்ந்து செய்யவேண்டும். 949

10. **உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்என்று**
**அப்பால்நாற் கூற்றே மருந்து**.

நோயுற்றவன், நோய் தீர்க்கும் மருத்துவன், மருந்து, மருந்தை அருகிலிருந்து கொடுப்பவன் என்று மருத்துவ முறை அந்த நான்குவகைப் பாகுபாடு உடையது. 950

1. **இற்பிறந்தார் கண்அல்லது இல்லை இயல்பாகச்**
**செப்பமும் நாணும் ஒருங்கு**.

நடுவு நிலைமையும் நாணமும் உயர்குடியில் பிறந்தவரிடத்தில் அல்லாமல் மற்றவரிடத்தில் இயல்பாக ஒருசேர அமைவதில்லை. 951

2. **ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்**
**இழுக்கார் குடிப்பிறந் தார்**.

உயர்குடியில் பிறந்தவர் ஒழுக்கமும் வாய்மையும் நாணமும் ஆகிய இம் மூன்றிலிருந்தும் வழுவாமல் இயல்பாகவே நன்னெறியில் வாழ்வர். 952

3. **நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்**
**வகைஎன்ப வாய்மைக் குடிக்கு**.

உண்மையான உயர்குடியில் பிறந்தவர்க்கு முகமலர்ச்சி, ஈகை, இனிய சொல், பிறரை இகழ்ந்து கூறாமை ஆகிய நான்கும் நல்ல பண்புகள் என்பர். 953

4. **அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்**
**குன்றுவ செய்தல் இலர்**.

பலகோடிப் பொருளைப் பெறுவதாக இருந்தாலும் உயர்குடியில் பிறந்தவர் தம் குடியின் சிறப்புக் குன்றுவதற்குக் காரணமான குற்றங்களைச் செய்வதில்லை. 954

5. **வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி**
**பண்பில் தலைப்பிரிதல் இன்று**.

தாம் பிறர்க்குக் கொடுத்துதவும் வண்மை வறுமையால் சுருங்கிய போதிலும், பழம்பெருமை உடைய குடியில் பிறந்தவர் தம் பண்பிலிருந்து நீங்குவதில்லை. 955

6. **சலம்பற்றிச் சால்புஇல செய்யார்மாசு அற்ற**
**குலம்பற்றி வாழ்தும்என் பார்**.

மாசற்ற குடிப் பண்புடன் வாழ்வோம் என்று கருதி வாழ்வோர், வஞ்சனைகொண்டு தகுதியில்லாதவற்றைச் செய்யமாட்டார். 956

7. **குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்**
**மதிக்கண் மறுப்போல் உயர்ந்து**.

உயர்குடியில் பிறந்தவரிடத்தில் உண்டாகும் குற்றம், ஆகாயத்தில் திங்களிடம் காணப்படும் களங்கம்போல் பலரறியத் தோன்றும். 957

8. **நலத்தின்கண் நார்இன்மை தோன்றின் அவனைக்**
**குலத்தின்கண் ஐயப் படும்**.

ஒருவனுடைய நல்ல பண்புகளுக்கிடையில் அன்பற்ற தன்மை காணப்பட்டால், அவனை அவனுடைய குடிப்பிறப்புப் பற்றி ஐயப்பட நேரும். 958

9. **நிலத்தில் கிடந்தமை கால்காட்டும்: காட்டும்**
**குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்**.

இன்ன நிலத்தில் இருந்து முளைத்தது என்பதை முளை காட்டும்; அதுபோல் குடியிற் பிறந்தவரின் வாய்ச்சொல் அவருடைய குடிப்பிறப்பைக் காட்டும். 959

10. **நலம்வேண்டின் நாண்உடைமை வேண்டும்: குலம்வேண்டின்**
**வேண்டுக யார்க்கும் பணிவு**.

ஒருவனுக்கு நன்மை வேண்டுமானால் நாணம் உடையவனாக வேண்டும்; குடியின் உயர்வு வேண்டுமானால் எல்லோரிடத்தும் பணிவு வேண்டும். 960

1. **இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்**
**குன்ற வருப விடல்**.

இன்றியமையாத சிறப்பை உடைய செயல்களே ஆயினும், குடிப்பெருமை தாழுமாறு வரும் செயல்களை ஒருவன் செய்யாமல் விடவேண்டும். 961

2. **சீரினும் சீர்அல்ல செய்யாரே சீரொடு**
**பேராண்மை வேண்டு பவர்**.

புகழோடு பெரிய ஆண்மையும் விரும்புகின்றவர், புகழ் தேடும் வழியிலும் குடிப்பெருமைக்கு ஒவ்வாத செயல்களைச் செய்யமாட்டார். 962

3. **பெருக்கத்து வேண்டும் பணிதல்: சிறிய**
**சுருக்கத்து வேண்டும் உயர்வு**.

செல்வம் பெருகியுள்ள காலத்தில் ஒருவனுக்குப் பணிவு வேண்டும். செல்வம் குறைந்து சுருங்கும் வறுமையுள்ள காலத்தில் பணியாத உயர்வு வேண்டும். 963

4. **தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்**
**நிலையின் இழிந்தக் கடை**.

மக்கள் தம் உயர்வுக்கு உரிய நிலையிலிருந்து தாழ்ந்த போது, தலையிலிருந்து விழுந்து தாழ்வுற்ற மயிரினைப் போன்றவர் ஆவர். 964

5. **குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ**
**குன்றி அனைய செயின்**.

மலைபோல் உயர்ந்த நிலையில் உள்ளவரும், தாழ்வுக்குக் காரணமான செயல்களை ஒரு குன்றிமணி அளவு செய்தாலும் தாழ்ந்து போய்விடுவர். 965

6. **புகழ்இன்றால்: புத்தேள்நாட்டு உய்யாதால்: என்மற்று**
**இகழ்வார்பின் சென்று நிலை?**

மதியாமல் இகழ்கின்றவரின் பின்சென்று பணிந்து நிற்கும் நிலை, ஒருவனுக்குப் புகழும் தாராது; தேவருலகிலும் செலுத்தாது; வேறு பயன் என்ன? 966

7. **ஒட்டார்பின் சென்றுஒருவன் வாழ்தலின் அந்நிலையே**
**கெட்டான் எனப்படுதல் நன்று**.

மதியாதவரின் பின்சென்று ஒருவன் உயிர் வாழ்வதை விட, அவ்வாறு செய்யாத நிலையில் நின்று அழிந்தான் என்று சொல்லப்படுதல் நல்லது 967

8. **மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை**
**பீடழிய வந்த இடத்து?**

ஒருவனுடைய பெருந்தகைமை தன் சிறப்புக்கெட நேர்ந்த போது, அவன் உடம்பை மட்டும் காத்து வாழும் வாழ்க்கை சாவாமைக்கு மருந்தோ? 968

9. **மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின்**.

தன் உடம்பிலிருந்து மயிர் நீங்கினால் உயிர் வாழாத கவரிமானைப் போன்றவர் மானம் அழிய நேர்ந்தால் உயிரை விட்டுவிடுவர். 969

10. **இளிவரின் வாழாத மானம் உடையார்**
**ஒளிதொழுது ஏத்தும் உலகு**.

தமக்கு யாதேனும் இழிவு நேர்ந்தால் உயிர் வாழாத மானம் உடையவரின் புகழை உலகத்தார் தொழுது ஏத்தி நிற்பார்கள். 970

1. **ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை: இளிஒருவற்கு**
**அஃதுஇறந்து வாழ்தும் எனல்**.

ஒருவனுக்கு ஒளி ஊக்கமிகுதியே ஆகும்; ஒருவனுக்கு இழிவு அந்த ஊக்கம் இல்லாமலே உயிர் வாழலாம் என்று எண்ணுதலாம். 971

2. **பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும்: சிறப்புஒவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்**.

எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒரு தன்மையானதே; ஆயினும் செய்கின்ற தொழில்களின் உயர்வு தாழ்வு வேறுபாடுகளால் சிறப்பியல்பு ஒத்திருப்பதில்லை. 972

3. **மேல்இருந்தும் மேல்அல்லார் மேல்அல்லர்: கீழ்இருந்தும்**
**கீழ்அல்லார் கீழஅல் லவர்**.

மேல்நிலையில் இருந்தாலும் மேன்மைப் பண்பு இல்லாதவர் மேலானவர் அல்லர்; கீழ்நிலையில் இருந்தாலும் இழிகுணம் இல்லாதவர் கீழ்மக்கள் அல்லர். 973

4. **ஒருமை மகளிரே போலப் பெருமையும்**
**தன்னைத்தான் கொண்டுஒழுகின் உண்டு**.

ஒரு தன்மையான கற்புடைய மகளிரைப் போல், பெருமைப் பண்பும் ஒருவன் தன்னைத்தான் காத்துக் கொண்டு நடந்தால் உளதாகும். 974

5. **பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்**
**அருமை உடைய செயல்**.

பெருமைப்பண்பு உடையவர் செய்வதற்கு அருமையான செயலைச் செய்வதற்கு உரிய நெறியில் செய்து முடிக்க வல்லவர் ஆவர். 975

6. **சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்**
**பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு**.

பெரியோரை விரும்பிப் போற்றுவோம் என்னும் உயர்ந்த நோக்கம், அவருடைய சிறப்பை உணராத சிறியோரின் உணர்ச்சியில் இல்லை. 976

7. **இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்பும்தான்**
**சீரல் லவர்கண் படின்**.

சிறப்பு நிலையும் தனக்குப் பொருந்தாத சீரற்ற கீழ் மக்களிடம் ஏற்பட்டால், வரம்புமீறிய செயலை உடையதாகும். 977

8. **பணியுமாம் என்றும் பெருமை: சிறுமை**
**அணியுமாம் தன்னை வியந்து**.

பெருமைப் பண்பு எக்காலத்திலும் பணிந்து நடக்கும்; ஆனால் சிறுமையோ தன்னைத்தானே வியந்து பாராட்டிக் கொள்ளும். 978

9. **பெருமை பெருமிதம் இன்மை: சிறுமை**
**பெருமிதம் ஊர்ந்து விடல்**.

பெருமைப் பண்பாவது செருக்கு இல்லாமல் வாழ்தல்: சிறுமையோ செருக்கே மிகுந்து அதன் எல்லையில் நின்று விடுவதாகும். 979

10. **அற்றம் மறைக்கும் பெருமை: சிறுமைதான்**
**குற்றமே கூறி விடும்**.

பெருமைப்பண்பு பிறருடைய குறைபாட்டை மறைக்கும்; சிறுமையோ பிறருடைய குற்றத்தையே எடுத்துச் சொல்லிவிடும். 980

1. **கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து**
**சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு**.

கடமை இவை என்று அறிந்து சான்றாண்மை மேற்கொண்டு நடப்பவர்க்கு நல்லவை எல்லாம் இயல்பான கடமை என்று கூறுவர். 981

2. **குணநலம் சான்றோர் நலனே: பிறநலம்**
   **எந்நலத்து உள்ளதூஉம் அன்று.**

சான்றோரின் நலம் என்று கூறப்படுவது அவருடைய பண்புகளின் நலமே; மற்ற நலம் வேறு எந்த நலத்திலும் சேர்ந்துள்ளதும் அன்று. 982

3. **அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு**
   **ஐந்துசால்பு ஊன்றிய தூண்.**

அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் ஐந்து பண்புகளும் சால்பு என்பதைத் தாங்கியுள்ள தூண்களாகும். 983

4. **கொல்லா நலத்தது நோன்மை: பிறர்தீமை**
   **சொல்லா நலத்தது சால்பு.**

தவம் ஓர் உயிரையும் கொல்லாத அறத்தை அடிப்படையாகக் கொண்டது; சால்பு பிறருடைய தீமையை எடுத்துச் சொல்லாத நற்பண்பை அடிப்படையாகக் கொண்டது. 984

5. **ஆற்றுவார் ஆற்றல் பணிதல்: அதுசான்றோர்**
   **மாற்றாரை மாற்றும் படை.**

ஆற்றலுடையவரின் ஆற்றலாவது பணிவுடன் நடத்தலாகும். அது சான்றோர் தம் பகைவரைப் பகைமையிலிருந்து மாற்றுகின்ற கருவியாகும். 985

6. **சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி**
   **துலையல்லார் கண்ணும் கொளல்.**

சால்புக்கு உரைகல்போல் மதிப்பிடும் கருவி எது என்றால் தமக்கு ஒப்பில்லாத தாழ்ந்தோரிடத்திலும் தோல்வியை ஏற்றுக் கொள்ளும் பண்பாகும். 986

7. **இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
**என்ன பயத்ததோ சால்பு?**

துன்பமானவற்றைச் செய்தவர்க்கும் இனிய உதவிகளைச் செய்யாவிட்டால், சான்றோரின் சால்பு என்ன பயன் உடையதாகும்? 987

8. **இன்மை ஒருவற்கு இளிவுஅன்று சால்புஎன்னும்**
**திண்மைஉண் டாகப் பெறின்.**

சால்பு என்னும் வலிமை உண்டாகப் பெற்றால் ஒருவனுக்குப் பொருள் இல்லாத குறையாகிய வறுமை இழிவானது அன்று. 988

9. **ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு**
**ஆழி எனப்படு வார்.**

சால்பு என்னும் தன்மைக்குக் கடல் என்று புகழப் படுகின்றவர், ஊழிக்காலத்தின் வேறுபாடுகளே நேர்ந்தாலும் தாம் வேறுபடாமல் இருப்பர். 989

10. **சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலம்தான்**
**தாங்காது மன்னோ பொறை.**

சான்றோரின் சால்பு நிறைந்த பண்பு குறைபடுமானால் இந்தப் பெரிய நிலவுலகமும் தன் பாரத்தைத் தாங்க முடியாமற் போய்விடும். 990

1. **எண்பதத்தால் எய்தல் எளிதுஎன்ப யார்மாட்டும்**
**பண்புஉடைமை என்னும் வழக்கு.**

பண்பு உடையவராக வாழும் நல்வழியை, யாரிடத்திலும் எளிய செல்வியுடன் இருப்பதால் அடைவது எளியது என்று கூறுவர். 991

2. **அன்புஉடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்**
**பண்புஉடைமை என்னும் வழக்கு.**

அன்புடையவராக இருத்தல், உயர்ந்த குடியில் பிறந்த தன்மை அமைந்திருத்தல் ஆகிய இவ்விரண்டும் பண்பு உடையவராக வாழும் நல்வழியாகும். 992

3. **உறுப்புஒத்தல் மக்கள்ஒப்பு அன்றால்: வெறுத்தக்க**
**பண்புஒத்தல் ஒப்பதாம் ஒப்பு**.

உடம்பால் ஒத்திருத்தல் மக்களோடு ஒப்புமை அன்று; பொருந்தத்தக்க பண்பால் ஒத்திருத்தலே கொள்ளத்தக்க ஒப்புமையாகும். 993

4. **நயனொடு நன்றி புரிந்த பயன்உடையார்**
**பண்புபா ராட்டும் உலகு**.

நீதியையும் நன்மையையும் விரும்பிப் பிறர்க்குப் பயன் பட வாழும் பெரியோரின் நல்ல பண்பை உலகத்தார் போற்றிக் கொண்டாடுவர். 994

5. **நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி: பகையுள்ளும்**
**பண்புஉள பாடுஅறிவார் மாட்டு**.

ஒருவனை இகழ்ந்து பேசுதல் விளையாட்டிலும் துன்பம் தருவதாகும்; பிறருடைய இயல்பை அறிந்து நடப்பவரிடத்தில் பகைமையிலும் நல்ல பண்புகள் உள்ளன. 995

6. **பண்புஉடையார்ப் பட்டுஉண்டு உலகம்: அதுஇன்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்**.

பண்பு உடையவரிடத்தில் பொருந்தியிருப்பதால் உலகம் உள்ளதாய் இயங்குகின்றது; அஃது இல்லையானால் மண்ணில் புகுந்து அழிந்துபோகும். 996

7. **அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்**
**மக்கட்பண்பு இல்லா தவர்**.

மக்களுக்கு உரிய பண்பு இல்லாதவர், அரம்போல் கூர்மையான அறிவு உடையவராயினும், ஓரறிவுயிராகிய மரத்தைப் போன்றவரே ஆவர். 997

8. **நண்புஆற்றா ராகி நயம்இல செய்வார்க்கும்**
**பண்புஆற்றார் ஆதல் கடை**.

நட்புக் கொள்ள முடியாதவராய்த் தீயவை செய்கின்றவரிடத்திலும் பண்பு உடையவராய் நடக்க முடியாமை இழிவானதாகும். 998

9. **நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்**
   **பகலும்பாற் பட்டன்று இருள்**.

பிறரோடு கலந்து பழகி மகிழ முடியதவர்க்கு, மிகப் பெரிய இந்த உலகம் ஒளியுள்ள பகற் காலத்திலும் இருளில் கிடப்பதாம். 999

10. **பண்புஇலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்**
    **கலந்தீமை யால்திரிந் தற்று**.

பண்பு இல்லாதவன் பெற்ற பெரிய செல்வம், வைத்த கலத்தின் தீமையால் நல்ல பால் தன் சுவை முதலியன கெட்டாற் போன்றதாகும். 1000

1. **வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுஉண்ணான்**
   **செத்தான் செயக்கிடந்தது இல்**.

ஒருவன் இடமெல்லாம் நிறைந்த பெரும் பொருளைச் சேர்த்து வைத்து அதை உண்டு நுகராமல் இறந்துபோனால் அவன் அந்தப் பொருளால் செய்ய முடிந்தது ஒன்றுமில்லை 1001

2. **பொருளான்ஆம் எல்லாம்என்று ஈயாது இவறும்**
   **மருளான்ஆம் மாணாப் பிறப்பு**.

பொருளால் எல்லாம் ஆகும் என்று பிறர்க்கும் ஒன்றும் கொடுக்காமல் இறுகப் பற்றிய மயக்கத்தால் சிறப்பில்லாத பிறவி உண்டாம். 1002

3. **ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்**
   **தோற்றம் நிலக்குப் பொறை**.

சேர்த்து வைப்பதையே விரும்பிப் பற்றுள்ளம் கொண்டு புகழை விரும்பாத மக்கள் பிறந்து வாழ்தல் நிலத்திற்குப் பாரமே ஆகும். 1003

**4. எச்சம்என்று என்எண்ணும் கொல்லோ ஒருவரால்**
**நச்சப் படாஅ தவன்?**

பிறர்க்கு உதவியாக வாழாத காரணத்தால் ஒருவராலும் விரும்பப்படாதவன், தான் இறந்த பிறகு எஞ்சி நிற்பது என்று எதனை எண்ணுவானோ? 1004

**5. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய**
**கோடிஉண் டாயினும் இல்.**

பிறர்க்குக் கொடுத்து உதவுவதும் தான் நுகர்வதும் இல்லாதவர்க்கு மேன்மேலும் பெருகிய பல கோடிப் பொருள் உண்டானாலும் பயன் இல்லை. 1005

**6. ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்குஒன்று**
**ஈதல் இயல்பிலா தான்.**

தானும் நுகராமல் தக்கவர்க்கு ஒன்று கொடுத்து உதவும் இயல்பும் இல்லாமல் வாழ்கின்றவன், தன்னிடமுள்ள பெருஞ் செல்வத்திற்கு ஒரு நோய் ஆவான். 1006

**7. அற்றார்க்குஒன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்**
**பெற்றாள் தமியள்மூத் தற்று.**

பொருள் இல்லாத வறியவர்க்கு ஒரு பொருள் கொடுத்து உதவாதவனுடைய செல்வம், மிக்க அழகு பெற்றவள் தனியாக வாழ்ந்து முதுமையுற்றாற் போன்றது. 1007

**8. நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்**
**நச்சு மரம்பழுத் தற்று.**

பிறர்க்கு உதவாத காரணத்தால் ஒருவராலும் விரும்பப்படாதவனுடைய செல்வம், ஊர்நடுவில் நச்சுமரம் பழுத்தாற் போன்றது. 1008

**9. அன்புஒரீஇத் தற்செற்று அறம்நோக்காது ஈட்டிய**
**ஒண்பொருள் கொள்வார் பிறர்.**

பிறரிடம் செலுத்தும் அன்பையும் விட்டுத் தன்னையும் வருத்தி அறத்தையும் போற்றாமல் சேர்த்து வைத்த பெரும் பொருளைப் பெற்று நுகர்பவர் மற்றவரே. 1009

10. **சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி**
**வறங்கூர்ந் தனையது உடைத்து**.

புகழ் பொருந்திய செல்வர் உற்ற சிறிய வறுமை உலகத்தைக் காக்கவல்ல மேகம் வறுமை மிகுந்தாற் போன்ற தன்மை உடையது. 1010

1. **கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்**
**நல்லவர் நாணுப் பிற**.

தகாத செயல் காரணமாக நாணுவதே நாணமாகும்; பெண்களுக்கு இயல்பான மற்ற நாணங்கள் வேறு வகையானவை. 1011

2. **ஊண்உடை எச்சம் உயிர்க்குஎல்லாம் வேறுஅல்ல**
**நாண்உடைமை மாந்தர் சிறப்பு**.

உணவும் உடையும் எஞ்சி நிற்கும் மற்றவையும் எல்லா உயிர்களுக்கும் பொதுவானவை ; மக்களின் சிறப்பியல்பாக விளங்குவது நாணுடைமையே ஆகும். 1012

3. **ஊனைக் குறித்த உயிரெல்லாம்: நாண்என்னும்**
**நன்மை குறித்தது சால்பு**.

எல்லா உயிர்களும் ஊனாலாகிய உடம்பை இருப்பிடமாகக் கொண்டவை; சால்பு என்பது, நாணம் என்று சொல்லபடும் நல்ல தன்மையை இருப்பிடமாகக் கொண்டது. 1013

4. **அணிஅன்றோ நாண்உடைமை சான்றோர்க்கு: அஃதுஇன்றேல்**
**பிணிஅன்றோ பீடு நடை?**

சான்றோர்க்கு நாணுடைமை அணிகலம் அன்றோ? அந்த அணிகலம் இல்லையானால், பெருமிதமாக நடக்கும் நடை ஒரு நோய் அன்றோ? 1014

5. **பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு**
**உறைபதி என்னும் உலகு**.

பிறர்க்கு வரும் பழிக்காகவும் தமக்கு வரும் பழிக்காவும் நாணுகின்றவர், நாணத்திற்கு உறைவிடமானவர் என்று உலகம் சொல்லும். 1015

6. **நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்**
   **பேணலர் மேலா யவர்**.

நாணமாகிய வேலியைத் தமக்குக் காவலாகச் செய்து கொள்ளாமல், மேலோர் பரந்த உலகில் வாழும் வாழ்க்கையை விரும்பி மேற்கொள்ளமாட்டார். 1016

7. **நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்**
   **நாண்துறவார் நாண்ஆள் பவர்**.

நாணத்தைத் தமக்குரிய பண்பாகக் கொள்பவர், நாணத்தால் உயிரை விடுவார்; உயிரைக் காக்கும் பொருட்டாக நாணத்தை விடமாட்டார். 1017

8. **பிறர்நாணத் தக்கது தான்நாணான் ஆயின்**
   **அறம்நாணத் தக்கது உடைத்து**.

ஒருவன் மற்றவர் நாணத்தக்க பழிக்குக் காரணமாக இருந்தும் தான் நாணாமலிருப்பானானால், அறம் நாணி அவனைக் கைவிடும் தன்மையுடையதாகும். 1018

9. **குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின்: நலஞ்சுடும்**
   **நாணின்மை நின்றக் கடை**.

ஒருவன் கொள்கை தவறினால், அத் தவறு அவனுடைய குடிப்பிறப்பைக் கெடுக்கும். நாணில்லாத தன்மை நிலை பெற்றால் நன்மை எல்லாவற்றையும் கெடுக்கும். 1019

10. **நாண்அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை**
    **நாணால் உயிர்மருட்டி யற்று**.

மனத்தில் நாணம் இல்லாதவர் உலகத்தில் இயங்குதல் மரத்தால் செய்த பாவையைக் கயிறு கொண்டு ஆட்டி உயிருள்ளதாக மயக்கினாற் போன்றது. 1020

1. **கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்**
**பெருமையின் பீடுஉடையது இல்**.

குடிப்பெருமைக்கு உரிய கடமையைச் செய்வதற்குச் சோர்வடைய மாட்டேன் என்று ஒருவன் முயலும் பெருமையைப் போல மேம்பாடானது வேறொன்றும் இல்லை. 1021

2. **ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்**
**நீள்வினையால் நீளும் குடி**.

முயற்சி, நிறைந்த அறிவு என்று சொல்லப்படும் இரண்டினையும் உடைய இடைவிடாத செயலால் ஒருவனுடைய குடி உயர்ந்து விளங்கும். 1022

3. **குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும்**.

என் குடியை உயரச்செய்வேன் என்று முயலும் ஒருவனுக்கு ஊழ், ஆடையை இறுகக் கட்டிக் கொண்டு தானே முன்வந்து துணை செய்யும். 1023

4. **சூழாமல் தானே முடிவுஎய்தும் தம்குடியைத்**
**தாழாது உஞற்று பவர்க்கு**.

தம் குடி உயர்வதற்கான செயலை விரைந்து முயன்று செய்வார்க்கு அவர் ஆராயாமலே அச்செயல் தானே நிறைவேறும். 1024

5. **குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்**
**சுற்றமாச் சுற்றும் உலகு**.

குற்றம் இல்லாதவனாய்க் குடி உயர்வதற்கான செயல் செய்து வாழ்கின்றவனை உலகத்தார் சுற்றமாக விரும்பிச் சூழ்ந்து கொள்வர். 1025

6. **நல்ஆண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த**
**இல்ஆண்மை ஆக்கிக் கொளல்**.

ஒருவனுக்கு நல்ல ஆண்மை என்று சொல்லப்படுவது தான் பிறந்த குடியை ஆளும் சிறப்பைத் தனக்கு உண்டாக்கிக் கொள்வதாகும். 1026

7. **அமர்அகத்து வன்கண்ணர் போலத் தமர்அகத்தும்**
**ஆற்றுவார் மேற்றே பொறை.**

போர்க்களத்தில் பலரிடையில் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் அஞ்சாத வீரரைப்போல், குடியில் பிறந்தவரிடையிலும் தாங்கவல்லவர்மேல்தான் பொறுப்பு உள்ளது. 1027

8. **குடிசெய்வார்க்கு இல்லை பருவம்: மடிசெய்து**
**மானம் கருதக் கெடும்.**

குடி உயர்வதற்கான செயல் செய்கின்றவர்க்கு உரியகாலம் என்று ஒன்று இல்லை. சோம்பல் கொண்டு தம் மானத்தைக் கருதுவாரானால் குடிப்பெருமை கெடும். 1028

9. **இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்றம் மறைப்பான் உடம்பு?**

தன் குடிக்கு வரக்கூடிய குற்றத்தை வராமல் நீக்க முயல்கின்ற ஒருவனுடைய உடம்பு துன்பத்திற்கே இருப்பிடமானதோ? 1029

10. **இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்துஊன்றும்**
**நல்ஆள் இலாத குடி.**

துன்பம் வந்தபோது உடனிருந்து தாங்கவல்ல நல்ல ஆள் இல்லாத குடி, துன்பமாகிய கோடரி அடியில் வெட்டி வீழ்த்த விழுந்துவிடும். 1030

1. **சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம்: அதனால்**
**உழந்தும் உழவே தலை.**

உலகம் பல தொழில் செய்து சுழன்றாலும் ஏர்த் தொழிலின் பின் நிற்கின்றது; அதனால் எவ்வளவு துன்புற்றாலும் உழவுத் தொழிலே சிறந்தது. 1031

2. **உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃது ஆற்றாது**
**எழுவாரை எல்லாம் பொறுத்து.**

உழவு செய்ய முடியாமல் உயிர் வாழ்கின்றவர் எல்லாரையும் தாங்குவதால், உழவு செய்கின்றவர் உலகத்தார்க்கு அச்சாணி போன்றவர். 1032

3. **உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்**.

உழவு செய்து அதனால் கிடைத்ததை உண்டு வாழ்கின்றவரே உரிமையோடு வாழ்கின்றவர்; மற்றவர் எல்லோரும் பிறரைத் தொழுது உண்டு பின் செல்கின்றவரே. 1033

4. **பலகுடை நீழலும் தன்குடைக்கீழ்க் காண்பர்**
**அலகுஉடை நீழ லவர்**.

நெல்வளம் உடைய தண்ணளி பொருந்திய உழவர், பல அரசரின் குடைநிழல்களையும் தம் குடையின் கீழ் காணவல்லவர் ஆவர். 1034

5. **இரவார் இரப்பார்க்குஒன்று ஈவர் கரவாது**
**கைசெய்துஊண் மாலை யவர்**.

கையால் தொழில்செய்து உணவு தேடி உண்ணும் இயல்புடைய தொழிலாளர் பிறரிடம்சென்று இரக்கமாட்டார்; தம்மிடம் இரந்தவர்க்கு ஒளிக்காமல் ஒரு பொருள் ஈவார். 1035

6. **உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேம்என் பார்க்கும் நிலை**.

உழவருடைய கை, தொழில் செய்யாமல் மடங்கியிருக்குமானால், விரும்புகின்ற எந்தப் பற்றையும் விட்டு விட்டோம் என்று கூறும் துறவிகளுக்கும் வாழ்வு இல்லை. 1036

7. **தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்துஎருவும்**
**வேண்டாது சாலப் படும்**.

ஒரு பலம் புழுதி கால்பலம் ஆகும்படி உழுது காயவிட்டால், ஒருபிடி எருவும் இட வேண்டாமல் அந்நிலத்தில் பயிர் செழித்து விளையும். 1037

8. **ஏரினும் நன்றால் எருஇடுதல்: கட்டபின்**
**நீரினும் நன்றுஅதன் காப்பு**.

ஏர் உழுதலைவிட எரு இடுதல் நல்லது; இந்த இரண்டும் செய்து களை நீக்கிய பிறகு, நீர் பாய்ச்சுதலை விடக் காவல் காத்தல் நல்லது. 1038

9. **செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும்**.

நிலத்திற்கு உரியவன் நிலத்தைச் சென்று பார்க்காமல் வாளா இருந்தால், அந்நிலம் அவனுடைய மனைவியைப் போல் வெறுத்து அவனோடு பிணங்கி விடும். 1039

10. **இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்**
**நிலம்என்னும் நல்லாள் நகும்**.

எம்மிடம் ஒரு பொருளும் இல்லை என்று எண்ணி வறுமையால் சோம்பியிருப்பவரைக் கண்டால், நிலமகள் தன்னுள் சிரிப்பாள். 1040

1. **இன்மையின் இன்னாதது யாதுஎனின் இன்மையின்**
**இன்மையே இன்னா தது**.

வறுமையைப் போல் துன்பமானது எது என்று கேட்டால், வறுமையைப் போல் துன்பமானது வறுமை ஒன்றே ஆகும், 1041

2. **இன்மை எனஒரு பாவி மறுமையும்**
**இம்மையும் இன்றி வரும்**.

வறுமை என்று சொல்லப்படும் பாவி ஒருவனை நெருங்கினால், அவனுக்கு மறுமையின்பமும் இம்மையின்பமும் இல்லாமற் போகும் நிலைமை வரும். 1042

3. **தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக**
**நல்குரவு என்னும் நசை**.

வறுமை என்று சொல்லப்படும் ஆசைநிலை ஒருவனைப் பற்றினால் அவனுடைய பழைமையான குடிப் பண்பையும் புகழையும் ஒருசேரக் கெடுக்கும். 1043

4. **இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த**
**சொற்பிறக்கும் சோர்வு தரும்**.

வறுமை என்பது, நல்ல குடியிற் பிறந்தவரிடத்திலும் இழிவு தரும் சொல் பிறப்பதற்குக் காரணமான சோர்வை உண்டாக்கிவிடும். 1044

5. **நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்**
**துன்பங்கள் சென்று படும்**.

வறுமை என்று சொல்லப்படும் துன்ப நிலையினுள் பலவகையாக வேறுபட்டுள்ள எல்லாத் துன்பங்களும் சென்று விளைந்திடும். 1045

6. **நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்**
**சொற்பொருள் சோர்வு படும்**.

நல்ல நூற் பொருளை நன்றாக உணர்ந்து எடுத்துச் சொன்ன போதிலும் வறியவர் சொன்ன சொற்பொருள் கேட்பார் இல்லாமல் பயன்படாமல் போகும். 1046

7. **அறம்சாரா நல்குரவு ஈன்றதா யானும்**
**பிறன்போல நோக்கப் படும்**.

அறத்தோடு பொருந்தாத வறுமை ஒருவனைச் சேர்ந்தால் பெற்ற தாயாலும் அவன் அயலனைப் போல் புறக்கணித்துப் பார்க்கப்படுவான். 1047

8. **இன்றும் வருவது கொல்லோ நெருநலும்**
**கொன்றது போலும் நிரப்பு**.

நேற்றும் கொலை செய்ததுபோல் துன்புறுத்திய வறுமை இன்றும் என்னிடம் வருமோ! (என்று வறியவன் நாள்தோறும் கலங்கி வருந்துவான்,) 1048

9. **நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்**
**யாதுஒன்றும் கண்பாடு அரிது**.

ஒருவன் நெருப்பினுள் இருந்து தூங்குதலும் முடியும்; ஆனால் வறுமை நிலையில் எவ்வகையாலும் கண்மூடித் தூங்குதல் அரிது. 1049

10. **துப்புரவு இல்லார் துவரத் துறவாமை**
**உப்பிற்கும் காடிக்கும் கூற்று**.

நுகரும் பொருள் இல்லாத வறியவர் முற்றுந் துறக்கக் கூடியவராக இருந்தும் துறக்காத காரணம், உப்புக்கும் கஞ்சிக்கும் எமனாக இருப்பதே ஆகும். 1050

1. **இரக்க இரத்தக்கார்க் காணின்: கரப்பின்**
**அவர்பழி தம்பழி அன்று**.

இரந்து கேட்கத் தக்கவரைக் கண்டால் அவரிடம் இரக்க வேண்டும்; அவர் இல்லையென்று ஒளிப்பாரானால் அது அவர்க்குப் பழி; தமக்குப் பழி அன்று. 1051

2. **இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை**
**துன்பம் உறாஅ வரின்**.

இரந்து கேட்ட பொருள்கள் துன்பமுறாமல் கிடைக்குமானால், அவ்வாறு இரத்தலும் இன்பம் என்று சொல்லத் தக்கதாகும். 1052

3. **கரப்புஇலா நெஞ்சின் கடன்அறிவார் முன்நின்று**
**இரப்பும்ஓர் ஏஎர் உடைத்து**.

ஒளிப்பு இல்லாத நெஞ்சும் கடமையுணர்ச்சியும் உள்ளவரின் முன்னே நின்று இரந்து பொருள் கேட்பதும் ஓர் அழகு உடையதாகும். 1053

4. **இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்**
**கனவிலும் தேற்றாதார் மாட்டு**.

உள்ளதை மறைத்துக் கூறும் தன்மையைக் கனவிலும் அறியாதவனிடத்தில் இரந்து கேட்பதும் பிறர்க்குக் கொடுப்பதே போன்ற சிறப்புடையது. 1054

5. **கரப்பிலார் வையகத்து உண்மையால் கண்நின்று**
**இரப்பவர் மேற்கொள் வது**.

ஒருவர்முன் நின்று இரப்பவர் அந்த இரத்தலை மேற்கொள்வது, உள்ளதை இல்லை என்று, ஒளித்துக் கூறாத நன்மக்கள் உலகத்தில் இருப்பதால்தான். 1055

6. **கரப்புஇடும்பை இல்லாரைக் காணின் நிரப்புஇடும்பை**
**எல்லாம் ஒருங்கு கெடும்**.

உள்ளதை ஒளிக்கும் துன்ப நிலை இல்லாதவரைக் கண்டால், இரப்பவரின் வறுமைத்துன்பம் எல்லாம் ஒருசேரக் கெடும். 1056

7. **இகழ்ந்துஎள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துஉள்ளம்**
**உள்ளுள் உவப்பது உடைத்து**.

இகழ்ந்து எள்ளாமல் பொருள் கொடுப்பவரைக் கண்டால், இரப்பவரின் உள்ளம் மகிழ்ந்து உள்ளுக்குள்ளேயே உவகை அடையும் தன்மையுடையதாகும். 1057

8. **இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்**
**மரப்பாவை சென்றுவந் தற்று**.

இரப்பவர் இல்லையானால், இப் பெரிய உலகின் இயக்கம் மரத்தால் செய்த பாவை கயிற்றினால் ஆட்டப்பட்டுச் சென்று வந்தாற் போன்றதாகும். 1058

9. **ஈவார்கண் என்உண்டாம் தோற்றம் இரந்துகோள்**
**மேவார் இலாஅக் கடை?**

பொருள் இல்லை என்று இரந்து அதைப் பெற்றுக் கொள்ள விரும்புவோர் இல்லாதபோது, பொருள் கொடுப்பவரிடத்தில் என்ன புகழ் உண்டாகும்? 1059

10. **இரப்பான் வெகுளாமை வேண்டும்: நிரப்புஇடும்பை**
**தானேயும் சாலும் கரி**.

இரப்பவன் எவரிடத்திலும் சினம் கொள்ளாதிருக்க வேண்டும்; அவன் அடைந்துள்ள வறுமைத் துன்பமே அவனுக்கு அறிவு புகட்டும் சான்றாக அமையும். 1060

1. **கரவாது உவந்துஈயும் கண்ணன்னார் கண்ணும்**
**இரவாமை கோடி யுறும்**.

உள்ளதை ஒளிக்காமல் உள்ளம் மகிழ்ந்து கொடுக்கும் கண்போல் சிறந்தவரிடத்திலும் சென்று இரவாமலிருப்பதே கோடி மடங்கு நல்லது. 1061

2. **இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து**
**கெடுக உலகுஇயற்றி யான்**.

உலகத்தைப் படைத்தவன் உலகில் சிலர் இரந்தும் உயிர்வாழுமாறு ஏற்படுத்தியிருந்தால், அவன் இரப்பவரைப் போல் எங்கும் அலைந்து கெடுவானாக! 1062

3. **இன்மை இடும்பை இரந்துதீர் வாம்என்னும்**
**வன்மையின் வன்பாட்டது இல்**.

வறுமைத் துன்பத்தை இரப்பதன் வாயிலாகத் தீர்ப்போம் என்று கருதி முயற்சியைக் கைவிட்ட வன்மையைப் போல் வன்மையானது வேறு இல்லை. 1063

4. **இடம்எல்லாம் கொள்ளாத் தகைத்தே இடம்இல்லாக்**
**காலும் இரவுஒல்லாச் சால்பு**.

வாழ வழி இல்லாத போதும் இரந்துகேட்க உடன்படாத சால்பு, உலகத்தில் இடமெல்லாம் கொள்ளாத அவ்வளவு பெருமையுடையதாகும். 1064

5. **தெள்நீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்தது**
**உண்ணலின் ஊங்குஇனியது இல்**.

தெளிந்த நீர்போல் சமைத்த கூழே ஆனாலும், முயற்சியால் கிடைத்ததை உண்பதைவிட இனிமையானது வேறொன்றும் இல்லை. 1065

6. **ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு**
**இரவின் இளிவந்தது இல்**.

பசுவிற்கு நீர்வேண்டும் என்று அறம் நோக்கி இரந்து கேட்டாலும் அந்த இரத்தலை விட நாவிற்கு இழிவானது மற்றொன்று இல்லை. 1066

7. **இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்**
**கரப்பார் இரவன்மின் என்று!**

இரந்து கேட்பதானால் உள்ளதை ஒளிப்பவரிடத்தில் சென்று இரக்கவேண்டாம் என்று இரப்பவர் எல்லோரையும் இரந்து வேண்டுகின்றேன். 1067

8. **இரவுஎன்னும் ஏமாப்புஇல் தோணி கரவுஎன்னும்**
**பார்தாக்கப் பக்கு விடும்.**

இரத்தல் என்னும் காவல் இல்லாத மரக்கலம் உள்ளதை ஒளித்துவைக்கும் தன்மையாகிய வன்னிலம் தாக்கினால் உடைந்துவிடும். 1068

9. **இரவுஉள்ள உள்ளம் உருகும்: கரவுஉள்ள**
**உள்ளதூஉம் இன்றிக் கெடும்.**

இரத்தலின் கொடுமையை நினைந்தால் உள்ளம் கரைந்து உருகும்; உள்ளதை ஒளிக்கும் கொடுமையை நினைந்தால், உருகுமளவும் இல்லாமல் அழியும். 1069

10. **கரப்பவர்க்கு யாங்குஒளிக்கும் கொல்லோ இரப்பவர்**
**சொல்லாடப் போஒம் உயிர்.**

இரப்பவர்'இல்லை' என்று சொல்கின்ற அளவிலேயே உயிர் போகின்றதே; உள்ளதை இல்லை என்று ஒளிப்பவர்க்கு உயிர் எங்கு ஒளிந்திருக்குமோ? 1070

1. **மக்களே போல்வர் கயவர்: அவரன்ன**
**ஒப்பாரி யாம்கண்டது இல்.**

மக்களே போல் இருப்பர் கயவர்; அவர் மக்களை ஒத்திருப்பது போன்ற ஒப்புமை வேறு எந்த இருவகைப் பொருள்களிடத்திலும் யாம் கண்டதில்லை. 1071

2. **நன்றுஅறி வாரின் கயவர் திருஉடையர்:**
**நெஞ்சத்து அவலம் இலர்.**

நன்மை அறிந்தவரைவிடக் கயவரே நல்ல பேறு உடையவர்; ஏன் என்றால், கயவர் தம் நெஞ்சில் எதைப் பற்றியும் கவலை இல்லாதவர். 1072

3. **தேவர் அனையர் கயவர் அவரும்தாம்**
**மேவன செய்தொழுக லான்.**

கயவரும் தேவரைப் போல் தாம் விரும்புகின்றவைகளைச் செய்து மனம் போன போக்கில் நடத்தலால், கயவர் தேவரைப் போன்றவர். 1073

4. **அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்**
**மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்.**

கீழ்மக்கள் தமக்குக் கீழ்ப்பட்டவராய் நடப்பவரைக் கண்டால், அவரைவிடத் தாம் மேம்பாடு உடையவராய் இறுமாப்படைவர். 1074

5. **அச்சமே கீழ்களது ஆசாரம்: எச்சம்**
**அவாஉண்டேல் உண்டாம் சிறிது.**

கீழ்மக்களின் ஆசாரத்திற்குக் காரணமாக இருப்பது அச்சமே; எஞ்சியவற்றில், அவா உண்டானால் அதனாலும் சிறிதளவு ஆசாரம் உண்டாகும். 1075

6. **அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட**
**மறைபிறர்க்கு உய்த்துஉரைக்க லான்.**

கயவர், தாம் கேட்டறிந்த மறைபொருளைப் பிறர்க்கு வலியக்கொண்டுபோய்ச் சொல்லுவதால், அறையப்படும் பறை போன்றவர். 1076

7. **ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுஉடைக்கும்**
**கூன்கையர் அல்லா தவர்க்கு.**

கயவர் தம் கன்னத்தை இடித்து உடைக்கும்படி வளைந்த கை உடையவரல்லாத மற்றவர்க்கு உண்ட எச்சில் கையையும் உதறமாட்டார். 1077

8. **சொல்லப் பயன்படுவர் சான்றோர்: கரும்புபோல்**
**கொல்லப் பயன்படும் கீழ்.**

அணுகிக்குறை சொல்லிய அளவிலேயே சான்றோர் பயன்படுவர்; கரும்புபோல் அழித்துப் பிழிந்தால்தான் கீழ்மக்கள் பயன்படுவர். 1078

9. **உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்**
**வடுக்காண வற்றாகும் கீழ்.**

கீழ்மகன் பிறர் உடுப்பதையும் உண்பதையும் கண்டால் அவர்மேல் பொறாமைகொண்டு, வேண்டும் என்றே குற்றம் காண வல்லவனாவான். 1079

10. **எற்றிற்கு உரியர் கயவர்ஒன்று உற்றக்கால்**
**விற்றற்கு உரியர் விரைந்து.**

கயவர் எதற்கு உரியவர்? ஒரு துன்பம் வந்தடைந்த காலத்தில் அதற்காகத் தம்மைப் பிறர்க்கு விலையாக விற்றுவிடுவதற்கு உரியவர் ஆவர். 1080

1. **அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு.**

தெய்வப் பெண்ணோ! மயிலோ? கனமான குழை அணிந்த மனிதப் பெண்ணோ? என் நெஞ்சம் மயங்குகின்றதே! 1081

2. **நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்குஅணங்கு**
**தானைக்கொண் டன்னது உடைத்து.**

நோக்கிய அவள் பார்வைக்கு எதிரே நோக்குதல் தானே தாக்கி வருத்தும் அணங்கு, ஒரு சேனையயும் கொண்டு வந்து தாக்கினாற் போன்றது. 1082

3. **பண்டுஅறியேன் கூற்றுஎன் பதனை: இனிஅறிந்தேன்**
**பெண்தகையால் பேரமர்க் கட்டு.**

எமன் என்று சொல்லப்படுவதை முன்பு அறியேன்; இப்பொழுது கண்டறிந்தேன்; அது பெண் தன்மையுடன் போர் செய்யும் பெரிய கண்களை உடையது. 1083

4. **கண்டார் உயிருண்ணும் தோற்றத்தால் பெண்தகைப்**
**பேதைக்கு அமர்த்தன கண்**.

பெண்தன்மை உடைய இந்தப் பேதைக்குக் கண்கள் கண்டவரின் உயிரை உண்ணும் தோற்றத்தோடு கூடி ஒன்றோடொன்று மாறுபட்டிருந்தன. 1084

5. **கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்**
**நோக்கம்இம் மூன்றும் உடைத்து**.

எமனோ? கண்ணோ? பெண்மானோ? இந்த இளம் பெண்ணின் பார்வை இந்த மூன்றன் தன்மையும் உடையதாக இருக்கின்றது. 1085

6. **கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்குஅஞர்**
**செய்யல மன்இவள் கண்**.

வளைந்த புருவங்கள் கோணாமல் நேராக இருந்து மறைக்குமானால், இவளுடைய கண்கள் யான் நடுங்கும்படியான துன்பத்தைச் செய்யமாட்டா. 1086

7. **கடாஅக் களிற்றின்மேல் கண்படாம் மாதர்**
**படாஅ முலைமேல் துகில்**.

மாதருடைய சாயாத கொங்கைகளின்மேல் அணிந்த ஆடை, மதம் பிடித்த ஆண்யானையின்மேல் இட்ட முகபடாம் போன்றது. 1087

8. **ஒள்நுதற்கு ஓஒ உடைந்ததே ஞாட்பினுள்**
**நண்ணாரும் உட்கும்என் பீடு**.

போரக்களத்தில் பகைவரும் அஞ்சுதற்குக் காரணமான என் வலிமை, இவளுடைய ஒளி பொருந்திய நெற்றிக்குத் தோற்று அழிந்ததே! 1088

9. **பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு**
**அணிஎவனோ ஏதில தந்து**.

பெண்மானைப் போன்ற இளமைப் பார்வையும் நாணமும் உடைய இவளுக்கு, ஒரு தொடர்பும் இல்லாத அணிகளைச் செய்து அணிவது ஏனோ? 1089

10. **உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்**
**கண்டார் மகிழ்செய்தல் இன்று**.

கள், தன்னை உண்டவரிடத்தில் அல்லாமல் காமத்தைப் போல் தன்னைக் கண்டவரிடத்தில் மயக்கத்தை உண்டாக்குவதில்லை 1090

1. **இருநோக்கு இவள்உண்கண் உள்ளது: ஒருநோக்கு**
**நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து**.

இவளுடைய மை தீட்டிய கண்களில் உள்ளது இருவகைப் பட்ட நோக்கமாகும்; அவற்றுள் ஒரு நோக்கம் நோய் செய்யும் நோக்கம்; மற்றொன்று அந் நோய்க்கு மருந்தாகும். 1091

2. **கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்**
**செம்பாகம் அன்று பெரிது**.

கண்ணால் என்னை நோக்கிக் களவு கொள்கின்ற சுருங்கிய பார்வை காமத்தில் நேர்பாதி அன்று; அதைவிடப் பெரிய பகுதியாகும். 1092

3. **நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்**
**யாப்பினுள் அட்டிய நீர்**.

என்னை நோக்கினாள்; யான் கண்டதும், நோக்கித் தலைகுனிந்தாள்; அது அவள் வளர்க்கும் அன்பினுள் வார்க்கின்ற நீராகும். 1093

4. **யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்**
**தான்நோக்கி மெல்ல நகும்**.

யான் நோக்கும்போது அவள் நிலத்தை நோக்குவாள்; யான் நோக்காதபோது அவள் என்னை நோக்கி மெல்லத் தனக்குள் மகிழ்வாள். 1094

5. **குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்**
**சிறக்கணித்தாள் போல நகும்**.

என்னை நேராகக் குறித்துப் பார்க்காத அத்தன்மையே அல்லாமல், ஒரு கண்ணைச் சுருக்கினவள்போல் என்னைப் பார்த்துத் தனக்குள் மகிழ்வாள். 1095

6. **உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்**
**ஒல்லை உணரப் படும்**.

புறத்தே அயலார்போல் அன்பில்லாத சொற்களைச் சொன்னாலும் அகத்தே பகையில்லாதவரின் சொல் என்பது விரைவில் அறியப்படும். 1096

7. **செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்**
**உறாஅர்போன்று உற்றார் குறிப்பு**.

பகைகொள்ளாத கடுஞ்சொல்லும், பகைவர்போல் பார்க்கும் பார்வையும் புறத்தே அயலார்போல் இருந்து அகத்தே அன்பு கொண்டவரின் குறிப்பாகும். 1097

8. **அசைஇயற்கு உண்டுஆண்டுஓர் ஏஎர்யான் நோக்கப்**
**பசையினள் பைய நகும்**.

யான் நோக்கும்போது அதற்காக அன்பு கொண்டவளாய் மெல்லச் சிரிப்பாள்; அசையும் மெல்லிய இயல்பை உடைய அவளுக்கு அப்போது ஓர் அழகு உள்ளது. 1098

9. **ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்**
**காதலார் கண்ணே யுள**.

புறத்தே அயலார்போல் அன்பில்லாத பொதுநோக்கம் கொண்டு பார்த்தல், அகத்தே காதல் கொண்டவரிடம் உள்ள ஓர் இயல்பாகும். 1099

10. **கண்ணோடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல**.

கண்களோடு கண்கள் நோக்கால் ஒத்திருந்து அன்பு செய்யுமானால் வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல்லாமற் போகின்றன. 1100

1. **கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்**
   **ஒண்டொடி கண்ணே உள**.

கண்டும் கேட்டும் உண்டும் முகர்ந்தும் உற்றும் அறிகின்ற ஐந்து புலன்களாலாகிய இன்பங்களும் ஒளி பொருந்திய வளையல் அணிந்த இவளிடத்தில் உள்ளன. 1101

2. **பிணிக்கு மருந்து பிறமன்: அணியிழை**
   **தன்நோய்க்குத் தானே மருந்து**.

நோய்களுக்கு மருந்து வேறு பொருள்களாக இருக்கின்றன; ஆனால், அணிகலன் அணிந்த இவளால் வளர்ந்த நோய்க்கு இவளே மருந்தாக இருக்கின்றாள். 1102

3. **தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்**
   **தாமரைக் கண்ணான் உலகு**.

தாமரைக் கண்ணனுடைய உலகம், தாம் விரும்பும் காதலியரின் மெல்லிய தோள்களில் துயிலும் துயில்போல் இனிமை உடையதோ? 1103

4. **நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும்**
   **தீயாண்டுப் பெற்றாள் இவள்?**

நீங்கினால் சுடுகின்றது; அணுகினால் குளிர்ச்சியாக இருக்கின்றது; இத்தகைய புதுமையான தீயை இவள் எவ்விடத்திலிருந்து பெற்றாள்? 1104

5. **வேட்ட பொழுதின் அவைஅவை போலுமே**
   **தோட்டார் கதுப்பினாள் தோள்**.

மலரணிந்த கூந்தலை உடைய இவளுடைய தோள்கள் விருப்பமான பொருள்களை நினைந்து விரும்பிய பொழுது அவ்வப்பொருள்களைப் போலவே இன்பம் செய்கின்றன. 1105

6. **உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு**
**அமிழ்தின் இயன்றன தோள்**.

பொருந்தும்போதெல்லாம் உயிர் தளிர்க்கும்படியாகத் தீண்டுதலால் இவளுக்குத் தோள்கள் அமிழ்தத்தால் செய்யப்பட்டிருக்க வேண்டும். 1106

7. **தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்**
**அம்மா அரிவை முயக்கு**.

அழகிய மாமை நிறம் உடைய இவளுடைய தழுவுதல், தம்முடைய வீட்டிலிருந்து தாம் ஈட்டிய பொருளைப் பகுத்துக் கொடுத்து உண்டாற் போன்றது. 1107

8. **வீழும் இருவர்க்கு இனிதே வளிஇடை**
**போழப் படாஅ முயக்கு**.

காற்று இடையறுத்துச் செல்லாதபடி தழுவும் தழுவுதல், ஒருவரை ஒருவர் விரும்பிய காதலர் இருவர்க்கும் இனிமை உடையதாகும். 1108

9. **ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்**
**கூடியார் பெற்ற பயன்**.

ஊடுதல், ஊடலை உணர்ந்து விடுதல், அதன்பின் கூடுதல் ஆகிய இவை காதல் வாழ்வு நிறைவேறப்பெற்றவர் பெற்ற பயன்களாகும். 1109

10. **அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்**
**செறிதோறும் சேயிழை மாட்டு**.

செந்நிற அணிகலன்களை அணிந்த இவளிடம் பொருந்துந்தோறும் காதல் உணர்தல், நூற்பொருள்களை அறிய அறிய அறியாமை கண்டாற் போன்றது. 1110

1. **நல்நீரை வாழி அனிச்சமே நின்னினும்**
**மெல்நீரள் யாம்வீழ் பவள்**.

அனிச்சப்பூவே! நல்ல மென்மைத்தன்மை பெற்றிருக்கின்றாய்! நீ வாழ்க! யாம் விரும்பும் காதலி உன்னைவிட மெல்லிய தன்மை உடையவள். 1111

2. **மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்**
**பலர்காணும் பூவொக்கும் என்று**.

நெஞ்சமே! இவளுடைய கண்கள் பலரும் காண்கின்ற மலர்களை ஒத்திருக்கின்றன என்று நினைத்து ஒத்த மலர்களைக் கண்டால் நீ மயங்குகின்றாய்! 1112

3. **முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்**
**வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு**.

மூங்கில் போன்ற தோளை உடைய இவளுக்குத் தளிரே மேனி; முத்தே பல்; இயற்கை மணமே மணம்; வேலே மை உண்ட கண். 1113

4. **காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்**
**மாணிழை கண்ஒவ்வேம் என்று**.

குவளை மலர்கள் காணும் தன்மைபெற்றுக் கண்டால், "இவளுடைய கண்களுக்கு யாம் ஒப்பாகவில்லையே" என்று தலைகவிழ்ந்து நிலத்தை நோக்கும். 1114

5. **அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு**
**நல்ல படாஅ பறை**.

அவள் தன் மென்மை அறியாமல் அனிச்ச மலர்களைக் காம்பு களையாமல் சூடினாள்; அவற்றால் நொந்து வருந்தும் அவளுடைய இடைக்குப் பறைகள் நல்லனவாய் ஒலியா. 1115

6. **மதியும் மடந்தை முகனும் அறியா**
**பதியின் கலங்கிய மீன்**.

விண்மீன்கள் திங்களையும் இவளுடைய முகத்தையும் வேறுபாடு கண்டு அறியமுடியாமல் தம் நிலையில் நிற்காமல் கலங்கித் திரிகின்றன. 1116

7. **அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல**
**மறுஉண்டோ மாதர் முகத்து**.

குறைந்த இடமெல்லாம் படிப்படியாக நிறைந்து விளங்குகின்ற திங்களிடம் உள்ளதுபோல் இந்த மாதர் முகத்தில் களங்கம் உண்டோ? இல்லையே! 1117

8. **மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்**
   **காதலை வாழி மதி** !

திங்களே! இம் மாதரின் முகத்தைப்போல் ஒளி வீச உன்னால் முடியுமானால், நீயும் இவள்போல் என் காதலுக்கு உரிமை பெறுவாய். 1118

9. **மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி யாயின்**
   **பலர்காணத் தோன்றல் மதி** !

திங்களே! மலர்போன்ற கண்களை உடைய இவளுடைய முகத்தை ஒத்திருக்க விரும்பினால், நீ பலரும் காணும்படியாகத் தோன்றாதே. 1119

10. **அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
    **அடிக்கு நெருஞ்சிப் பழம்**.

அனிச்ச மலரும் அன்னப்பறவையின் இறகும் ஆகிய இவைகள் மாதரின் மெல்லிய அடிகளுக்கு நெருஞ்சிமுள் போன்றவை. 1120

1. **பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி**
   **வால்எயிறு ஊறிய நீர்**.

மென்மையான மொழிகளைப் பேசுகின்ற இவளுடைய தூய பற்களில் ஊறிய நீர், பாலுடன் தேனைக் கலந்தாற் போன்றதாகும். 1121

2. **உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன**
   **மடந்தையொடு எம்மிடை நட்பு**.

இம்மடந்தையோடு எம்மிடையே உள்ள நட்பு முறைகள், உடம்போடு உயிர்க்கு உள்ள தொடர்புகள் எத்தன்மையானவையோ அத்தன்மையானவை. 1122

3. **கருமணியில் பாவாய்நீ போதாய்:யாம் வீழும்**
**திருநுதற்கு இல்லை இடம்**.

என் கண்ணின் கருமணியில் உள்ள பாவையே! நீ போய்விடும்! யாம் விரும்புகின்ற இவளுக்கு என் கண்ணில் இருக்க இடம் இல்லையே! 1123

4. **வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை சாதல்**
**அதற்குஅன்னள் நீங்கும் இடத்து**.

ஆராய்ந்த அணிகலன்களை அணிந்த இவள் கூடும் போது உயிர்க்கு வாழ்வு போன்றவள்; பிரியும் போது உயிர்க்குச் சாவு போன்றவள். 1124

5. **உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்**
**ஒள்ளமர்க் கண்ணாள் குணம்**.

போர் செய்யும் கண்களை உடைய இவளுடைய பண்புகளை யான் மறந்தால் பிறகு நினைக்க முடியும்; ஆனால், ஒருபோதும் மறந்ததில்லையே! 1125

6. **கண்உள்ளின் போகார்**: **இமைப்பின் பருவரார்**:
**நுண்ணியர்எங் காத லவர்**.

எம் காதலர் எம் கண்ணுள்ளிருந்து போகமாட்டார்; கண்ணை மூடி இமைத்தாலும் அதனால் வருந்தமாட்டார்; அவர் அவ்வளவு நுட்பமானவர். 1126

7. **கண்உள்ளார் காத லவராகக் கண்ணும்**
**எழுதேம் கரப்பாக்கு அறிந்து**.

எம் காதலர் கண்ணினுள் இருக்கின்றார், ஆகையால், மை எழுதினால் அவர் மறைவதை எண்ணிக் கண்ணுக்கு மையும் எழுதமாட்டோம்! 1127

8. **நெஞ்சத்தார் காத லவராக வெய்துஉண்டல்**
**அஞ்சுதும் வேபாக்கு அறிந்து**.

எம் காதலர் நெஞ்சினுள் இருக்கின்றார்; ஆகையால் சூடான பொருளை உண்டால் அவர் வெப்பமுறுதலை எண்ணிச் சூடான பொருளை உண்ண அஞ்சுகின்றோம் 1128

9. **இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே**
**ஏதிலர் என்னும்இவ் வூர்**.

கண் இமைத்தால் காதலர் மறைந்துபோதலை அறிகின்றேன். அவ்வளவிற்கே இந்த ஊரார் அவரை அன்பில்லாதவர் என்று சொல்லுவர். 1129

10. **உவந்துஉறைவர் உள்ளத்துள் என்றும்: இகந்துஉறைவர்**
**ஏதிலர் என்னும்இவ் வூர்**.

காதலர் எப்போதும் என் உள்ளத்தில் மகிழ்ந்து வாழ்கின்றார்; ஆனால் அதை அறியாமல் பிரிந்து வாழ்கின்றார்,`அன்பில்லாதவர்' என்று இந்த ஊரார் அவரைப் பழிப்பர். 1130

1. **காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்**
**மடல்அல்லது இல்லை வலி**.

காமத்தால் துன்புற்று (காதலியின் அன்பு பெறாமல்) வருந்தினவர்க்குக் காவல் மடலூர்தல் அல்லாமல் வலிமையான துணை வேறொன்றும் இல்லை. 1131

2. **நோனா உடம்பும் உயிரும் மடல்ஏறும்**
**நாணினை நீக்கி நிறுத்து**.

(காதலியன் பிரிவால் ஆகிய துன்பத்தைப்) பொறுக்காத என் உடம்பும் உயிரும், நாணத்தை நீக்கி நிறுத்திவிட்டு மடலூரத் துணிந்தன. 1132

3. **நாணொடு நல்லாண்மை பண்டுஉடையேன் இன்றுஉடையேன்**
**காமுற்றார் ஏறும் மடல்**.

நாணமும் நல்ல ஆண்மையும் முன்பு பெற்றிருந்தேன்; (காதலியைப் பிரிந்து வருந்துகின்ற) இப்போது காமம் மிக்கவர் ஏறும் மடலையே உடையேன். 1133

4. **காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு**
**நல்லாண்மை என்னும் புணை**.

நாணமும் நல்ல ஆண்மையுமாகிய தோணிகளைக் காமம் என்னும் கடுமையான வெள்ளம் அடித்துக் கொண்டு போய் விடுகின்றது. 1134

5. **தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு**
   **மாலை உழக்கும் துயர்**.

மடலேறுதலோடு மாலைக்காலத்தில் வருந்தும் துயரத்தை மாலைபோல் தொடர்ந்த சிறு வளையல் அணிந்த காதலி எனக்குத் தந்தாள். 1135

6. **மடல்ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற**
   **படல்ஒல்லா பேதைக்குஎன் கண்**.

மடலூர்தலைப் பற்றி நள்ளிரவிலும் உறுதியாக நினைக்கின்றேன்; காதலியின் பிரிவின் காரணமாக என் கண்கள் உறங்காமல் இருக்கின்றன. 1136

7. **கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்**
   **பெண்ணின் பெருந்தக்கது இல்**.

கடல்போன்ற காமநோயால் வருந்தியும், மடலேறாமல் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டிருக்கும் பெண் பிறப்பைப் போல் பெருமையுடைய பிறவி இல்லை. 1137

8. **நிறைஅரியர் மன்அளியர் என்னாது காமம்**
   **மறையிறந்து மன்று படும்**.

இவர் நெஞ்சை நிறுத்தும் நிறை இல்லாதவர், மிகவும் இரங்கத்தக்கவர் என்று கருதாமல் காமம் மறைந்திருத்தலைக் கடந்து மன்றத்திலும் வெளிப்படுகின்றதே! 1138

9. **அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்**
   **மறுகின் மறுகும் மருண்டு**.

அமைதியாய் இருந்ததால் எல்லாரும் அறியவில்லை என்று கருதி என்னுடைய காமம் தெருவில் பரவி மயங்கிச் சுழல்கின்றது. 1139

10. **யாங்கண்ணின் காண நகுப அறிவுஇல்லார்**
**யாம்பட்ட தாம்படா வாறு**.

யாம் பட்ட துன்பங்களைத் தாம் படாமையால், அறிவில்லாதவர் யாம் கண்ணால் காணுமாறு எம் எதிரில் எம்மைக் கண்டு நகைக்கின்றனர். 1140

1. **அலர்எழ ஆருயிர் நிற்கும் அதனைப்**
**பலர்அறியார் பாக்கியத் தால்**.

(எம் காதலைப் பற்றி) அலர் எழுவதால் அரிய உயிர் போகாமல் நிற்கின்றது; எம் நல்வினைப் பயனால் அதைப் பலரும் அறியாமலிருக்கின்றனர். 1141

2. **மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது**
**அலர்எமக்கு ஈந்ததுஇவ் வூர்**.

மலர்போன்ற கண்ணை உடைய இவளுடைய அருமை அறியாமல், இந்த ஊரார் எளியவளாகக் கருதி அலர் கூறி எமக்கு உதவி செய்தனர். 1142

3. **உறாஅதோ ஊரறிந்த கௌவை? அதனைப்**
**பெறாஅது பெற்றன்ன நீர்த்து**.

ஊரார் எல்லாரும் அறிந்துள்ள அலர் நமக்குப் பொருந்தாதோ? (பொருந்தும்). அந்த அலர் பெறமுடியாமலிருந்து பெற்றாற்போன்ற நன்மை உடையதாக இருக்கின்றது. 1143

4. **கவ்வையால் கவ்விது காமம்**: **அதுஇன்றேல்**
**தவ்வென்னும் தன்மை இழந்து**.

எம் காமம் ஊரார் சொல்லுகின்ற அலரால் வளர்வதாயிற்று; அந்த அலர் இல்லையானால் அது தன் தன்மை இழந்து சுருங்கிப் போய்விடும். 1144

5. **களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்**
**வெளிப்படுந் தோறும் இனிது**.

காமம் அலரால் வெளிப்பட வெளிப்பட இனியதாதல், கள்ளுண்பவர் கள்ளுண்டு மயங்க மயங்க அக்கள்ளுண்பதையே விரும்பினாற் போன்றது. 1145

6. **கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்**
**திங்களைப் பாம்புகொண் டற்று**.

காதலரைக் கண்டது ஒருநாள்தான்; அதனால் உண்டாகிய அலரோ, திங்களைப் பாம்பு கொண்டசெய்தி போல் எங்கும் பரந்து விட்டது. 1146

7. **ஊரவர் கௌவை எருஆக அன்னைசொல்**
**நீராக நீளும்இந் நோய்**.

இந்தக் காமநோய் ஊராரின் அலர் தூற்றலே எருவாகவும் அன்னை கடிந்து சொல்லும் கடுஞ்சொல்லே நீராகவும் கொண்டு செழித்து வளர்கின்றது. 1147

8. **நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்**
**காமம் நுதுப்பேம் எனல்**.

அலர் கூறுவதால் காமத்தை அடக்குவோம் என்று முயலுதல், நெய்யால் நெருப்பை அவிப்போம் என்று முயல்வதைப் போன்றது. 1148

9. **அலர்நாண ஒல்வதோ அஞ்சல்ஓம்பு என்றார்**
**பலர்நாண நீத்தக் கடை**.

அஞ்சவேண்டா என்று அன்று உறுதி கூறியவர் இன்று பலரும் நாணும்படியாக நம்மைவிட்டுப் பிரிந்தால், அதனால் அலருக்கு நாணியிருக்க முடியுமோ? 1149

10. **தாம்வேண்டின் நல்குவர் காதலர்: யாம்வேண்டும்**
**கௌவை எடுக்கும்இவ் வூர்**.

யாம் விரும்புகின்ற அலரை இவ்வூரார் எடுத்துக் கூறுகின்றனர். அதனால் இனிமேல் காதலர் விரும்பினால் விரும்பியவாறு அதனை உதவுவார். 1150

1. **செல்லாமை உண்டேல் எனக்குஉரை மற்றுநின்**
**வல்வரவு வாழ்வார்க்கு உரை**.

பிரிந்து செல்லாத நிலைமையாக இருந்தால் எனக்குச் சொல்; பிரிந்து சென்று விரைந்து வருதலைப் பற்றியானால் அதுவரையில் உயிர் வாழ வல்லவர்க்குச் சொல், 1151

2. **இன்கண் உடைத்தவர் பார்வல்: பிரிவுஅஞ்சும்**
   **புன்கண் உடைத்தால் புணர்வு.**

அவருடைய பார்வை முன்பு இன்பம் உடையதாக இருந்தது; இப்போது அவருடைய கூட்டம் பிரிவுக்கு அஞ்சுகின்ற துன்பம் உடையதாக இருக்கின்றது. 1152

3. **அரிதரோ தேற்றம் அறிவுஉடையார் கண்ணும்**
   **பிரிவுஓர் இடத்துண்மை யான்.**

அறிவுடைய காதலரிடத்தும் பிரிவு ஒரு காலத்தில் உள்ளபடியால், அவர் 'பிரியேன்' என்று சொல்லும் உறுதிமொழியை நம்பித் தெளிவது அரிது. 1153

4. **அளித்துஅஞ்சல் என்றுஅவர் நீப்பின் தெளித்தசொல்**
   **தேறியார்க்கு உண்டோ தவறு.**

அருள் மிகுந்தவராய் 'அஞ்ச வேண்டா' என்று முன் தேற்றியவர் பிரிந்து செல்வாரானால் அவர் கூறிய உறுதி மொழியை நம்பித் தெளிந்தவர்க்குக் குற்றம் உண்டோ? 1154

5. **ஓம்பின் அமைந்தார் பிரிவுஓம்பல்: மற்றவர்**
   **நீங்கின் அரிதால் புணர்வு.**

காத்துக் கொள்வதானால் காதலராக அமைந்தவரின் பிரிவு நேராமல் காக்க வேண்டும்; அவர் பிரிந்து நீங்கினால் மீண்டும் கூடுதல் அரிது. 1155

6. **பிரிவுரைக்கும் வன்கண்ணர் ஆயின் அரிதுஅவர்**
   **நல்குவர் என்னும் நசை.**

பிரிவைப்பற்றித் தெரிவிக்கும் அளவிற்குக் கல் நெஞ்சம் உடையவரானால், அத்தகையவர் திரும்பி வந்து அன்பு செய்வார் என்னும் ஆசை பயனற்றது. 1156

7. **துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை**
**இறைஇறவா நின்ற வளை.**

என் மெலிவால் முன்கையில் இறைகடந்து சுழலும் வளையல்கள், தலைவன் விட்டுப் பிரிந்த செய்தியைப் பலரறியத் தெரிவித்துத் தூற்றாமலிருக்குமோ? 1157

8. **இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல்: அதனினும்**
**இன்னாது இனியார்ப் பிரிவு.**

இனத்தவராக நம்மேல் அன்புடையார் இல்லாத ஊரில் வாழ்தல் துன்பமானது; இனிய காதலரின் பிரிவு அதைவிடத் துன்பமானது. 1158

9. **தொடின்சுடின் அல்லது காமநோய் போல**
**விடின்சுடல் ஆற்றுமோ தீ.**

நெருப்பு, தன்னைத் தொட்டால் சுடுமே அல்லாமல் காமநோய்போல் தன்னை விட்டு நீங்கியபொழுது சுடவல்லதாகுமோ? 1159

10. **அரிதுஆற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவுஆற்றிப்**
**பின்இருந்து வாழ்வார் பலர்.**

பிரியமுடியாத பிரிவிற்கு உடன்பட்டு,(பிரியும் போது) துன்பத்தால் கலங்குவதையும் விட்டு, பிரிந்தபின் பொறுத்திருந்து பின்னும் உயிரோடிருந்து வாழ்வோர் உலகில் பலர். 1160

1. **மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை: இறைப்பவர்க்கு**
**ஊற்றுநீர் போல மிகும்.**

இக் காமநோயைப் பிறர் அறியாமல் யான்மறைப்பேன்; ஆனால்,இது இறைப்பவர்க்கு ஊற்றுநீர் மிகுவது போல் மிகுகின்றது. 1161

2. **கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு**
**உரைத்தலும் நாணுத் தரும்.**

இக் காமநோயைப் பிறர் அறியாமல் முற்றிலும் மறைக்கவும் முடியவில்லை; நோய் செய்த காதலர்க்குச் சொல்வதும் நாணம் தருகின்றது. 1162

3. **காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்**
**நோனா உடம்பின் அகத்து**.

துன்பத்தைப் பொறுக்காமல் வருந்துகின்ற என் உடம்பினிடத்தில் உயிரே காவடித்தண்டாகக் கொண்டு காமநோயும் நாணமும் இருபக்கமும் தொங்குகின்றன. 1163

4. **காமக் கடல்மன்னும் உண்டே: அதுநீந்தும்**
**ஏமப் புணைமன்னும் இல்**.

காமநோயாகிய கடல் இருக்கின்றது; ஆனால், அதை நீந்திக் கடந்து செல்வதற்கு வேண்டிய காவலான தோணியோ இல்லை. 1164

5. **துப்பின் எவன்ஆவர் மன்கொல் துயர்வரவு**
**நட்பினுள் ஆற்று பவர்**.

(இன்பமான) நட்பிலேயே துயரத்தை வரச்செய்ய வல்லவர்,(துன்பம் தரும் பகையை வெல்லும்) வலிமை வேண்டும்போது என்ன ஆவாரே? 1165

6. **இன்பம் கடல்மற்றுக் காமம்: அஃதுஅடும்கால்**
**துன்பம் அதனிற் பெரிது**.

காமம் மகிழ்விக்கும்போது அதன் இன்பம் கடல் போன்றது; அது வருத்தும்போது அதன் துன்பமோ கடலைவிடப் பெரியது. 1166

7. **காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்**
**யாமத்தும் யானே உளேன்**.

காமம் என்னும் வெள்ளத்தை நீந்தியும் அதன் கரையை யான் காணவில்லை; நள்ளிரவிலும் யான் தனியே இருக்கின்றேன், 1167

8. **மன்னுயி ரெல்லாம் துயிற்றி அளித்துஇரா:**
**என்அல்லது இல்லை துணை**.

இந்த இராக்காலம் இரங்கத்தக்கது; எல்லா உயிரையும் தூங்கச் செய்துவிட்டு என்னை அல்லாமல் வேறு துணை இல்லாமலிருக்கின்றது. 1168

9. **கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்**
**நெடிய கழியும் இரா**.

(பிரிந்து துன்புறுகின்ற) இந்நாட்களில் நெடுநேரம் உடையனவாய்க் கழிகின்ற இராக்காலங்கள், பிரிந்த கொடியவரின் கொடுமையைவிடத் தாம் கொடியவை. 1169

10. **உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்**
**நீந்தல மன்னோஎன் கண்**.

காதலர் உள்ள இடத்திற்கு என் மனத்தைப்போல் செல்ல முடியுமானால், என் கண்கள் இவ்வாறு வெள்ளமாகிய கண்ணீரில் நீந்த வேண்டியதில்லை. 1170

1. **கண்தாம் கலுழ்வது எவன்கொலோ? தண்டாநோய்**
**தாம்காட்ட யாம்கண் டது**.

தீராத இக்காமநோய், கண்கள் காட்ட யாம் கண்டதால் விளைந்தது; அவ்வாறிருக்க, காட்டிய கண்கள் தாமே இப்போது அழுவது ஏன்? 1171

2. **தெரிந்துஉணரா நோக்கிய உண்கண் பரிந்துஉணராப்**
**பைதல் உழப்பது எவன்?**

ஆராய்ந்து உணராமல் அன்று நோக்கிக் காதல் கொண்ட கண்கள், இன்று அன்புகொண்டு உணராமல் துன்பத்தால் வருந்துவது ஏன்? 1172

3. **கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்**:
**இதுநகத் தக்கது உடைத்து**.

அன்று காதலரைக் கண்கள் தாமே விரைந்துநோக்கி இன்று தாமே அழுகின்றன; இது நகைக்கத்தக்க தன்மை உடையது. 1173

4. **பெயல்ஆற்றா நீர்உலந்த உண்கண் உயல்ஆற்றா**
**உய்வுஇல்நோய் என்கண் நிறுத்து**.

என் கண்கள், தப்பிப் பிழைக்க முடியாத தீராத காமநோயை என்னிடத்தில் உண்டாக்கி நிறுத்திவிட்டு, தாமும் அழமுடியாமல் நீர் வறண்டுவிட்டன. 1174

5. **படல்ஆற்றா பைதல் உழக்கும் கடல்ஆற்றாக்**
**காமநோய் செய்தஎன் கண்**

அன்று கடலும் தாங்கமுடியாத காமநோயை உண்டாக்கிய என் கண்கள்,இன்று உறங்கமுடியாமல் துன்பத்தால் வருந்துகின்றன. 1175

6. **ஓஒ இனிதே எமக்குஇந்நோய் செய்தகண்**
**தாஅம் இதற்பட் டது**.

எமக்கு இந்தக் காமநோயை உண்டாக்கிய கண்கள், தாமும் இத்தகைய துன்பத்தைப்பட்டு வருந்துவது மிகவும் நல்லதே! 1176

7. **உழந்துதுழந்து உள்நீர் அறுக விழைந்துஇழைந்து**
**வேண்டி யவர்க்கண்ட கண்** !

அன்று விரும்பி நெகிழ்ந்து காதலரைக் கண்ட கண்கள இன்று உறக்கமில்லாத துன்பத்தால் வருந்தி வருந்திக் கண்ணீரும் அற்றுப் போகட்டும். 1177

8. **பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றுஅவர்க்**
**காணாது அமைவில கண்**.

உள்ளத்தால் விரும்பாமலே சொல்லளவில் விரும்பிப் பழகியவர் ஒருவர் இருக்கின்றார். அவரைக் காணாமல் கண்கள் அமைதியுறவில்லை. 1178

9. **வாராக்கால் துஞ்சா: வரின்துஞ்சா: ஆயிடை**
**ஆரஞர் உற்றன கண்**.

காதலர் வாராவிட்டால் தூங்குவதில்லை; வந்தாலும் தூங்குவதில்லை; இவற்றுக்கிடையே என்கண்கள் மிக்க துன்பத்தை அடைந்தன. 1179

10. **மறைபெறல் ஊரார்க்கு அரிதுஅன்றால் எம்போல்**
**அறைபறை கண்ணா ரகத்து**.

அறையப்படும் பறைபோல் துன்பத்தை வெளிப்படுத்தும் கண்களை உடைய எம்மைப் போன்றவரிடத்தில் மறைபொருளான செய்தியை அறிதல் ஊரார்க்கு அரிது அன்று. 1180

1. **நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தஎன்**
**பண்பியார்க்கு உரைக்கோ பிற?**

விரும்பிய காதலர்க்கு அன்று பிரிவை உடன்பட்டேன்; பிரிந்தபின் பசலை உற்ற என் தன்மையை வேறு யார்க்குச் சென்று சொல்வேன்? 1181

2. **அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்துஎன்**
**மேனிமேல் ஊரும் பசப்பு**.

அந்தக் காதலர் உண்டாக்கினார் என்னும் பெருமிதத்தோடு இந்தப் பசலைநிறம் என்னுடைய மேனிமேல் ஊர்ந்து பரவி வருகின்றது. 1182

3. **சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா**
**நோயும் பசலையும் தந்து**.

காமநோயையும் பசலை நிறத்தையும் எனக்குக் கைம்மாறாகக் கொடுத்துவிட்டு, என் சாயலையும் நாணத்தையும் அவர் என்னிடமிருந்து பெற்றுக்கொண்டார். 1183

4. **உள்ளுவன் மன்யான்: உரைப்பது அவர்திறமால்:**
**கள்ளம் பிறவோ பசப்பு**.

யான் அவருடைய நல்லியல்புகளை நினைக்கின்றேன்; யான் உரைப்பதும் அவற்றையே; அவ்வாறிருந்தும் பசலை வந்தது வஞ்சனையோ? வேறு வகையோ? 1184

5. **உவக்காண்எம் காதலர் செல்வார்: இவக்காண்என்**
**மேனி பசப்புஊர் வது**.

அதோ பார்! எம்முடைய காதலர் பிரிந்து செல்கின்றார்; இதோ பார்! என்னுடைய மேனியில் பசலைநிறம் வந்து படர்கின்றது. 1185

6. **விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்**
**முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு.**

விளக்கினுடைய மறைவைப் பார்த்துக் காத்திருக்கின்ற இருளைப்போலவே, தலைவனுடைய தழுவுதலின் சோர்வைப் பசலை பார்த்துக் காத்திருக்கின்றது. 1186

7. **புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன்: அவ்வளவில்**
**அள்ளிக்கொள் வற்றே பசப்பு !**

தலைவனைத் தழுவிக் கிடந்தேன்; பக்கத்தே சிறிது அகன்றேன்; அவ்வளவிலேயே பசலை நிறம் அள்ளிக் கொள்வதுபோல் வந்து பரவிவிட்டதே! 1187

8. **பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்**
**துறந்தார் அவர்என்பார் இல் !**

'இவள் பிரிவால் வருந்திப் பசலைநிறம் அடைந்தாள்' என்று பழி சொல்வதே அல்லாமல், 'இவளைக் காதலர் விட்டுப் பிரிந்தார்' என்று சொல்பவர் இல்லையே! 1188

9. **பசக்கமன் பட்டாங்குஎன் மேனி நயப்பித்தார்**
**நல்நிலையர் ஆவர் எனின்.**

பிரிவுக்கு உடன்படச் செய்த காதலர் நல்ல நிலையுடையவர் ஆவார் என்றால், என்னுடைய மேனி உள்ளபடி பசலைநிறம் அடைவதாக . 1189

10. **பசப்புஎனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்**
**நல்காமை தூற்றார் எனின்.**

பிரிவுக்கு உடன்படச் செய்த காதலர் பிரிந்து வருத்துதலைப் பிறர் தூற்றாமலிருப்பாரானால், யான் பசலையுற்றதாகப் பெயரெடுத்தல் நல்லதே. 1190

1. **தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே**
**காமத்துக் காழில் கனி**.

தாம் விரும்பும் காதலர் தம்மை விரும்புகின்ற பேறு பெற்றவர், காதல் வாழ்க்கையின் பயனாகிய விதை இல்லாத பழத்தைப் பெற்றவரே ஆவர். 1191

2. **வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு**
**வீழ்வார் அளிக்கும் அளி**.

தம்மை விரும்புகின்றவர்க்குக் காதலர் அளிக்கும் அன்பு, உயிர்வாழ்கின்றவர்க்கு மேகம் மழை பெய்து காப்பாற்றுதலைப் போன்றது. 1192

3. **வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே**
**வாழுநம் என்னும் செருக்கு**.

காதலரால் விரும்பப்படுகின்றவர்க்குப் (பிரிவுத் துன்பம் இருந்தாலும்) 'மீண்டும் வந்தபின் வாழ்வோம்' என்று இருக்கும் செருக்குத் தகும். 1193

4. **வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்**
**வீழப் படாஅர் எனின்**.

தாம்விரும்பும் காதலரால் விரும்பப்படாவிட்டால் உலகத்தாரால் விரும்பப்படும் நிலையில் உள்ளவரும் நல்வினை பொருந்தியவர் அல்லர். 1194

5. **நாம்காதல் கொண்டார் நமக்குஎவன் செய்பவோ**
**தாம்காதல் கொள்ளாக் கடை?**

நாம் காதல் கொண்ட காதலர் தாமும் அவ்வாறே நம்மிடம் காதல் கொள்ளளாதபோது, நமக்கு அவர் என்ன நன்மை செய்வார்? 1195

6. **ஒருதலையான் இன்னாது காமம்காப் போல**
**இருதலை யானும் இனிது**.

காதல் ஒரு பக்கமாக இருத்தல் துன்பமானது; காவடியின் பாரம்போல் இருபக்கமாகவும் ஒத்திருப்பது இன்பமானதாகும். 1196

7. **பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்**
**ஒருவர்கண் நின்றுஒழுகு வான் ?**

(காதலர் இருவரிடத்திலும் ஒத்திருக்காமல்) ஒருவரிடத்தில் மட்டும் காமன் நின்று இயங்குவதால், என்னுடைய துன்பத்தையும் வருத்தத்தையும் அறியானோ? 1197

8. **வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து**
**வாழ்வாரின் வன்கணார் இல்**.

தான் விரும்பும் காதலரின் இனிய சொல்லைப் பெறாமல் உலகத்தில் (பிரிவுத் துன்பத்தைப் பொறுத்து) வாழ்கின்றவரைப்போல் வன்கண்மை உடையவர் இல்லை, 1198

9. **நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு**
**இசையும் இனிய செவிக்கு**.

யான் விரும்பிய காதலர் மீண்டும் வந்து அன்பு செய்ய மாட்டார் என்றாலும், அவரைப்பற்றிய புகழைக் கேட்பதும் என் செவிக்கு இன்பமாக இருக்கின்றது. 1199

10. **உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்**
**செறாஅஅய் வாழிய நெஞ்சு**.

நெஞ்சமே! நீ வாழிய ! அன்பு இல்லாதவரிடம் உன் மிகுந்த துன்பத்தைச் சொல்கின்றாய்! அதைவிட எளிதாகக் கடலைத் தூர்ப்பாயாக. 1200

1. **உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்**
**கள்ளினும் காமம் இனிது**.

நினைந்தாலும் தீராத பெரிய மகிழ்ச்சியைச் செய்தலால் (உண்டபோது மட்டும் மகிழ்ச்சி தரும்) கள்ளைவிடக் காமம் இன்பமானதாகும். 1201

2. **எனைத்துஒன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்**
**நினைப்ப வருவதுஒன்று இல்**.

தாம் விரும்புகின்ற காதலர் தம்மை நினைத்தலும் பிரிவால் வரக்கூடிய துன்பம் இல்லாமற் போகின்றது! அதனால் காமம் எவ்வளவாயினும் இன்பம் தருவதே ஆகும். 1202

3. **நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்**
   **சினைப்பது போன்று கெடும்.**

தும்மல் வருவதுபோலிருந்து வாராமல் அடங்குகின்றதே! என் காதலர் என்னை நினைப்பவர்போலிருந்து நினையாமல் விடுகின்றாரோ? 1203

4. **யாமும் உளேம்கொல் அவர்நெஞ்சத்து எம்நெஞ்சத்து**
   **ஓஒ உளரே அவர்.**

எம்முடைய நெஞ்சில் காதலராகிய அவர் இருக்கின்றாரே! (அது போலவே) யாமும் அவருடைய நெஞ்சத்தில் நீங்காமல் இருக்கின்றோமோ? 1204

5. **தம்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்**
   **எம்நெஞ்சத்து ஓவா வரல்?**

தம்முடைய நெஞ்சில் எம்மை வரவிடாது காவல் கொண்ட காதலர், எம்முடைய நெஞ்சில் தாம் ஓயாமல் வருவதைப்பற்றி நாணமாட்டாரோ! 1205

6. **மற்றுயான் என்உளேன் மன்னோ அவரொடுயான்**
   **உற்றநாள் உள்ள உளேன்.**

காதலராகிய அவரோடு யான் பொருந்தியிருந்த நாட்களை நினைத்துக்கொள்வதால்தான் உயிரோடிருக்கின்றேன்; வேறு எதனால் உயிர்வாழ்கின்றேன்? 1206

7. **மறப்பின் எவன்ஆவன் மற்கொல்? மறப்புஅறியேன்**
   **உள்ளினும் உள்ளம் சுடும்.**

(காதலரை) மறந்தறியாமல் நினைத்தாலும் உள்ளத்தைப் பிரிவுத் துன்பம் சுடுகின்றதே! நினைக்காமல் மறந்துவிட்டால் என்ன ஆவேனோ? 1207

8. **எனைத்து நினைப்பினும் காயார் அனைத்துஅன்றோ**
**காதலர் செய்யும் சிறப்பு** !

காதலரை எவ்வளவு மிகுதியாக நினைத்தாலும் அவர் என்மேல் சினங் கொள்ளார்; காதலர் செய்யும் சிறந்த உதவி அத்தன்மையானது அன்றோ! 1208

9. **விளியும்என் இன்னுயிர் வேறல்லம் என்பார்**
**அளிஇன்மை ஆற்ற நினைந்து**.

'நாம் இருவரும் வேறு அல்லேம்' என்று அடிக்கடி சொல்லும் அவர் இப்போது அன்பு இல்லாதிருத்தலை மிக நினைந்து என் இனிய உயிர் அழிகின்றது. 1209

10. **விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்**
**படாஅதி வாழி மதி** !

திங்களே! பிரியாமலிருந்து இறுதியில் பிரிந்து சென்ற காதலரை என் கண்ணால் தேடிக் காணும்படியாக நீ மறைந்து விடாமல் இருப்பாயாக! 1210

1. **காதலர் தூதொடு வந்த கனவினுக்கு**
**யாதுசெய் வேன்கொல் விருந்து** ?

(யான் பிரிவால் வருந்தி உறங்கியபோது) காதலர் அனுப்பிய தூதோடு வந்த கனவுக்கு உரிய விருந்தாக என்ன செய்து உதவுவேன்? 1211

2. **கயல்உண்கண் யான்இரப்பத் துஞ்சின் கலந்தார்க்கு**
**உயல்உண்மை சாற்றுவேன் மன்**.

கண்கள் யான் வேண்டுவதுபோல் தூங்குமானால்,(அப்போது வரும் கனவில் காணும்) காதலர்க்கு யான் தப்பிப் பிழைத்திருக்கும் தன்மையைச் சொல்வேன். 1212

3. **நனவினால் நல்கா தவரைக் கனவினால்**
**காண்டலின் உண்டுஎன் உயிர்**.

நனவில் வந்து அன்பு செய்யாத காதலரைக் கனவில் காண்பதால்தான் என்னுடைய உயிர் இன்னும் நீங்காமல் உள்ளதாகின்றது. 1213

4. **கனவினான் உண்டாகும் காமம் நனவினான்**
**நல்காரை நாடித் தரற்கு.**

நனவில் வந்து அன்பு செய்யாத காதலரைத் தேடி அழைத்துக்கொண்டு வருவதற்காகக் கனவில் அவரைப் பற்றிய காதல் நிகழ்ச்சிகள் உண்டாகின்றன. 1214

5. **நனவினால் கண்டதூஉம் ஆங்கே கனவும்தான்**
**கண்ட பொழுதே இனிது.**

முன்பு நனவில் கண்ட இன்பமும் அப்பொழுதுமட்டும் இனிதாயிற்று; இப்பொழுது காணும் கனவும் கண்ட பொழுது மட்டுமே இன்பமாக உள்ளது. 1215

6. **நனவுஎன ஒன்றில்லை ஆயின் கனவினால்**
**காதலர் நீங்கலர் மன்.**

நனவு என்று சொல்லப்படுகின்ற ஒன்று இல்லாதிருக்குமானால், கனவில் வந்த காதலர் என்னை விட்டுப் பிரியாமலே இருப்பர். 1216

7. **நனவினால் நல்காக் கொடியார் கனவினால்**
**என்எம்மைப் பீழிப் பது?**

நனவில் வந்து எமக்கு அன்பு செய்யாத கொடுமை உடைய அவர், கனவில்மட்டும் வந்து எம்மை வருத்துவது என்ன காரணத்தால்? 1217

8. **துஞ்சும்கால் தோள்மேலர் ஆகி விழிக்கும்கால்**
**நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.**

தூங்கும்போது கனவில் வந்து என் தோள்மேல் உள்ளவராகி, விழித்தெழும்போது உடனே விரைந்து என் நெஞ்சில் உள்ளவராகின்றார். 1218

9. **நனவினால் நல்காரை நோவர் கனவினால்**
**காதலர்க் காணா தவர்.**

கனவில் காதலர் வரக் காணாத மகளிர் நனவில் வந்து அன்பு செய்யாத காதலரை (அவர் வராத காரணம் பற்றி) நொந்துகொள்வர். 1219

10. **நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால்**
**காணார்கொல் இவ்வூ ரவர்?**

நனவில் நம்மைவிட்டு நீங்கினார் என்று காதலரைப் பழித்துப் பேசுகின்றனரே! இந்த ஊரார் கனவில் அவரைக் காண்பதில்லையோ! 1220

1. **மாலையோ அல்லை மணந்தார் உயிர்உண்ணும்**
**வேலைநீ வாழி பொழுது.**

பொழுதே! நீ மாலைக்காலம் அல்லை: (காதலரோடு கூடியிருந்து பிறகு பிரிந்து வாழும்) மகளிரின் உயிரை உண்ணும் முடிவுக் காலமாக இருக்கின்றாய்! 1221

2. **புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள்போல்**
**வன்கண்ண தோநின் துணை?**

மயங்கிய மாலைப்பொழுதே! நீயும் எம்மைப்போல் துன்பப்படுகின்றாயே! உன் துணையும் எம் காதலர் போல் இரக்கம் அற்றதோ? 1222

3. **பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்**
**துன்பம் வளர வரும்.**

பனி தோன்றிய பசந்த நிறம்கொண்ட மாலைப்பொழுது எனக்கு வருத்தம் ஏற்பட்டுத் துன்பம் மேன்மேலும் வளரும்படியாக வருகின்றது. 1223

4. **காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து**
**ஏதிலர் போல வரும்.**

காதலர் இல்லாத இப்போது, கொலை செய்யும் இடத்தில் பகைவர் வருவதுபோல் மாலைப்பொழுது(என் உயிரைக் கொள்ள) வருகின்றது. 1224

5. **காலைக்குச் செய்தநன்று என்கொல்? எவன்கொல்யான்**
**மாலைக்குச் செய்த பகை?**

யான் காலைப்பொழுதிற்குச் செய்த நன்மை என்ன? (என்னைத் துன்புறுத்துகின்ற) மாலைப்பொழுதிற்குச் செய்த பகையான தீமை என்ன.? 1225

6. **மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத**
**காலை அறிந்தது இலேன்**.

மாலைப்பொழுது இவ்வாறு துன்பம் செய்யவல்லது என்பதைக் காதலர் என்னைவிட்டு அகலாமல் உடனிருந்த காலத்தில் யான் அறியவில்லை. 1226

7. **காலை அரும்பிப் பகல்எல்லாம் போதுஆகி**
**மாலை மலரும்இந் நோய்**.

இந்தக் காமநோய், காலைப்பொழுதில் அரும்பாய்த் தோன்றி, பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய் வளர்ந்து மாலைப்பொழுதில் மலராகின்றது 1227

8. **அழல்போலும் மாலைக்குத் தூதுஆகி ஆயன்**
**குழல்போலும் கொல்லும் படை**.

ஆயனுடைய புல்லாங்குழல், நெருப்புப்போல் வருந்தும் மாலைப் பொழுதிற்குத் தூதாகி என்னைக் கொல்லும் படையாக வருகின்றது. 1228

9. **பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு**
**மாலை படர்தரும் போழ்து**.

அறிவு மயங்கும்படியாக மாலைப்பொழுது வந்து படரும்போது, இந்த ஊரும் மயங்கி என்னப்போல் துன்பத்தால் வருந்தும். 1229

10. **பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை**
**மாயும்என் மாயா உயிர்**.

(பிரிவுத்துன்பத்தால்) மாயாமல் நின்ற என் உயிர், பொருள் காரணமாகப் பிரிந்துசென்ற காதலரை நினைத்து மயங்குகின்ற இம் மாலைப்பொழுதில் மாய்கின்றது. 1230

1. **சிறுமை நமக்குஒழியச் சேண்சென்றார் உள்ளி**
**நறுமலர் நாணின கண்**.

இத்துன்பத்தை நமக்கு விட்டுவிட்டுத் தொலைவில் உள்ள நாட்டுக்குச் சென்ற காதலரை நினைந்து அழுதமையால் கண்கள் அழகு இழந்து நறுமலர்களுக்கு நாணிவிட்டன. 1231

2. **நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்**
**பசந்து பனிவாரும் கண்**.

பசலைநிறம் அடைந்து நீர் சொரியும் கண்கள், நாம் விரும்பிய காதலர் நமக்கு அன்பு செய்யாத தன்மையைப் (பிறர்க்குச்) சொல்வனபோல் உள்ளன. 1232

3. **தணந்தமை சால அறிவிப்ப போலும்**
**மணந்தநாள் வீங்கிய தோள்**.

கூடியிருந்த காலத்தில் மகிழ்ந்து பூரித்திருந்த தோள்கள், (இப்போது மெலிந்து) காதலருடைய பிரிவை நன்றாக அறிவிப்பவைபோல் உள்ளன. 1233

4. **பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்**
**தொல்கவின் வாடிய தோள்**.

துணைவர் விட்டு நீங்கியதால் பழைய அழகு கெட்டு வாடிய தோள்கள், பருத்த தன்மை கெட்டு மெலிந்து வளையல்களும் கழலச் செய்கின்றன. 1234

5. **கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு**
**தொல்கவின் வாடிய தோள்**.

வளையல்களும் கழன்று பழைய அழகும் கெட்டு வாடிய தோள்கள்,(என் துன்பம் உணராத) கொடியவரின் கொடுமையைப் பிறர் அறியச் சொல்கின்றன. 1235

6. **தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்**
**கொடியர் எனக்கூறல் நொந்து**.

வளையல்கள் கழன்று தோள்களும் மெலிவடைவதால் (அவற்றை காண்போர்) காதலரைக் கொடியவர் என்று கூறுவதைக் கேட்டு வருந்துகின்றேன். 1236

7. **பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்குஎன்**
**வாடுதோள் பூசல் உரைத்து?**

நெஞ்சே! கொடியவர் என்று சொல்லப்படுகின்ற காதலர்க்கு என் மெலிந்த தோள்களின் ஆரவாரத்தை உரைத்து, அந்த உதவியால் பெருமை அடைவாயோ? 1237

8. **முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது**
**பைந்தொடிப் பேதை நுதல்.**

தழுவிய கைகளைத் தளர்த்தியவுடனே, பைந்தொடி அணிந்த காதலியின் நெற்றி, (அவ்வளவு சிறிதாகிய பிரிவையும் பொறுக்காமல்) பசலை நிறம் அடைந்தது. 1238

9. **முயக்குஇடைத் தண்வளி போழப் பசப்புஉற்ற**
**பேதை பெருமழைக் கண்.**

தழுவுதலுக்கு இடையே குளிர்ந்த காற்று நுழையக் காதலியின் பெரிய மழை போன்ற கண்கள் பசலைநிறம் அடைந்தன. 1239

10. **கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே**
**ஒண்ணுதல் செய்தது கண்டு.**

காதலியின் ஒளிபொருந்திய நெற்றி, பசலை நிறம் உற்றதைக் கண்டு, அவளுடைய கண்களின் பசலையும் துன்பம் அடைந்துவிட்டது, 1240

1. **நினைத்துஒன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்துஒன்றும்**
**எவ்வநோய் தீர்க்கும் மருந்து ?**

நெஞ்சே! (காதலால் வளர்ந்த) இத் துன்பநோயைத் தீர்க்கும் மருந்து ஏதாவது ஒன்றை நீ நினைத்துப் பார்த்து எனக்குச் சொல்லமாட்டாயோ? 1241

2. **காதல் அவர்இலர் ஆகநீ நோவது**
**பேதமை வாழிஎன் நெஞ்சு**.

என் நெஞ்சே! வாழ்க! அவர் நம்மிடம் காதல் இல்லாதவராக இருக்க, நீ மட்டும் அவரை நினைந்து வருந்துவதும் உன் அறியாமையே! 1242

3. **இருந்துஉள்ளி என்பரிதல் நெஞ்சே ! பரிந்துள்ளல்**
**பைதல்நோய் செய்தார்கண் இல்**.

நெஞ்சே!(என்னுடன்)இருந்து அவரை நினைந்து வருந்துவது ஏன்? இந்தத் துன்பநோயை உண்டாக்கியவரிடம் இவ்வாறு அன்பு கொண்டு நினைக்கும் தன்மை இல்லையே! 1243

4. **கண்ணும் கொளச்சேறி நெஞ்சே! இவைஎன்னைத்**
**தின்னும் அவர்க்காணல் உற்று**.

நெஞ்சே! நீ அவரிடம் செல்லும் போது என் கண்களையும் உடன் கொண்டு செல்வாயாக; அவரைக் காண வேண்டும் என்று இவை என்னைப் பிடுங்கித் தின்கின்றன. 1244

5. **செற்றா ரெனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்**
**உற்றால் உறாஅ தவர் ?**

நெஞ்சே! யாம் விரும்பி நாடினாலும் எம்மை நாடாத அவர் நம்மை வெறுத்துவிட்டார் என்று எண்ணிக் கை விட முடியுமோ? 1245

6. **கலந்துஉணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துஉணராய்**
**பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு**.

என் நெஞ்சே! ஊடியபோது கூடி ஊடல் உணர்த்த வல்ல காதலரைக் கண்டபோது நீ பிணங்கி உணரமாட்டாய்! பொய்யான சினங்கொண்டு காய்கின்றாய். 1246

7. **காமம் விடுஒன்றோ நாண்விடு நல்நெஞ்சே**
**யானோ பொறேன்இவ் இரண்டு**.

நல்ல நெஞ்சே! ஒன்று காமத்தை விட்டு விடு; அல்லது நாணத்தை விட்டுவிடு; இந்த இரண்டையும் பொறுத்துக் கொண்டிருக்க என்னால் முடியாது 1247

8. **பரிந்துஅவர் நல்கார்என்று ஏங்கிப் பிரிந்தவர்**
**பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு!**

என் நெஞ்சே! பிரிவுத் துன்பத்தால் வருத்தி அவர் வந்து அன்பு செய்யவில்லையே என்று ஏங்கிப்பிரிந்தவரின் பின் செல்கின்றாய்! நீ பேதை. 1248

9. **உள்ளத்தார் காத லவர்ஆக உள்ளிநீ**
**யாருழைச் சேறிஎன் நெஞ்சு?**

என் நெஞ்சே! காதலர் உன் உள்ளததில் உள்ளவராக இருக்கும்போது நீ அவரை நினைத்து யாரிடம் தேடிச் செல்கின்றாய்? 1249

10. **துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா**
**இன்னும் இழத்தும் கவின்.**

நம்மோடு பொருந்தியிருக்காமல் கைவிட்டுச் சென்ற காதலரை நெஞ்சில் வைத்திருக்கும்போது, இன்னும் மெலிந்து அழகை இழந்து வருகின்றோம். 1250

1. **காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்**
**நாணுத்தாழ் வீழ்த்த கதவு.**

நாணம் என்னும் தாழ்ப்பாள் பொருந்திய நிறை என்று சொல்லப்படும் கதவைக் காமம் ஆகிய கோடரி உடைத்து விடுகின்றது, 1251

2. **காமம் எனஒன்றோ கண்ணின்றுஎன் நெஞ்சத்தை**
**யாமத்தும் ஆளும் தொழில்.**

காமம் என்று சொல்லப்படுகின்ற ஒன்று கண்ணோட்டம் இல்லாதது; அஃது என் நெஞ்சத்தை நள்ளிரவிலும் ஏவல் கொண்டு ஆள்கின்றது. 1252

3. **மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்புஇன்றித்**
**தும்மல்போல் தோன்றி விடும்.**

யான் காமத்தை என்னுள் மறைக்க முயல்வேன்; ஆனால் அதுவே என் குறிப்பின்படி நிற்காமல் தும்மல்போல் தானே வெளிப்பட்டு விடுகின்றது. 1253

4. **நிறைஉடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்**
   **மறைஇறந்து மன்று படும்**.

யான் இதுவரையில் நிறையோடிருப்பதாக எண்ணிக் கொண்டிருந்தேன்; ஆனால், என் காமம் என்னுள் மறைந்திருத்தலைக் கடந்து மன்றத்தில் வெளிப்படுகின்றது. 1254

5. **செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்**
   **உற்றார் அறிவதுஒன்று அன்று**.

தம்மை வெறுத்து நீங்கியவரின்பின் செல்லாமல் மானத்தோடு நிற்கும் பெருந்தகைமை, காமநோய் உற்றவர் அறியும் தன்மையது அன்று. 1255

6. **செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ**
   **எற்றுஎன்னை உற்ற துயர்**.

வெறுத்து நீங்கிய காதலரின்பின் செல்ல விரும்பிய நிலையில் இருப்பதால் என்னை அடைந்த இந்தக்காமநோய் எத்தன்மையானது? அந்தோ? 1256

7. **நாண்என ஒன்றோ அறியலம் காமத்தால்**
   **பேணியார் பெட்ப செயின்**.

நாம் விரும்பிய காதலர் காமத்தால் நமக்கு விருப்பமானவற்றைச் செய்வாரானால், நாணம் என்று சொல்லப்படும் ஒரு பண்பையும் அறியாமலிருப்போம். 1257

8. **பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்**
   **பெண்மை உடைக்கும் படை**.

நம்முடைய பெண்மையாகிய அரணை அழிக்கும் படையாக இருப்பது. பலமாயங்களில் வல்ல கள்வனான காதலருடைய பணிவுடைய மொழி அன்றோ? 1258

9. **புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்**
**கலத்தல் உறுவது கண்டு**.

ஊடுவேன் என்று எண்ணிக் கொண்டு சென்றேன்; ஆனால் என் நெஞ்சம் என்னைவிட்டு அவரோடு கூடுவதைக் கண்டு தழுவினேன். 1259

10. **நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ**
**புணர்ந்து ஊடி நிற்பேம் எனல்**.

கொழுப்பைத் தீயில் இட்டாற் போன்ற உருகும் நெஞ்சு உடைய என்னைப்போன்றவர்க்கு, 'இசைந்து ஊடிநிற்போம்' என்று ஊடும் தன்மை உண்டோ? 1260

1. **வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும்**: **அவர்சென்ற**
**நாள்ஒற்றித் தேய்ந்த விரல்**.

என் கண்களும் அவர் வரும் வழியைப் பார்த்துப் பார்த்து ஒளி இழந்து அழகு கெட்டன; விரல்களும் அவர் சென்ற நாட்களைக் குறித்துத் தொட்டுத் தொட்டுத் தேய்ந்தன. 1261

2. **இலங்கிழாய்** ! **இன்று மறப்பின் என் தோள்மேல்**
**கலம்கழியும் காரிகை நீத்து**.

தோழி! காதலரின் பிரிவால் துன்புற்று வருந்துகின்ற இன்றும் அவரை மறந்துவிட்டால், அழகு கெட்டு என்தோள் மேல் அணிந்துள்ள அணிகள் கழலுமாறு நேரும். 1262

3. **உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்**
**வரல்நசைஇ இன்னும் உளேன்**.

வெற்றியை விரும்பி ஊக்கமே துணையாகக்கொண்டு வெளிநாட்டுக்குச் சென்ற காதலர்; திரும்பி வருதலைக் காண விரும்பியே இன்னும் யான் உயிரோடிருக்கின்றேன். 1263

4. **கூடிய காமம் பிரிந்தார் வரவுஉள்ளிக்**
**கோடுகொடு ஏறும்என் நெஞ்சு**.

முன்பு கூடியிருந்த காதலைக் கைவிட்டுப் பிரிந்த அவருடைய வருகையை நினைத்து என் நெஞ்சம் மரத்தின் கிளைகளின்மேலும் ஏறிப் பார்க்கின்றது. 1264

5. **காண்கமன் கொண்கனைக் கண்ணார; கண்டபின்**
**நீங்கும்என் மென்தோள் பசப்பு.**

என் காதலனைக் கண்ணாரக் காண்பேனாக; கண்டபிறகு, என்னுடைய மெல்லிய தோளில் உண்டாகிய பசலைநிறம் தானே நீங்கி விடும். 1265

6. **வருகமன் கொண்கன் ஒருநாள்: பருகுவன்**
**பைதல்நோய் எல்லாம் கெட.**

என் காதலன் ஒருநாள் என்னிடம் வருவானாக; வந்த பிறகு, என்னுடைய துன்பநோய் எல்லாம் தீருமாறு நான் நன்றாக நுகர்வேன். 1266

7. **புலப்பேன்கொல்: புல்லுவேன் கொல்லோ: கலப்பேன்கொல்**
**கண்அன்ன கேளிர் வரின்?**

என்னுடைய கண்போன்ற காதலர் வருவாரானால், யான் அவரோடு ஊடுவேனோ? அல்லது அவரைத் தழுவுவேனோ? அவரோடு கூடுவேனோ? 1267

8. **வினைகலந்து வென்றீக வேந்தன்: மனைகலந்து**
**மாலை அயர்கம் விருந்து.**

அரசன் இச் செயலில் முனைந்து நின்று வெற்றி பெறுவானாக; அதன்பின் யாம் மனைவியோடு கூடியிருந்து அன்றுவரும் மாலைப்பொழுதிற்கு விருந்து செய்வோம். 1268

9. **ஒருநாள் எழுநாள்போல் செல்லும், சேண்சென்றார்**
**வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு.**

தொலைவில் உள்ள வெளிநாட்டிற்குச் சென்ற காதலர் திரும்பிவரும் நாளை நினைத்து ஏங்கும் மகளிர்க்கு ஒருநாள் ஏழுநாள் போல(நெடிதாகக்) கழியும். 1269

10. **பெறின்என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின்என்னாம்**
**உள்ளம் உடைந்துஉக்கக் கால்?**

துன்பத்தைத் தாங்காமல் மனம் உடைந்து அழிந்து விட்டால், நம்மைத் திரும்பப் பெறுவதனால் என்ன? பெற்று விட்டால் என்ன? பெற்றுப் பொருந்தினாலும் என்ன? 1270

1. **கரப்பினுங் கையிகந்து ஒல்லாநின் உண்கண்**
   **உரைக்கல் உறுவதுஒன்று உண்டு**.

நீ சொல்லாமல் மறைத்தாலும் நிற்காமல் உன்னைக் கடந்து உன்னுடைய கண்கள் எனக்குச் சொல்லக்கூடிய செய்தி ஒன்று இருக்கின்றது. 1271

2. **கண்நிறைந்த காரிகைக் காம்புஏர்தோள் பேதைக்குப்**
   **பெண்நிறைந்த நீர்மை பெரிது**.

கண்நிறைந்த அழகும் மூங்கில்போன்ற தோளும் உடைய என் காதலிக்குப் பெண்மைத்தன்மை நிறைந்து விளங்கும் இயல்பு மிகுதியாக உள்ளது. 1272

3. **மணியில் திகழ்தரு நூல்போல் மடந்நை**
   **அணியில் திகழ்வதுஒன்று உண்டு**.

(கோத்த) மணியினுள் விளங்கும் நூலைப்போல் என் காதலியின் அழகினுள் விளங்குவதான குறிப்பு ஒன்று இருக்கின்றது. 1273

4. **முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை**
   **நகைமொக்குள் உள்ளதொன்று உண்டு**.

அரும்பு தோன்றும்போதும் அடங்கியிருக்கும் மணத்தைப் போல், காதலியின் புன்முறுவலின் தோற்றத்தில் அடங்கி இருக்கும் குறிப்பு ஒன்று உள்ளது. 1274

5. **செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்**
   **தீர்க்கும் மருந்துஒன்று உடைத்து**.

காதலி என்னை நோக்கிச் செய்துவிட்டுச் சென்ற கள்ளமான குறிப்பு. என் மிக்க துயரத்தைத் தீர்க்கும் மருந்து ஒன்று உடையதாக இருக்கின்றது. 1275

6. **பெரிதுஆற்றிப் பெட்பக் கலத்தல் அரிதுஆற்றி**
**அன்புஇன்மை சூழ்வது உடைத்து**.

பெரிதும் அன்பு செய்து விரும்புமாறு கூடுதல், அரிதாகிய பிரிவைச் செய்து பிறகு அன்பில்லாமல் கைவிட எண்ணுகின்ற குறிப்பை உடையதாகும். 1276

7. **தண்அம் துறைவன் தணந்தமை நம்மினும்**
**முன்னம் உணர்ந்த வளை**.

குளிர்ந்த துறையை உடைய காதலன் பிரிந்த பிரிவை நம்மைவிட முன்னமே நம்முடைய வளையல்கள் உணர்ந்து கழன்று விட்டனவே! 1277

8. **நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்**
**எழுநாளேம் மேனி பசந்து**.

எம்முடைய காதலர் நேற்றுத்தான் பிரிந்து சென்றார்; யாமும் மேனி பசலை நிறம் அடைந்து ஏழு நாட்கள் ஆய்விட்ட நிலையில் இருக்கின்றோம். 1278

9. **தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி**
**அஃதுஆண்டு அவள்செய் தது**.

தன்னுடைய வளையல்களை நோக்கி, மெல்லிய தோள்களையும் நோக்கித் தன்னுடைய அடிகளையும் நோக்கி அவள் செய்த குறிப்பு உடன்போக்காகிய அதுவேயாகும். 1279

10. **பெண்ணினால் பெண்மை உடைத்துஎன்ப கண்ணினால்**
**காமநோய் சொல்லி இரவு**.

கண்ணினால் காமநோயைத் தெரிவித்துப் பிரியாம லிருக்குமாறு இரத்தல், பெண்தன்மைக்கு மேலும் பெண் தன்மை உடையது என்று கூறுவர். 1280

1. **உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்**
**கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு**.

நினைத்த அளவிலே களிப்படைதலும் கண்ட அளவிலே மகிழ்ச்சி அடைதலும் ஆகிய இந்த இருவகைத் தன்மையும் கள்ளுக்கு இல்லை; காமத்திற்கு உண்டு. 1281

2. **தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்**
**காமம் நிறைய வரின்**.

காமம் பனையளவாக நிறைய வரும்போது காதலரோடு தினையளவாகச் சிறிதேனும் ஊடல் கொள்ளாமல் இருக்க வேண்டும். 1282

3. **பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்**
**காணாது அமையல கண்**.

என்னை விரும்பாமல் புறக்கணித்துத் தனக்கு விருப்பமானவற்றையே செய்து ஒழுகினாலும், என்னுடைய கண்கள் காதலனைக் காணாமல் பொருந்தவில்லை. 1283

4. **ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து**
**கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு**.

தோழி! யான் அவரோடு ஊடுவதற்காகச் சென்றேன்: ஆனால் என்னுடைய நெஞ்சம் அந்த நோக்கத்தை மறந்து அவரோடு கூடுவதற்காகச் சென்றது. 1284

5. **எழுதும்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்**
**பழிகாணேன் கண்ட இடத்து**.

மை தீட்டும் நேரத்தில் தீட்டும் கோலைக் காணாத கண்களைப்போல், காதலனைக் கண்டபோது மட்டும் அவனுடைய குற்றத்தை நினைக்காமல் மறந்து விடுகின்றேன். 1285

6. **காணும்கால் காணேன் தவறாய: காணாக்கால்**
**காணேன் தவறல் லவை**.

காதலரை யான் காணும்போது (அவருடைய செயல்களில்) தவறானவற்றைக் காண்பதில்லை.அவரைக் காணாத போது தவறு அல்லாத நன்மைகளைக் காண்பதில்லை. 1286

7. **உய்த்தல் அறிந்து புலன்பாய் பவரேபோல்**
**பொய்த்தல் அறிந்துஎன் புலந்து**.

வெள்ளம் இழுத்துச் செல்வதை அறிந்திருந்தும் ஓடும் நீரில் பாய்கின்றவரைப் போல், பயன்படாமை அறிந்திருந்தும் ஊடல் கொள்வதால் பயன் என்ன? 1287

8. **இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்**
   **கள்ளற்றே கள்வநின் மார்பு.**

கள்வ! இழிவு வரத்தக்க துன்பங்களைச் செய்தாலும் கள்ளுண்டு களித்தவர்க்கு மேன்மேலும் விருப்பம் தரும் கள்ளைப் போன்றது உன் மார்பு. 1288

9. **மலரினும் மெல்லிது காமம்: சிலர்அதன்**
   **செவ்வி தலைப்படு வார்.**

காமம் மலரைவிட மென்மை உடையதாகும்; அந்த உண்மை அறிந்து அதன் நல்ல பயனைப் பெறக்கூடியவர் சிலரே. 1289

10. **கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்**
    **என்னினும் தான்விதுப் புற்று.**

கண்பார்வையின் அளவில் பிணங்கி, என்னைவிடத் தான் விரைந்து தழுவுதலை விரும்பி, (பிணங்கிய நிலையையும் மறந்து) கலங்கிவிட்டாள். 1290

1. **அவர்நெஞ்சு அவர்க்குஆதல் கண்டும் எவன்நெஞ்சே**
   **நீஎமக்கு ஆகா தது?**

நெஞ்சே! அவருடைய நெஞ்சம் (நம்மை நினையாமல் நம்மிடம் வராமல்) அவர்க்குத் துணையாதலைக் கண்டும் நீ எமக்குத் துணையாகாதது ஏன்? 1291

2. **உறாஅ தவர்கண்ட கண்ணும் அவரைச்**
   **செறாஅரெனச் சேறிஎன் நெஞ்சு !**

என் நெஞ்சே! நம்மேல் அன்பு கொள்ளாத காதலரைக் கண்டபோதும், அவர் வெறுக்கமாட்டார் என்று எண்ணி அவரிடம் செல்கின்றாயே! 1292

3. **கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ**
**பெட்டாங்கு அவர்பின் செலல் ?**

நெஞ்சே! நீ உன் விருப்பத்தின் படியே அவர் பின் செல்வதற்குக் காரணம், துன்பத்தால் அழிந்தவர்க்கு நண்பர் இல்லை என்னும் எண்ணமோ? 1293

4. **இனிஅன்ன நின்னோடு சூழ்வார்யார் நெஞ்சே**
**துனிசெய்து துவ்வாய்காண் மற்று?**

நெஞ்சே! நீ ஊடலைச் செய்து அதன் பயனை நுகர மாட்டாய்; இனிமேல் அத்தகையவற்றைப்பற்றி உன்னோடு கலந்து எண்ணப் போகின்றவர் யார்? 1294

5. **பெறாஅமை அஞ்சும்: பெறின்பிரிவு அஞ்சும்:**
**அறாஅ இடும்பைத்துஎன் நெஞ்சு.**

(காதலரைப் பெறாதபோது) பெறாமைக்கு அஞ்சும்; பெற்றால் பிரிவை நினைந்து அஞ்சும்; (இவ்வாறாக) என்நெஞ்சம் தீராத துன்பம் உடையதாகின்றது. 1295

6. **தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்**
**தினிய இருந்ததுஎன் நெஞ்சு.**

காதலரைப் பிரிந்து தனியே இருந்து அவருடைய தவறுகளை நினைத்தபோது என் நெஞ்சம் என்னைத் தின்பதுபோல் துன்பம் செய்வதாக இருந்தது. 1296

7. **நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்**
**மாணா மடநெஞ்சில் பட்டு.**

காதலரை மறக்கமுடியாத என்னுடைய சிறப்பில்லாத மடநெஞ்சினோடு சேர்ந்து.,மறக்கத் தகாததாகிய நாணத்தையும் மறந்துவிட்டேன். 1297

8. **எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்**
**உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு.**

உயிரின்மேல் காதல்கொண்ட என் நெஞ்சம், பிரிந்த காதலரை இகழ்ந்தால் இழிவாகும் என்று எண்ணி அவருடைய உயர்ந்த பண்புகளையே நினைக்கின்றது, 1298

9. **துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய**
**நெஞ்சம் துணையல் வழி?**

ஒருவர்க்குத் துன்பம் வந்தபோது, தாம் உரிமையாகப் பெற்றுள்ள நெஞ்சமே துணையாகாவிட்டால், வேறு யார் துணையாவார்? 1299

10. **தஞ்சம் தமர்அல்லர் ஏதிலார் தாம்உடைய**
**நெஞ்சம் தமர்அல் வழி**.

ஒருவர்க்குத் தாம் உரிமையாகப் பெற்ற நெஞ்சமே உறவாகாதபோது அயலார் உறவில்லாதவராக இருப்பது எளிதேயாகும். 1300

1. **புல்லாது இராஅப் புலத்தை அவர்உறும்**
**அல்லல்நோய் காண்கம் சிறிது**.

(ஊடும்போது அவர் அடைகின்ற) துன்பநோயைச் சிறிது காண்போம்; அதற்காக அவரைத் தழுவாமலிருந்து பிணங்குவாயாக. 1301

2. **உப்புஅமைந் தற்றால் புலவி: அதுசிறிது**
**மிக்கற்றால் நீள விடல்**.

உப்பு, உணவில் அளவோடு அமைந்திருப்பதைப் போன்றது ஊடல்; ஊடலை அளவுகடந்து நீட்டித்தல், அந்த உப்பு சிறிதளவு மிகுதியாக இருப்பதைப் போன்றது. 1302

3. **அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்**
**புலந்தாரைப் புல்லா விடல்**.

தம்மோடு பிணங்கியவரை ஊடலுணர்த்தித் தழுவாமல் விடுதல், துன்பத்தால் வருந்தியவரை மேலும் துன்பநோய் செய்து வருத்தினாற் போன்றது. 1303

4. **ஊடி யவரை உணராமை வாடிய**
**வள்ளி முதல்அரிந் தற்று**.

பிணங்கியவரை ஊடலுணர்த்தி அன்பு செய்யாமலிருத்தல், முன்னமே வாடியுள்ள கொடியை அதன் அடியிலே அறுத்தல் போன்றது. 1304

5. **நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை**
   **பூஅன்ன கண்ணார் அகத்து**.

நல்ல பண்புகள் அமைந்த நல்ல ஆடவர்க்கு அழகு, மலர் போன்ற கண்களை உடைய மகளிரின் நெஞ்சில் விளையும் ஊடலின் சிறப்பே ஆகும். 1305

6. **துனியும் புலவியும் இல்லாயின் காமம்**
   **கனியும் கருக்காயும் அற்று**.

பெரும்பிணக்கும் சிறுபிணக்கும் இல்லாவிட்டால், காமம் மிகப் பழுத்த பழமும் முற்றாத இளங்காயும் போல் பயன்படாததாகும். 1306

7. **ஊடலின் உண்டுஆங்கோர் துன்பம் புணர்வது**
   **நீடுவது அன்றுகொல் என்று**.

கூடியிருக்கும் இன்பம் இனிமேல் நீட்டிக்காதோ என்று ஏங்கி எண்ணுவதால் ஊடியிருத்தலினும் காதலர்க்கு ஒருவகைத் துன்பம் இருக்கின்றது. 1307

8. **நோதல் எவன்மற்று நொந்தார்என்று அஃதுஅறியும்**
   **காதலர் இல்லா வழி?**

நம்மால் இவர் வருந்தினார் என்று அந்த வருத்தத்தை அறிகின்ற காதலர் இல்லாதபோது, வருந்துவதால் பயன் என்ன? 1308

9. **நீரும் நிழலது இனிதே புலவியும்**
   **வீழுநர் கண்ணே இனிது**.

நீரும் நிழலை அடுத்திருப்பதே இனிமையானது; அதுபோல், ஊடலும் அன்பு செலுத்துவோரிடத்தில் கொள்வதே இன்பமானது. 1309

10. **ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்**
**கூடுவேம் என்பது அவா**.

ஊடல் கொண்டபோது உணர்த்தி மகிழ்விக்காமல் வாடவிடுகின்றவரோடு என் நெஞ்சம் கூடியிருப்போம் என்று முயல்வதற்குக் காரணம் அதன் ஆசையே. 1310

1. **பெண்இயலார் எல்லோரும் கண்ணின் பொதுஉண்பர்**
**நண்ணேன் பரத்தநின் மார்பு**.

பரத்தமை உடையாய்! பெண்தன்மை உடையவர் எல்லாரும் தம்தம் கண்களால் பொதுப் பொருளாகக் கொண்டு நுகர்கின்றார்கள்; ஆகையால் உன் மார்பைப் பொருந்தேன். 1311

2. **ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை**
**நீடுவாழ்க என்பாக்கு அறிந்து**.

காதலரோடு ஊடல் கொண்டிருந்தோமாக, யாம் தம்மை நெடுங்காலம் வாழ்க என்று வாய்திறந்து சொல்லுவோம் என நினைத்து அவர் தும்மினார். 1312

3. **கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்**
**காட்டிய சூடினீர் என்று**.

கிளைகளில் மலர்ந்த மலர்களைச் சூடினாலும் 'நீர் இந்த அழகை யாரோ ஒருத்திக்குக் காட்டுவதற்காகச் சூடினீர்' என்று சினம் கொள்வாள். 1313

4. **யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்**
**யாரினும் யாரினும் என்று**.

`யாரையும்விட நாம் மிக்க காதல் கொண்டிருக்கிறோம்` என்று சொன்னேனாக, யாரைவிட? யாரைவிட? என்று கேட்டு ஊடல் கொண்டாள். 1314

5. **இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்**
**கண்நிறை நீர்கொண் டனள்**.

`இப்பிறப்பில் யாம் பிரியமாட்டோம்` என்று காதலியிடம் சொன்னேனாக, இனி வரும் பிறப்பில் பிரிவதாக உணர்ந்து கண் நிறையக் கண்ணீர் கொண்டாள்., 1315

6. **உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றென்னைப்**
**புல்லாள் புலத்தக் கனள்**.

`நினைத்தேன்` என்று கூறினேன்; `நினைப்புக்கு முன் மறப்பு உண்டு அன்றோ? ஏன் மறந்தீர்? என்று என்னைத் தழுவாமல் ஊடினாள். 1316

7. **வழுத்தினாள் தும்மினே னாக அழித்துஅழுதாள்**
**யார்உள்ளித் தும்மினீர் என்று**.

யான் தும்மினேனாக அவள் `நூறாண்டு` என வாழ்த்தினாள்; உடனே அதைவிட்டு யார் நினைத்ததால் தும்மினீர்? என்று கேட்டு அழுதாள். 1317

8. **தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்**
**எம்மை மறைத்திரோ என்று**.

அவளுடைய ஊடலுக்கு அஞ்சி யான் தும்மலை அடக்கிக் கொள்ள`உம்மவர் உம்மை நினைப்பதை எமக்குத் தெரியாமல் மறைக்கின்றீரோ` என்று அழுதாள். 1318

9. **தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்**
**இந்நீரர் ஆகுதிர் என்று**.

ஊடியிருந்போது அவளை ஊடல் உணர்த்தி மகிழ்வித்தாலும், நீர் மற்ற மகளிர்க்கும் இத்தன்மையானவராக ஆவீர் என்று சொல்லிச் சினம் கொள்வாள். 1319

10. **நினைத்துஇருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்**
**யார்உள்ளி நோக்கினீர் என்று**.

அவளுடைய அழகை நினைத்து அமைதியாக இருந்து நோக்கினாலும், நீர் யாரை நினைத்து ஒப்புமையாக எல்லாம் பார்க்கின்றீர்? என்று சினம் கொள்வாள். 1320

1. **இல்லை தவறுஅவர்க்கு ஆயினும் ஊடுதல்**
**வல்லது அவர்அளிக்கு மாறு**.

அவரிடம் தவறு ஒன்றும் இல்லையானாலும், அவரோடு ஊடுதல், அவர் நம்மேல் மிகுதியாக அன்பு செலுத்துமாறு செய்யவல்லது., 1321

2. **ஊடலில் தோன்றும் சிறுதுனி நல்அளி**
   **வாடினும் பாடு பெறும்**.

ஊடுதலால் உண்டாகின்ற சிறிய துன்பம், காதலர் செய்கின்ற நல்ல அன்பு வாடிவிடக் காரணமாக இருந்தாலும் பெருமை பெறும். 1322

3. **புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு**
   **நீர்இயைந் தன்னார் அகத்து**?

நிலத்தோடு நீர் பொருந்திக் கலந்தாற்போன்ற அன்புடைய காதலரிடத்தில் ஊடுவதைவிட இன்பம் தருகின்ற தேவருலகம் இருக்கின்றதோ? 1323

4. **புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்என்**
   **உள்ளம் உடைக்கும் படை**.

காதலரைத் தழுவிக் கொண்டு விடாமலிருப்பதற்குக் காரணமான ஊடலுள், என்னுடைய உள்ளத்தை உடைக்க வல்ல படை தோன்றுகிறது. 1324

5. **தவறிலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்தோள்**
   **அகறலின் ஆங்குஒன்று உடைத்து**.

தவறு இல்லாதபோதும் ஊடலுக்கு ஆளாகித் தாம் விரும்பும் மகளிரின் மெல்லிய தோள்களை நீங்கி இருக்கும் போது ஓர் இன்பம் உள்ளது, 1325

6. **உணலினும் உண்டது அறல்இனிது: காமம்**
   **புணர்தலின் ஊடல் இனிது**.

உண்பதைவிட முன் உண்ட உணவு செரிப்பது இன்பமானது; அதுபோல் காமத்தில் கூடுவதைவிட ஊடுதல் இன்பமானது. 1326

7. **ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்**
**கூடலில் காணப் படும்**.

ஊடலில் தோற்றவரே வெற்றி பெற்றவர் ஆவர்; அந்த உண்மை, ஊடல் முடிந்தபின் கூடிமகிழும் நிலையில் காணப்படும். 1327

8. **ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்**
**கூடலில் தோன்றிய உப்பு**.

நெற்றி வியர்க்கும்படியாக கூடுவதில் உளதாகும் இனிமையை, ஊடியிருந்து உணர்வதன் பயனாக இனியும் பெறுவோமாக? 1328

9. **ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப**
**நீடுக மன்னோ இரா**.

காதலி இன்னும் ஊடுவாளாக; அந்த ஊடலைத் தணிக்கும் பொருட்டு யாம் இரந்து நிற்குமாறு இராக்காலம் இன்னும் நீட்டிப்பதாக. 1329

10. **ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்**.

காமத்திற்கு இன்பம் தருவது ஊடுதல் ஆகும்; ஊடல் முடிந்தபின் கூடித் தழுவப்பெற்றால் அந்த ஊடலுக்கு இன்பமாகும். 1330